# தமிழ்நாட்டுப் பழமொழிகள்

பத்தாயிரத்துக்கு மேற்பட்ட பழமொழிகள் அடங்கியது



தொகுத்தவர் :

**துர்க்காதாஸ் எஸ். கே. சாமி**



# பதிப்புரை

பத்தாயிரத்துக்கு மேற்பட்ட பழமொழிகளை (தமிழர்களின் பொன்மொழிகளை) தொகுத்து அகர வரிசைப்படுத்தித் தந்திருப்பவர் திரு. சூர்க்காதாஸ் எஸ். கே. சாமி அவர்கள். பழங்காலமாகச் சொல்வழக்கிலிருக்கும் இவ்வளவு பழமொழிகளை எப்படித்தான் சேகரித்தாரோ? அவருக்கு நாம் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம்.

பழமொழிகளில் சில வேடிக்கையாக இருப்பினும் அவை ஆழ்ந்த கருத்துக்களை அளிப்பனவாகவும் சில சிந்தையைக் குளிர்விப்பனவாகவும் சில சீர்திருத்தத்துக்குப் பயன்படுவனவாகவும் உள்ளன.

தமிழ் மக்கள் என்றும் போற்றிப் பாதுகாக்கக் கூடிய பழமொழிகளைத் தொகுத்து வெளியிடுவதில் உண்மையிலேயே பெருமை கொள்கிறேன். தமிழ் மக்கள் இதை மிக ஆர்வமுடன் வரவேற்பார்கள் என நம்புகிறேன். பண்புக்கு ஒவ்வாத பழமொழிகள் நூற்றுக் கணக்கில் உள்ளன. அவற்றைப் பகர்வதும் பதிப்பிப்பதும் நம் பண்புக்கு இழுக்கு என விட்டுவிட்டேன்.

அன்புள்ள,

ஏ. திருநாவுக்கரசு.

# தமிழ் நாட்டுப் பழமொழிகள்

அகத்தின் அழகு முகத்தில் தெரியும்.

அகத்திற்கு அழகு அகமுடையாள்.

அகதியைப் பகுதி கேட்பதா ?

அகதி பெறுவது பெண் பிள்ளை ; அதுவும் வெள்ளிப் பூராடம்.

அகதிக்குத் தெய்வமே துணை.

அகட விகடமாய்ப் பேசுகிறான்.

அகதியின் தலையில் பொழுது விடிந்தது.

அகதியின் சொல் அம்பலம் ஏறாது.

அகங்கையில் போட்டுப் புறங்கையை நக்கலாமா ?

அலைகமும் காசும் சிக்கெனத் தேடு.

அகத்தி ஆயிரம் காய்த்தாலும் புறத்தி புறத்தியே.

அகப்பட்டவனுக்கு அஷ்டமத்தில் சனி ; ஓடிப் போனவனுக்கு ஒன்பதாவது இடத்து ராஜா.

அகப்பட்டுக் கொள்வோம் என்று கள்ளன் களவு செய்வான் ?

அகப்பை குறைந்து விட்டால் கொழுப்பெல்லாம் அடங்கும்.

அகப்பை பிடித்தவன் நம்மவனானால் அடிப்பந்தியில் இருந்தால் என்ன ? கடைசிப் பந்தியில் இருந்தால் என்ன ?

அகம் ஏறச் சுகம் ஏறும்.

அகம் மலிந்தால் அஞ்சும் மலியும்.

அஞ்சும் சரியாக இருந்தால் அறியாப் பெண்ணும் கறி சமைப்பாள்.

அகன்று இருந்தால் நீண்ட உறவு; கிட்ட இருந்தால் முட்டப் பகை.

அகல இருந்தால் பகையும் உறவாகும்.

அகல உழுவதை விட ஆழ உழு.

அகல் வட்டம் பகல் மழை.

அகவிலே அறியாதவன் துக்கம் அறியான்.

அகழியில் விழுந்த முதலைக்கு அதுவே வைகுண்டம்.

அகாரியத்தில் பகீரதப் பிரயத்தனம் செய்கிறான்.

அக்கிரமக்காரன் முகத்தில் விழியாதே.

அகோர தபசி விபரீத சோரன்.

அகோர தபசி விபரீத நிபுணன்.

அக்காள் உடைமை அரிசி; தங்கச்சி உடைமை தவிடா?

அக்கரைப் பாகலுக்கு இக்கரை கொழு கொம்பு.

அக்கரை மாட்டுக்கு இக்கரை பச்சை.

அக்கரை தீர்ந்தால் அக்கா புருஷன் என்ன கொக்கா?

அக்கண்ணா, அரியண்ணா, உனக்கு வந்த விதியென்ன?

அக்காடு வெட்டிப் பருத்தி விதைக்கிறேன் என்றால் "அப்பா எனக்கொரு துப்பட்டி" என்றான் பிள்ளை; அதற்கு அப்பன் "கைகால் பட்டு கிழிந்து போகப்போகிறது பத்திரமாய் மடித்து பெட்டியில் வை" யென்றானாம்!

அக்காடு வெட்டிப் பருத்தி விதைத்தால் 'அப்பா! முழுச் சிற்றாடை யென்றாளாம்'—பெண்.

அக்காள் இருக்கிற வரையில் தான் மச்சான் உறவு.

அக்காள் உறவும் மச்சான் பகையுமா?

அக்காளைக் கொண்டால் தங்கையை முறை கேட்பானேன்?

அக்காளைப் பழித்துத் தங்கை தனிவழி போனாளாம்.

அக்கினித் தேவனுக்கு அபிஷேகம் செய்ததுபோல இருக்கிறான்.

அக்கினிப் பந்தலில் வெண்ணெய்ப் பதுமை ஆடுமா?

அக்கினியைத் தின்று ஜீரணிக்கிற பிள்ளை—அல்லித் தண்டைத் தின்பதில் என்ன அதிசயம்!

அக்கினியாற் சுட்ட புண் விஷங் கக்குமா ?

அக்குத் தொக்கு இல்லாதவனுக்குத் துக்கம் ஏது ?

அக்குத் தொக்கில்லாதவன் ஆண்மையும், மிக்க துக்கப் படாதவன் வாழ்வும், வெட்கஞ் சிக்கில்லாதான் தோஷ மும், நாய் கக்கி நக்கித் தின்னத்துக்கு ஒக்கும்.

அக்கிரஹாரத்து நாய்க்குக்கூட அகவிலை தெரியும்.

அக்கினி மலையிலே கர்ப்பூர பாணத்தைத் தொடுத்தது போல.

அதற்கெல்லாம் குறைவில்லை ஆட்டடா பூசாரி.

அங்கத்தைக் கொண்டு ஆற்றிலே அலசினாலும் தோஷம் போகாது'

அங்கே பார்த்தால் ஆடம்பரம் ; இங்கே பார்த்தால் கஞ்சிக்கு சாவு !

அங்காடி விலையை அதிர அடிக்காதே.

அங்காடிக்காரியைச் சங்கீதம் பாடச் சொன்னால் வெங்காயம், கருவேப்பிலை' என்று பாடுவாள்.

அங்கும் இருப்பான், இங்கும் இருப்பான்; ஆக்கின சோற்றுக் குப் பங்கும் இருப்பான்.

அங்கும் தப்பி, இங்கும் தப்பி, அகப்பட்டுக் கொண்டாரையா திம்மட்டிப் பட்டர்.

"அங்கேண்டீ மகளே கஞ்சிக்குச் சாகிறே ; இங்கு வாடீ மகளே காற்றாய்ப் பறக்கலாம்."

அவனுக்கும் இவனுக்கும் அஜ கஜாந்தரம்.

அசடுக்கு வாழ்க்கைப்பட்டு அறுபது வருஷம் வாழ்வதைவிட, சமத்துக்கு வாழ்க்கைப்பட்டு, சட்டென்று தாலியறுப் பதே மேல்.

அயலான் உடைமைக்கு பேயாய்ப் பறக்கிறான்.

அயல் வீட்டுப்பிள்ளை ஆபத்துக்கு உதவுமா?

அங்கே போனேனோ, செத்தேனோ!

அசல் வாழ்ந்தால் அஞ்சுநாள் பட்டினி கிடப்பான்.

அசல் வீட்டுப் பையா பாம்பைப் பிடி—அது அல்லித் தண்டு போல குளிர்ந்திருக்கும்.

அசைபோட்டுத் தின்பது மாடு ; அசையாமல் விழுங்குவது வீடு.

அசைபோட ஏதாவது இருந்தால் அவனு நகருவான்?

அச்சம் அற்றவன் அம்பலம் ஏறுவான் !

அச்சம் ஆண்மையைக் குறைக்கும்.

அச்சாணி போன்றதோர் சொல்.

அச்சில்லாத தேர் ஓடுமா? அகமுடையான் இல்லாதவள் பிள்ளை பெறவும் கூடுமா ?

அச்சாணி இல்லாத தேர் முச்சாணும் ஓடாது

அஞ்சலியும் வந்தனமும் யாருக்கு நன்மை.

அஞ்சனக்காரன் முதுகிலே வஞ்சனைக்காரன் ஏறினன்.

அஞ்சாவது பெண் பிறந்தால் அரசனும் ஆண்டியாவான்.

அஞ்சில் வளையாதது ஐம்பதில் வளையுமா?

அஞ்சிலே பிஞ்சிலே கொஞ்சாமல், அறுபதுக்கு மேலே கொஞ்சினலும் அஞ்சிலே வளையாதது ஐம்பதில் வளையாது.

அஞ்சியவனைக் குஞ்சும் விரட்டும்.

அஞ்சு காசுக்குக் குதிரையும் வேண்டும். அது ஆறு கடக்கப் பாயவும் வேண்டும்.

அஞ்சி நடக்கிறவனுக்குக் காலமில்லை.

அஞ்சு வயசிலே அரசிலே செய்யப் போனவன் திரட்சியின் போது திரும்ப வந்தானும்.

அஞ்சு பேரல்லோ பத்தினிமார்; அஞ்சிலே இரண்டு பழுதில்லை.

அஞ்சு பணம் கொடுத்துக் கஞ்சித் தண்ணியா குடிப்பது?

அஞ்சும் இருக்குது நெஞ்சுக்குள்ளே; அதுவும் இருக்குது புத்திக் குள்ளே.

அஞ்சு பணம் கொடுத்து அடிக்கச் சொன்னானும்; பத்துப்பணம் கொடுத்து நிறுத்தச் சொன்னானும் !

அஞ்செழுத்தும் பாவனையும் அப்பனைப் போல !

அடக்கம் ஆயிரம் பொன் பெறும்.

அடக்கமே பெண்ணுக்கு அழகு.

அடக்கமுடைய பெண்ணுக்கு அழகு ஏன்?

அடக்குவாரற்ற கழுக்காணி.

அடக்கம் உடையார் அறிஞர்; அடங்காதார் கல்லாதவர்.

அடக்குவாரற்ற கழுக்காணியாகவும் கொட்டுவாரற்ற மேளத்தைப் போலவும் திரிகிறன்.

அடங்காத பாம்பிற்கு ராஜா மூங்கில் தடி.

அடங்காத பெண்சாதியால் அத்தைக்கும் நமக்கும் பொல்லாப்பு.

அடங்காத பிடாரியைப் பெண்டாக்கிக் கொண்டது போல—

அடங்காத மனைவியும், ஆங்கார புருஷனும்.

அடங்காத மாட்டுக்கு ராஜா மூங்கில் தடி.

அடாது செய்வான், படாது படுவான்.

அடா என்பான், வெளியே புறப்படான்.

அடி அதிரசம் ; குத்து கொழுக்கட்டை.

அடி என்பதற்குப் பெண்சாதி யில்லை, அஷ்ட புத்திர வெகு பாக்கிய நமஸ்து.

அடி உதவுவது போல அண்ணன் தம்பி உதவமாட்டார்கள்.

அடிக்க அடிக்கப் பந்து எழும்பும்.

அடி என்கிற மந்திரியுமில்லை ; பிடி என்கிற ராஜனும் இல்லை.

அடி ஓட்டையாக இருந்தாலும் கொழுக்கட்டை வேக வேண்டும்.

அடிக்கிற காற்றுக்கும் பெய்கிற மழைக்கும் பயப்படு.

அடிக்கும் ஒரு கை; அணைக்கும் ஒரு கை.

அடிக்கும் ஆயிரம் பொன் கொடுக்க வேண்டும்.

அடிக்கும் சரி, பிடிக்கும் சரி.

அடித்த இடத்தைக்கண்டு பிடிக்க ஆறுமாசம் ஆகும்.

அடித்தது ஆட்டம் பிடித்தது பெண்டு.

அடித்தாலும் புருஷன், அணைத்தாலும் புருஷன்.

அடித்துப் பழுத்ததும் பழமாகுமா?

அடித்துப் பால் புகட்டுவதா?

அடித்து வளர்க்காத பிள்ளையும் முறுக்கி வளர்க்காத மீசையும் ஒழுங்காகாது.

அடி நொச்சி ; நுனி ஆமணக்கா?

அடி நாக்கிலே நஞ்சும் நுனி நாக்கில் அமிர்தமுமா ?

அடித்தவன் பின்னாலே போனாலும் போகலாம்; பிடித்தவன் பின்னாலே போகக் கூடாது.

அடிப்பானேன், பிடிப்பானேன் அடக்குகிற வழியில் அடக்கினால் போகிறது.

அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்.

அடியற்ற பனைமரம் போல வீழ்ந்தான்,

அடியாத மாடு படியாது.

அடியிலுள்ளது நடுவுக்கும் முடிவுக்கும் உண்டு.

அடியும் நுனியும் தறித்த கட்டையைப் போல.

அடியும் பட்டுவிட்டு, புளித்த மாங்காயா தின்ன வேண்டும் ?

அடியைப் பிடியடா, பாரதப் பட்டா.

அடியொட்டி யல்லவா கரணம் போடவேண்டும்.

"அடியென்று அழைக்க பொண்டாட்டி இல்லை. பெண் எத்தனை பிள்ளை எத்தனை?" என்கிறான்.

அடி வானங்கறுத்தால் ஆண்டை வீடு வறுக்கும்,

அடிவயிற்றிலே இடி விழுந்தாற் போல.

அடுக்களைக் கிணற்றில் அமுதம் எழுந்தாற் போல.

அடுக்களைக்கு ஒரு பெண்ணும் அம்பலத்திற்கு ஒரு ஆணும் இருக்கிறது என்றான்.

அடுக்களைப் பூனை இடுக்கிலே ஒளியும்.

அடுக்களைக் குற்றம் துருப்பால் குழைந்தது, அகமுடையான் குற்றம் பெண்ணைப் பிறந்தது.

அடுக்களைப் பெண்ணுக்கு அழகு எதற்கு?

அடுக்குகிற வருத்தம் உடைக்கிற நாய்க்குத் தெரியுமா?

அடுத்தது காட்டும் பளிங்குபோல (நெஞ்சில்) கடுத்தது காட்டும் முகம்.

அடுத்தவரை ஒருபோதும் கெடுக்கலாகாது.

அடுத்த வீட்டுக்காரி பிள்ளை பெற்றாள் என்று அம்மிக்குழவி யெடுத்து இடித்துக் கொண்டாளாம்.

அடுத்தாரைக் கெடுத்து அன்னம் இட்டார் வீட்டில் கன்னம் இடுகிறான்.

அடுத்து அடுத்துச் சொன்னால் தொடுத்த காரியம் முடியும்.

அடுத்துக் கெடுப்பான் கபடன்; கொடுத்துக் கெடுப்பான் மார்வாடி; தொடுத்துக் கெடுப்பாள் மடந்தை !

அடுத்து வந்தவருக்கு ஆதரவு சொல்வான் குரு.

அடுப்பனலில் வெண்ணெயை காய்ச்சுவது போல.

அடுப்பு எரிந்தால் தானே பொரி பொரியும்.

அடுப்பு நெருப்பும் போச்சு ; வாய்த்த மனைவியும் போனாள் !

அடுத்த வீட்டுக்காரனுக்கு அதிகாரம் வந்தால், அண்டை வீட்டுக்காரனுக்கு இரைச்சல் லாபம்.

அடுத்த வீட்டுக்காரனுக்கு உத்தியோகம் வந்தால், அண்டை வீடு குதிரை லாயம்.

அடுத்து முயன்றாலும் ஆகும் நாளில்தான் ஆகும்.

"அடே அத்தான், அத்தான்! அம்மான் பண்ணினாற்போல இருக்கவில்லையடா?"

அடைப்பட்டுக் கிடக்கிறான் செட்டி; அவனை அழைத்து வா, பணம் பாக்கி என்கிறான் பட்டி.

அடைப்பைப் பிடுங்கினால் பாம்பு கடிக்கும்.

அடைமழை விட்டும் கொடிமழை விடவில்லை.

அடை மழையிலே ஆட்டுக்குட்டி செத்ததுபோல

அஷ்ட தரித்திரம் தாய்வீடு; அதிலும் தரித்திரம் மாமியார் வீடு.

அஷ்ட தரித்திரம் பிடித்தவன் அமராவதியில் வாழ்கிறான் என்று நித்திய தரித்திரன் நட்டுக் கொண்டு செத்தானாம்.

அட்டமத்துச் சனியன் கிட்ட வந்தது போல.

அட்டமத்துச் சனியன் நட்டம் வரச்செய்யும்.

அட்டமத்துச் சனி வந்தால், பிட்டத்துத் துணியும் கிழிந்து போகும்.

அட்டமத்துச் சனியை வட்டிக்கு வாங்கினாற்போல,

அட்டாலும் பால் சுவையில் குன்றாது.

அட்டா துட்டிக் கொள்ளித்தேன்.

அட்டைக்கு திருப்தியில்லை; அக்கினிக்கு திருப்தியில்லை.

அட்டையை எடுத்து மெத்தையில் வைத்தாலும் செத்தையை செத்தையே நாடும்.

அணி பூண்ட நாயைப் போல.

அணிலை ஏறவிட்டு நாய் பார்ப்பது போல.

அணில் நொட்டினதும் தென்னைமரம் வீழ்ந்ததும்.

அணு மகா மேரு ஆகுமா?

அணியத்திலே கிழிஞ்சாலும் கிழிஞ்சுது; அமரத்திலே கிழிஞ்சாலும் கிழிஞ்சுது.

அணில் ஊணும் ஆமை நடையும்.

அணிற் பிள்ளைக்கு நுங்கு அரிதோ, ஆண்டிச்சி பிள்ளைக்கு சோறு அரிதோ?

அணுவும் மலையாச்சு, மலையும் அணுவாச்சு.

அணைகடந்து போனவெள்ளம் அழுதாலும் வராது.
அணைகடந்த வெள்ளத்தைத் தடுப்பது யார் ?
அண்டங் காக்காய் குழறுவதைப்போல.
அண்டத்தில் இல்லாததும் பிண்டத்தால் உண்டா ?
அண்டத்திற்கு உள்ளது பிண்டத்திற்கும் உண்டு.
அண்டத்துக்கு ஒத்தது பிண்டத்துக்கு.
அண்டத்தைச் சுமக்கிறவனுக்கு சுண்டைக்காய் ஒரு பாரமா?
அண்டத்தை கையில் வைத்து ஆட்டும் பிடாரிக்கு சுண்டைக்காய் எடுப்பதும் பாரமா ?
அண்ட நிழலில்லாமற் போனாலும் பேர் என்னவோ ஆலால விருட்சம்.
அண்டை அயலைப் பார்த்துப் பேசு.
அண்டர் எப்படியோ, தொண்டரும் அப்படியே !
அண்டாத பிடாரி யாருக்குத்தான் அடங்குவாள்.
அண்டைமேலுள்ள கோபத்தை ஆட்டுக்கிடாவின் மேல் காட்டியதைப் போல
அண்டையில் சமர்த்தன் இல்லாத ராஜாவுக்கு அபகீர்த்தி வரும்.
அண்டை வீட்டுக் கடனும் பிட்டத்து சிரங்கும் ஆகாது.
அண்டை வீட்டுச் சண்டை கண்ணுக்குக் குளிர்ச்சி.
அண்டை வீட்டு மீனாட்சிக்கும் அடுத்த வீட்டுக் காமாட்சிக்கும் என்ன கவலை ?
அண்டைவீட்டுப் பார்ப்பான் சண்டைமூட்டித் திரிவான்.
அன்னனூர் சேனையிலே அள்ளி உண்ணப் போனாள்.
அண்ணனிடத்தில் ஆறுமாதம் வாழ்ந்தாலும அண்ணியிடத்தில் அரை நாழிகை வாழலாமா ?
அண்ணனுக்குத் தம்பி அல்ல வென்று போகுமா ?
அண்ணனுக்குப் பெண் பிறந்தால் அத்தை அசல் நாட்டாள்.
அண்ணனைக் கொன்ற பழியைச் சந்தையில் தீர்த்துக் கொள்வது போல
அண்ணன் உண்ணாதது எல்லாம் மைத்துனிக்கு லாபம்.
அண்ணன் கொம்பு பம்பள பணைச்சு.
அண்ணன் சம்பாதிப்பது, தம்பி அரைஞாணுக்குக் கூடப் போதாது.

அண்ணன் தம்பிதான் ஜென்மப் பகை.

அண்ணன்தான் கூடப் பிறந்தான், அண்ணியுமா கூடப் பிறந்தாள்?

அண்ணன் பெரியவன், அப்பா காலைப்பிடி.

அண்ணன் மேலிருந்த கோபத்தை நாய் பேரில் ஆற்றினான்.

அண்ணாக்கும் தொண்டையும் அதிர அடைத்தது போல.

அண்ணன் நங்கை அப்சாஸ்திரீ.

அண்ணா வாரும் சண்டையை ஒப்புக்கொள்ளும்.

அண்ணாமலையார் அருளுண்டானால் மன்னார்சாமி மயிரைப் பிடுங்குமா?

அண்ணாவி பிள்ளைக்குப் பணம் பஞ்சமா? அம்பட்டன் பிள்ளைக்கு மயிர் பஞ்சமா?

அண்ணாவுக்கு மனதும் வரவேண்டும், மதனி பிள்ளையைப் பெற வேண்டும்.

அதமனுக்கு ஆயிரம் ஆயுசு.

அதிக ஆசை அதிக நஷ்டம்.

அதிக கரிசனமானாலும் அகமுடையானை அப்பா என்று அழைப்பது?

அதிகாரம் இல்லாவிட்டாலும் பரிவாரம் வேண்டும்.

அதிகாரியுடன் எதிர் வாதஞ் செய்யாதே!

அதிகாரியும் தலையாரியும் கூடி விடியுமட்டும் திருடினார்கள்.

அதிகாரி வீட்டில் திருடி தலையாரி வீட்டில் ஒளித்து வைத்தது போல

அதிகாரி வீட்டுக் கோழி முட்டை குடியானவன் வீட்டு அம்மிக்கல்லை உடைக்குமாம்.

அதிக்கிரமமான ஊரிலே கொதிக்கிற மீனும் சிரிக்குமாம்.

அதிசயமான ரம்பை அரிசி கொட்டுகிற தொம்பை.

அதியாக்குறியால் கருமறிப் பாய்ச்சல்.

அதிர அடித்தால் உதிர விளையும்.

அதிர அடித்தாருக்கு ஐயருமில்லை, பிடாரியுமில்லை.

அதிர்ஷ்டம் ஆறாய்ப் பெருகுகிறது.

அதிர்ஷ்டம் இருந்தால் அரசு பண்ணலாம்.

அதிர்ஷ்டமும் ஐசுவரியமும் ஒருவர் பங்கல்ல,

அதிர்ஷ்டம் இல்லாதவனுக்கு கலப்பால் கிடைத்தாலும் அதையும் பூனை குடிக்கும்.

அதிர்ஷ்டம் கெட்டவனுக்கு அறுபது நாழிகையும் தியாஜ்ஜியம்.

அதிர்ஷ்டக்காரன் மண்ணைத் தொட்டாலும் பொன்னாகும்.

அதிலே குறைவில்லை ஆட்டடா பூசாரி.

அதிலேயும் புதுமை அவள் செத்தது மெத்த அருமை.

அதன் கையை எடுத்தே அதன் கண்ணைக் குத்த வேண்டும்.

அது அதற்கு ஒரு கவலை, ஐயாவிற்குப் பத்துக் கவலை.

அதுவும் போதாதென்று அழலாமா இனி.

அதுக்கிட்ட காசு தண்டம்.

அதைக் கைகழுவ வேண்டியதுதான்.

அதை நான் செய்யாமற் போனால் என் மீசையை எடுத்து விடுகிறேன்.

அதைரியமுள்ளவனை அஞ்சாத வீரன் என்பது போல.

அதை விட்டாலுங் கதியில்லை; அப்புறம் போனாலும் விதியில்லை.

அஸ்த செவ்வானம் அடைமழைக்கு லக்ஷணம்.

அத்தனையும் செய்தாள் உப்பிட மறந்தாள்.

அத்தான் செத்தால் மயிராச்சு, கம்பளி மெத்தை நமக்காச்சு.

அத்தி பூத்தாற் போல இருக்கிறது.

அத்திப் பழத்தைப் பிட்டுப் பார்த்தால், அத்தனையும் புழுவாக இருக்கும்.

அத்திப்பூவை யார் பார்த்தார்கள் ?

அத்தி மரத்திலே தொத்திய கனியைப்போல்

அத்திப் பூவைக் கண்டது யார், ஆந்தைக் குஞ்சைக் கண்டவர் யார் ?

அஸ்தியிலே ஜுரம்.

அத்துமீறிப் போனான் பித்துக்கொள்ளியானான்.

அத்தைக்கு மீசை முளைத்தால் சித்தப்பா.

அத்தைத்தான்சொல்வானேன் வாயைத்தான் வலிப்பானேன்?

அத்தைமகள், அம்மான் மகள் சொந்தம் போல

அத்தை மகளானாலுஞ் சும்மா கிடைப்பாளா ?

அந்தோடே நின்னுது அலைச்சல், கொட்டோடே நின்னுது குலைச்சல்.

அந்த ஊர் மண்ணை மிதித்தவுடனேயே தன்னை மறந்து விட்டான்.

அந்தணர்க்குத் துணை வேதம்.

அந்தணர் மனையில் சந்தனம் மணக்கும்.

அந்தப் பருப்பு இங்கே வேகாது.

அந்தம் சிந்தி அழகு அழிகிறது.

அந்தரத்தில் கோலை எறிந்த அந்தகனைப் போல.

அந்தலை கெட்டு சிந்தலை மாறிக் கிடக்கு.

அந்த வெட்கக்கேட்டை யாரோடு சொல்லி அழுவது ?

அந்தி ஈசல் பூத்தால் அடைமழை அதிகரிக்கும்.

அந்திப்பீ சந்திப்பீ பேலத்தான் வாழ்க்கை சாமப்பீ தட்டி யெழுப்பும்.

அந்தி மழை அழுதாலும் விடாது.

அந்து கண்ணிக்கு அழுதாலும் வாராளும் ஆமுடையான்.

அபத்தப் பஞ்சத்துக்கு அறுபது நாழியும் தியாச்சியம்.

அப்பச்சி குதம்பையைச் சூப்பப் பிள்ளை தேங்காய்க்கு அழுவதைப்போல

அப்பச்சி கோவணத்தை பருந்துகொண்டு ஓடுகிறது, பிள்ளை வீரவாளிப்பட்டுக்கு அழுவதா?

அப்பத்தை எப்படித்தான் சுட்டாளோ, தித்திப்பை எப்படித் தான் நுழைத்தாளோ ?

அப்பம் சுட்டது சட்டியில், அவல் இடித்தது திட்டையில்.

அப்பன் அருமை அப்பன் மாண்டால் தெரியும்; உப்பின் அருமை உப்பில்லாவிட்டால் தெரியும்.

அப்பன் செத்தபின் தம்பிக்கா அழுவது.

அப்பன் சோற்றுக்கு அழுகிறான்; பிள்ளை கும்பகோணத்தில் கோதானஞ் செய்கிறானும்.

அப்பா அப்பா என்றால் ரங்கா ரங்கா என்பான்.

அப்பா என்றால் உச்சி குளிருமா ?

அப்பாவி உப்பில்லை.

அப்பிடாவுமில்லை வெட்டுக் கத்தியும் இல்லை.

அப்பியாசம் குல விருது.

அப்பியாசம் கூசா வித்தை.

அப்பியாச வித்தைக்கு அழிவில்லை

அமரபட்சம் பூர்வபட்சம் கிருஷ்ணபட்சம் சுக்கிலபட்சம்.

அமரிக்கை ஆயிரம் பெறும்.

அமர்த்தனுக்கும் காணி வேண்டாம் ; சமர்த்தனுக்கும் காணி வேண்டாம்.

அமாவாசை கருக்கலில் பெருச்சாளி போனதெல்லாம் வழி.

அமாவாசைச் சோறு எப்பவும் கிடைக்குமா ?

அமிஞ்சிக்கு உழுதால் சரியாக விளையுமா ?

அமுக்கினாற் போல இருந்து அரணை அழிப்பான்.

அமுதம் உண்கிற வாயால் விஷத்தை உண்பார்களா ?

அமுதுபடி பூஜ்யம், ஆடம்பரம் சிலாக்கியம்.

அமைச்சனில்லாத அரசும் ஆமுடையான் இல்லாத ஆரிழையும்.

அம்பட்டக் கிருதாவும், வண்ணார ஒயிலும்.

அம்பட்டனை மந்திரித் தனத்துக்கு வைத்துக் கொண்டதைப் போல.

அம்பட்டன் குப்பையைக் கிளறினால் மயிர் மயிராக வரும்.

அம்பட்டன் கைக்கண்ணாடியைப்போல.

அம்பட்டன் பல்லக்கு ஏறியதைப் போல.

அம்பட்டன் பிள்ளைக்கு மயிர் அருமையா ?

அம்பட்டன் மாப்பிள்ளைக்கு மீசை ஒதுக்கியதைப்போல.

அம்பலக்கழுதை அம்பலத்தில் இருந்தாலென்ன அரண்மனையில் இருந்தாலென்ன ?

அம்பலத்திற்கேற வேண்டிய பேச்சை அடக்கம் பண்ணப் பார்க்கிறான்.

அம்பலத்தில் கட்டுச் சோற்றை அவிழ்த்தது போல.

அம்பலத்தில் பொதி அவிழ்க்கலாகாது.

அம்பலம் வேகுது !

அம்பா பாக்கியம் செம்பா விளைந்தது : பாவிபாக்கியம் பதிராக விளைஞ்சது.

அம்பாணி அழைத்தாற் போல பேசுகிறான்.

அம்பிகொண்டு ஆற்றைக் கடப்போர், நம்பிக்கொண்டு நரிவாலைக் கொள்வார்களா ?

அம்மணமும் இன்னலும் ஆயுசு பரியந்தமா ?

அம்மண தேசத்தில் கோவணம் கட்டியவன் பைத்தியம்.

அம்மா குதிர் போல ஐயா கதிர் போல.

அம்மா கெட்ட கேட்டுக்கு முக்காடு ஒரு கேடா ?

அம்மாளுக்குத் தமிழ் தெரியாது ஐயாவுக்கு தெலுங்கு தெரியாது.

அம்மானும் மருமகனும் ஒரு வீட்டுக்கு ஆள் அடிமை.

அம்மான் மகளுக்கு முறையா ?

அம்மா மிடுக்கோ அரைப்பவள் மிடுக்கோ.

அம்மான் வீட்டு வெள்ளாட்டியை அடிக்க அதிகாரியையா கேட்க வேண்டும் ?

அம்மி மிதித்து அருந்ததியைப்போல அல்லவா பேசுகிறாள்.

அம்மியுங் குழவியும் ஆகாசத்தில் பறக்கச்சே இலவம் பஞ்சு எனக்கென்ன கதி என்றதாம்.

அம்மை குத்தினாலும் பொம்மை குத்தினாலும் வேண்டியது அரிசி.

அம்மைக்கு அமர்க்களம் ஆக்கிப்படை ; எனக்கமர்க்களம் பொங்கிப்படை.

அம்மை வீட்டுத் தெய்வம் நம்மை விட்டுப் போமா ?

அம்மையாரே வாரும் கிழவனைக் கொள்ளும்.

அம்மையார் எப்பொழுது சாவார், கம்பளி எப்பொழுது நமக்கு மிச்சம் ஆகும்.

அம்மையார் நூற்கிற நூலுக்கும் பேரன் அரைஞாண் கயிற்றுக்குஞ் சரி.

அம்மையார் பெறுவது அரைக்காசு, அவள் தலைசிறைக்க முழுக்காசு.

அம்மையார்க்கு என்ன துக்கம் ; கந்தைத் துக்கம்.

அயலார் உடைமைக்கு ஆந்தையாய்ப் பறக்கிறான்.

அயலான் வாழப் பகலே சரக்கு எடுப்பது ?

அயலான் வீட்டுப் பிள்ளை ஆபத்துக்கு உதவுமா ?

அயல் வீட்டு நெய்யே, என் பெண்டாட்டி கையே !

அயன் இட்ட எழுத்தில் அணுவளவும் தப்பாது.

அயன் இட்ட கணக்கு யாருக்கும் தப்பாது.

அயோக்கியர் அழகு அபரஞ்சிச் சிமிழில் நஞ்சு.

அய்யன் அளந்த படி.

அய்யா, அய்யா, அம்மா குறைக் கேழ்வரகும் அறைக்க வரச் சொன்னாள்.

அய்யாசாமிக்குக் கல்யாணம் அவரவர் வீட்டிலே சாப்பாடு.

அய்யா தாசி கவனம் பண்ணி அஞ்சாளின் சுமையாச்சுது.

அய்யாத்துரைக்குக் கல்யாணம் அவரவர் வீட்டிலே சாப்பாடு; கொட்டுமுழக்கு கோயிலிலே; வெற்றிலை பாக்கு கடையிலே; சுண்ணாம்பு சூளையிலே.

அய்யா பாட்டுக்கு அஞ்சடியும் ஆறடியும் தாண்டும்.

அய்யா வீட்டுக் கூழுக்கு அப்பணயங்கார் தாதாவா ?

அரகரா என்பது பெரியதோ, ஆண்டிக்கு இடுவது பெரியதோ?

அரகரா என்பவனுக்குத் தெரியுமா, அமுது படைப்பவனுக்குத் தெரியுமா ?

அரக்கு முத்தி தண்ணீருக்குப் போனாளாம் ; புண் பிடித்தவன் பின்னாலே வந்தான்.

அரசன் ஆண்டால் என்ன, மனிதன் ஆண்டாலென்ன?

அரங்கின்றி வட்டாடலும் அறிவின்றிப் பேசுவதும் ஒன்று.

அரசனில்லாத படை வெட்டுமா ?

அரசனுக்கு ஒரு சொல் ; அடிமைக்குத் தலைச்சுமை.

அரசனுக்குத் துணை வயவாள்.

அரசனும் சரி பாம்புஞ்சரி.

அரசனுஞ் சரி நெருப்புஞ் சரி.

அரசனை நம்பிப் புருஷனைக் கைவிட்ட கதை.

அரசனைக் கண்ட கண்ணுக்குப் புருஷனைக் கண்டால் கொசுவைப் போலிருக்கும்.

அரசன் அன்று கொல்லும், தெய்வம் நின்று கொல்லும்,

அரசனில்லாத நாடு, புருஷனில்லாத வீடு.

அரசன் ஆட்சிக்கு ஆகாயவாணியே சாக்ஷி.

அரசன் எவ்வழி அவ்வழி குடிகள்.

அரசன் கல்லின்மேல் கத்தரிக்காய் காய்த்தது என்றால் 'கொத்து ஆயிரம் குலை ஆயிரம்' என்பார்கள்.

அரசன் குடுமியையும் பிடிக்கலாம் என்று அம்பட்டன் வேலையை விரும்புவது போல

அரசன் வழிப்பட்டதே அவனி.

அரசனில்லாப் படை வெல்லுவது அரிது.

அரசுக்கு இல்லை சிறுமையும் பெருமையும்

அரசுடையானை ஆகாயம் காக்கும்.

அரணை கடித்தால் அப்போதே மரணம்

அரணை அலகு திறக்காது.

அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்!

அரண்மனைக்கு ஆயிரஞ்செல்லும், குடியானவன் என்ன செய்வான்.

அரண்மனை காத்தவனுக்கும் அடுப்பங்கரை காத்தவனுக்கும் குறைவு இல்லை.

அரத்தை அரங்கொண்டும் வைரத்தை வைரங் கொண்டும் அறுக்க வேண்டும்

அரபுக்குதிரையை விட ஐயம்பேட்டைத் தட்டுவாணியே மேல்.

அரவைக் கண்டால் கீரி விடுமோ?

அரனருள் இல்லாமல் அணுவும் அசையாது.

அரிஹர பிரம்மாதிகளாலும் முடியாத காரியம்.

அரிசி என்று அள்ளுவாரும் இல்லை; உமியென்று ஊதுவாரும் இல்லை.

அரிசி ஆழாக்கு ஆனாலும் அடுப்புக்குக் கட்டை மூன்று வேண்டும்.

அரிசி உண்டானால் வரிசையுமுண்டு; அக்காள் உண்டானால் மச்சானும் உண்டு.

அரிசி கொடுத்து அக்காள் வீட்டிலென்ன சாப்பாடு.

அரிசிக்குத் தக்க உலையும் அகமுடையானுக்குத் தக்க வீராப்பும்.

அரிசிப்பகையும் அகமுடையான் பகையும் உண்டா?

அரிச்சந்திரன் வீட்டுக்கு அடுத்த வீட்டுக்காரன் அவன்.

அரிது அரிது ஐந்தெழுத்து உணர்தல்.

அரிய சரீரம் அந்தரத்தில் எறிந்த கல்.

அரியது செய்து எளியதுக்கு ஏமாந்து திரிகிறான்.

அரியுஞ் சிவனும் ஒண்ணு அறியாதவன் வாயிலே மண்ணு.

அரிவை மொழி கேட்டால் அறிஞனும் அபத்தன் ஆவான்.

அருக்காணி நாச்சியார் குரங்குப்பிள்ளை பெற்றாளாம்,

அருங்கொம்பில் தேனிருக்கப் புறங்கையை நக்கினால் வருமா ?

அருஞ்சுனை நீருண்டால் அப்போதே சுரம்.

அருணம்பரமே கருணம்பரம்.

அருமை யறியாதவன் இருந்தென்ன, இறந்தென்ன.

அருமை தெரியாதவனிடத்திற்குச் சென்றால் பெருமை யெல்லாம் குறைந்து போகும்.

அருமை மருமகன் தலைபோனாலும் பரவாயில்லை ஆதிகாலத்து உடுப்பில் போகக்கூடாது.

அரும்பு கோணினால் அதன் மணம் குன்றுமா ?

அருள் இல்லாருக்கு அவ்வுலகமில்லை ; பொருள் இல்லாருக்கு இவ்வுலகமில்லை.

அருள்வேண்டும். பொருள் வேண்டும், ஆகாயவாணி துணையும் வேண்டும்.

அரைக்காசுக்குப் போன கற்பு ; ஆயிரம் பொன் கொடுத்தாலும் மீண்டு வராது.

அரைக்காசுக்குப் போனம் மானம் ஆயிரம் கொடுத்தாலும் மீளாது.

அரைக்காசை ஆயிரம் ஆக்குவது பெண்சாதி, ஆயிரத்தை அரைக்காசு ஆக்குவதும் பெண்சாதி

அரைக்கிறவன் ஒன்றை நினைத்து அரைக்கிறான். குடிப்பவன் ஒன்றை நினைத்துக் குடிக்கிறான்.

அரைத்தாலும் சந்தனம் அதன் மணங் குன்றாது.

அரைக்குடம் ததும்பும் நிறைக்குடம் ததும்பாது.

அரைச்சீலையைக் கட்ட கைக்கு உபசாரமா?

அரைத்த பயிர் முளைத்தாற் போல.

அரைக் காசுக்கு அறுத்த மூக்கு ஆயிரம் பொன் கொடுத்தாலும் ஒட்டுமா ?

அரைக் காசுக்கு மலம் தின்பவன்.

அரைத்துட்டிலே கலியாணம், அதிலும் கொஞ்சம் பாண வேடிக்கை.

அரைத்ததும் மீந்தது அம்மி; சிரைத்ததும் மீந்தது குடுமி.

அரைப்பணம் கொடுக்கப் பால்மாறி, ஐம்பது பணம் கொடுத்து சேவை செய்த கதை.

அரைப்பணம் கொடுத்து அழச்சொல்லி விட்டு, ஒரு பணம் கொடுத்து ஓயச் சொல்வது போல.

அரைப்பணச் சேவகமானாலும் அரண்மனைச் சேவகம் போல ஆகுமா?

அரையிலே புண்ணும் அண்டையிலே கடனும் ஆகாது

அலுத்து வியர்த்து அக்காளண்டை போனால் அக்காள் இழுத்து மச்சானண்டை போட்டாள்.

அலைஅடங்கிய பின் ஸ்நானம் செய்ய முடியுமா?

அலை எப்போது ஓயும், தலை எப்போது முழுகுவது?

அலை கடலுக்கு அணைபோட முடியுமா?

அலை ஓய்ந்து கடலாடலாமா?

அலைபோதும் போதே தலை முழுக வேண்டும்.

அலை போல நாக்கும், மலைபோல மூக்கும், ஆகாயந் தொட்ட கையும அரக்கனுக்கு.

அலைவாய்த்துரும்பு போல அலைவது.

அல்லல்காட்டு நரி பல்லைக் காட்டிச் சிரித்ததாம்,

அல்லாதவன் வாயில் கள்ளைவார்.

அல்லாத வழியில் பொருள் ஈட்டல், காமந்துய்த்தல் ஆகியவை ஆகா.

அல்லலற்ற படுக்கையே அமைதியைத் தரும்.

அல்லவை தேய அருள் பெருகும்.

அல்லார் அஞ்சலிக்கு நல்லார் உதையே மேல்.

அல்லற்பட்டு அழுத கண்ணீர் செல்வத்தைக் குறைக்கும்.

அல்லும் பகலும் கசடறக் கல்.

அவசரக்காரனுக்குப் புத்தி மட்டு.

அவசரக் கோலம் அள்ளித் தெளித்தது போல.

அவசரத்திலும் உபச்சாரமா?

அவசரத்தில் குண்டுச் சட்டியிலும் கை நுழையாது.

அவசரத்துக்கு பாபமில்லை.

அவசரப்பட்ட மாமியார் மருமகனைக் கணவனென்று அழைத்தாளாம்.

அவதிக்குடிக்குத் தெய்வமே துணை.

அவமானஞ்செய்து வெகுமானம் கொடுப்பது போல.

அவரவர் எண்ணத்தை ஆண்டவன் அறிவான்.

அவரவர்மனசே அவரவர்க்குச் சாட்சி.

2

அவரவர் அக்கறைக்கு அவரவர் பாடுபடுவர்.
அவருடைய சிறகு முறிந்து போயிற்று.
அவலட்சணத் துரைக்குச் சுழி சுத்தம் பார்க்க வேண்டுமா?
அவலமாய் வாழ்பவன்; சவலமாய்ச் சாவான்.
அவலை நினைத்து உரலையா இடிக்கிறது.
அவலை முக்கித் தின்னு; எள்ளை நக்கித் தின்னு
அவளவள் என்பதைவிட அரி அரி என்பது புண்ணியம்.
அவளுக்கு ரொம்பத் தளுக்குத் தெரியும்.
அவளைக் கண்ட கண்ணாலே இன்னொருத்தியைக் காணுவதா ?
அவள் அழகுக்கு தாய் வீடு ஒரு கேடு.
அவள் அழகுக்கு ஆயிரம்பேர் வருவார்கள்: கண்ணைச் சிமிட்டினால் கால் லட்சம் பேர் மயங்குவார்கள்.
அவள் அழகைப் பார்த்தால் கிள்ளித் தின்றுவிடலாம் போலிருக்கிறது.
அவள் சமர்த்து பானைச் சந்தியில் கவிழ்ந்தது.
அவள் எமனைப் பலகாரம் பண்ணி, ஏழுவலம் வருவாள்.
அவள் சொல்தான் அவனுக்குத் தேவ வாக்கு.
அவள் பாடுவது குயில் கூவுவதைப் போல
அவள் பெயர் தங்கமாம் அவள் காதில் பிச்சோலையாம்.
அவள் பெயர் கூந்தலழகி அவள் தலை மொட்டை.
அவள் இடத்தில் எல்லோரும் பிச்சை வாங்கவேண்டும்.
அவனியில் இல்லை ஈடு; அவளுக்கு அவளே சோடு.
அவன் சாண் ஏறினால் முழம் சறுக்குது.
அவனுக்குச் சுக்கிரதிசை.
அவனுக்கு ஜெயில் தாய் வீடு.
அவனுக்கு பொய் சத்தியம் பால் சோறு!
அவனை உரித்து வைத்தது போல பிறந்திருக்கிறான்.
அவனே, இவனே என்பதைவிடச் சிவனே சிவனே என்பது மேல்.
அவனோடு இவனை ஏணி வைத்துப் பார்த்தாலும் காணாது.
அவன அசையாமல் அணுவும் அசையாது.
அவன் அதிகாரம் கொடிகட்டிப் பறக்கிறது.
அவன் அண்டை அந்தப் பருப்பு வேகாது.

அவன் செய்த வினை அவனைச் சாரும்.

அவன் மனமே அவனுக்குச் சாக்ஷி.

அவன் ஆகாயத்தை வடுப்படாமல் கடிக்கிறேன் என்கிறான்.

அவன் உள்ளெல்லாம் புண்; உடம்பெல்லாம் கொப்புளம்.

அவன் இட்டதே சட்டம்.

அவன் எங்கே இருந்தான்; நான் எங்கே இருந்தேன்.

அவன் எரி போரி என்று விழுகிறான்.

அவன் என் தலைக்கு உலை வைக்கிறான்.

அவன் ஒரு குளிர்ந்த கொள்ளி.

அவன் காலால் இட்ட வேலையைத் தலையால் செய்வான்.

அவன் கை மெத்த நீளம்.

அவன் சாதிக்கு என்ன புத்தியோ குலத்துக்கு எந்த ஆசாரமோ அதுவே வரும்.

அவன் சாயம் வெளுத்துப் போய்விட்டது.

அவன் சிறகில்லாத பறவை.

அவன் சோற்றுக்குத் தாளம் போடுகிறான்.

அவன் போட்டதே சட்டம்; இட்டதே பிச்சை.

அவன் தலையில் ஓட்டைக் கவிழ்ப்பான்.

அவன் தன்னாலே தான் கெட்டால் அண்ணாவி என்ன செய்வார்.

அவன் நா அசைந்தால், நாடு அசையும்.

அவன் பசையாமல் கஞ்சி குடிக்கிறான்.

அவன் பூராயமாய்ப் பேசுகிறான்.

அவன் பேசுவதெல்லாம் தில்லுமல்லும் திருவாதிரை.

அவன் பேச்சு விளக்கெண்ணெய் சமாச்சாரம்.

அவன் மிதித்த இடத்தில் புல்லும் முளைக்காது.

அவன் நின்ற இடம் ஏழுசாண் வெந்து, இருபது சாண் நீராகும்.

அவன் மிதித்த இடம் பற்றி எரிகிறது.

அவன் மூத்திரம் விளக்காய் எரிகிறது.

அவன் மெத்த பேச்சுக்காரன்.

அவன் ரொப்ப வைதிகமாகப் பேசுகிறான்.

அவன் வல்லாள கண்டனை வென்றவன்.

அவிழ்க்கும் என்ன செய்யும் ஐந்து குணஞ் செய்யும், பணம் என்ன செய்யும் பூவை வசஞ்செய்யும்.

அவ்வளவும் இருந்தால் அடுக்கிவைத்து வாழ்வேன்.

அழ அழச் சொல்வார் தன் மனிதர் சிரிக்கச் சிரிக்கச் சொல்வார் பிறர்.

அழகிருந்தால் என்ன ; அதிர்ஷ்டம் அல்லவா வேண்டும்.

அழகிலே பிறந்த பவளக்கொடி, ஆற்றிலே மிதந்த சாணிக் கூடை.

அழகிற்கு மூக்கை அழித்துவிட்டால்.

அழகு ஒழுகுது, மடியிலே கட்டடி கலயத்தை.

அழகு இருந்து அழும் : அதிர்ஷ்டம் இருந்து உண்ணும்.

அழகுக்கு இட்டால் ஆபத்துக்கு உதவும்.

அழகு சொட்டுகிறது.

அழகு சோறு போடுமா, அதிர்ஷ்டம் சோறு போடுமா ?

அழகுப் பெண்ணே காத்தாயி, அழைக்கிறாண்டீ கூத்தாடீ !

அழச் சொல்லுகிறவன் பிழைக்கச் சொல்லுவான். சிரிக்கச் சொல்லுகிறவன் கெடச் சொல்லுவான்.

அழித்துக் கழித்துப் போட்டு 'வழித்துநக்கி' என்று பெயரிட்டானும்.

அழிந்து போன கொல்லையிலே கழுதை மேய்ந்தாலென்ன ? குதிரை மேய்ந்தாலென்ன ?

அழிந்தவள் யாரோடு போனால் என்ன ?

அழிந்து பழஞ் சோறாய்ப் போச்சு.

அழி வழக்குச் சொன்னவன், பழி பொறுக்கும் மன்னவன்.

அழுகள்ளன் தொழுகள்ளன் ஆசாரக் கள்ளன்.

அழுகிற ஆணையும் சிரிக்கிற பெண்ணையும் நம்பப்படாது.

அழுகிற பிள்ளைக்கு வாழைப்பழம் காட்டுகிறது போல.

அழுகிற வீட்டில் இருந்தாலும் ஒழுகிற வீட்டில் இருக்காதே.

அழுகிற வேளையைப் பார்த்து அக்குளில் பாய்ச்சுகிறான்.

அழுகை ஆங்காரத்தின் மேலும் சிரிப்பு கெலிப்பின் மேலும் தான்.

அழுகையும் ஆங்காரமும் சிரிப்பும் கெலிப்போடேதான்.

அழுக்கை அழுக்குக் கொல்லும் இழுக்கை இழுக்கு கொல்லும்.

அழுக்கைத் துடைத்து மடிக்குள் வைத்தாலும் பழுக்கைக் குணம் போகாது

அழுத கண்ணும் சிந்திய மூக்கும்.

அழுத பிள்ளை உரம் பெறும்.

அழுத பிள்ளை பால் குடிக்கும்.

அழுத பிள்ளையும் சிரித்ததாம், கழுதைப் பாலைக் குடித்ததாம்.

அழுத பிள்ளையும் வாய்மூடும் அதிகாரம்.

அழுதாலும் பிள்ளை அவளே பெறவேண்டும்.

அழுதவனுக்கு அகங்காரம் இல்லை.

அழுத்த நெஞ்சன் ஆருக்கும் உதவான், இளகின நெஞ்சன் எவர்க்கு முதவுவான்.

அழுவார் அற்றப் பிணமும் சுடுவார் அற்றச் சுடலையும்.

அழையாத வீட்டிற்கு நுழையாத சம்பந்தி.

அளகாபுரி கொள்ளையானாலும் அதிருஷ்ட ஈனனுக்கு ஒன்று மில்லை.

அளகாபுரியிலும் விறகு தலையன் உண்டு.

அளகேசன் ஆனாலும் அளவு அறிந்து செலவு செய்யவேண்டும்.

அளக்கிற நாழி அளவு அறியுமா ?

அளந்த அளந்த நாழி வழிந்து வழிந்து வரும்.

அளந்தால் ஒரு சாணில்லை, அரிந்தால் ஒரு சட்டி காணாது,

அளவிட்டவரைக் களவிடலாமா ?

அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் விஷமாகும்.

அள்ளாது குறையாது சொல்லாது பிறவாது.

அள்ளிக் குடிக்கத் தண்ணீரில்லை அவள்பேர் கங்காதேவி.

அள்ளிக் கொடுத்தால் சும்மா, அளந்து கொடுத்தால் கடன்.

அள்ளிக் கொண்டு போகச்சே கிள்ளிக்கொண்டு வருகிறான்.

அள்ளிப்பால் வார்க்கையிலே சொல்லிப்பால் வார்த்திருக்குது.

அள்ளுகிறவன் இடத்தில் இருந்தாலும் கிள்ளுகிறவனிடத்தில் இருக்கலாகாது.

அள்ளுவது எல்லாம் நாய் தனக்கென்று எண்ணுமாம்.

அறக்கப்பறக்கப் பாடுபட்டாலும் படுக்கப்பாயில்லை.

அறக்குழைத்தாலும் குழைப்பாள், அரிசியாய் வைத்தாலும் வைப்பாள்,

அறக்கூர்மை முழு மொட்டை.

அற நனைந்தவருக்குக் குளிர் எங்கே வந்தது ?

அறப்பத்தினி அகமுடையானை அப்பா என்று அழைத்தாளாம் !

அறப்படித்த பூனை காடிப்பானையில் தலையை விடும்.

அறப் படித்தவன் அங்காடி போனால் விற்கவும் மாட்டான், வாங்கவும் மாட்டான்.

அறப்படித்தவர் கூழ்ப்பானையில் விழுவாராம்.

அறப்பேசி உறவாட வேண்டும்.

அறவடிக்குமுன் சோறு கஞ்சிப்பானையில் விழுந்தாற்போல.

அறிஞருக்கு அழகு அகத்துணர்ந்து அறிதல்.

அறிந்த பார்ப்பான் சிநேகிதன், ஆறுகாசுக்கு மூன்று தோசையா ?

அறிந்தவன் என்று கும்பிட அடிமை வழக்கிட்ட கதை.

அறிந்து அறிந்து செய்கிற பாவத்தை அழுது அழுது தொலைக்க வேண்டும்.

அறிந்தும் கெட்டேன், அறியாமலும் கெட்டேன் சொறிந்து புண்ணாயிற்று.

அறிந்து அறிந்து கெட்டவர் உண்டா ?

அறியாமல் தாடியை வளர்த்து அம்பட்டன் கையில் கொடுக்கவா ?

அறிவில்லார் சிநேகிதம் அதிக உத்தமம்.

அறிவு ஆரறிவார் ? ஆய்ந்தவர் அறிவார் !

அறிவற்றவனுக்கு ஆண்மை ஏது ?

அறிவற்றவனுக்கு யார் சொன்னால் என்ன ?

அறிவுடன் ஞானம் அன்புடன் ஒழுக்கம்.

அறிவுடையாரை அரசனும் விரும்பும்.

அறிவு தரும் வாயும் அன்பு உரைக்கும் நாவும்.

அறிவு பெருத்தோன் அல்லல் பெருத்தோன்.

அறுகங் கட்டையும் ஆபத்துக்கு உதவும்.

அறுக்க உதவும் பூம்பாளை, அணுக ஊறும் சிற்றின்பம்.

அறுக்க மாட்டாதவன் இடுப்பிலே ஐம்பெத்தெட்டு அறிவாள்.

அறுதலி மகனுக்கு வாழ்க்கைப்பட்டு விறு தாவியா அறுத்தேன்.

அறுத்தவள் ஆண்பிள்ளை பெற்ற கதை போல.

அறுந்த விரலுக்குச் சுண்ணாம்பு தரமாட்டான். ஆண்டி வந்தாலும் பிச்சை போட மாட்டான்.

அறுத்துக் கொண்டதாம் கழுதை எடுத்துக்கொண்டதாம் ஒட்டம்.

அறுபது நாளைக்கு இருபது கந்தை.

அறுபதடி கம்பம் ஏறியாடினாலும் அடியிலிறங்கித்தான் பிச்சை எடுக்கணும்.

அறுவடைக் காலத்தில் எலிக்கும் ஐந்து பெண்சாதி.

அறுவாய்க்கு வாய்பெரிது அரிசிக்கு கொதி பெரிது.

அறைக்கீரைப் புழுவைத் தின்றவனும் விலைமாது கையில் சோறு உண்டவனும் அகிலத்தில் இல்லை.

அறையில் ஆடினத்தான் அம்பலத்தில் ஆடமுடியும்.

அறையிலிருந்தவனை அம்பலம் ஏற்றுவது போல.

அறை வீட்டுச் செய்தியும் அம்பலத்தில் வரும்!

அற்ப ஆசை கோடி தவத்தைக் கெடுக்கும்.

அற்பக் கோபத்தினால் அறுந்த மூக்கு, ஆயிரம் பொன் கொடுத்தாலும் வருமா?

அற்பர் சகவாசம் பிராண சங்கடம்

அற்பசுகம் கோடி துக்கம்.

அற்பத் துடைப்பமானாலும் அறைத்தூசியைப் பெருக்கும்.

அற்பனுக்கு வாழ்வு வந்தால் அர்த்த ராத்திரியில் குடை பிடிப்பான்.

அற்பன் கையிலுள்ள ஆயிரம் பொன்னிலும் சற்புத்திரன் கையிலுள்ள தவிடு நன்று.

அற்பனுக்குப் பணம் வந்தால் வைக்க இடம் அறியான்.

அற்றது பற்று எனில் உற்றது வீடு.

அற்றத்துக்கு உற்றத் தாய்.

அன்பற்ற மாமிக்குக் கும்பிடுவதும் குற்றந்தான்!

அன்பற்றார் வாசலிலே பின்பற்றிப் போகாதே.

அன்பான சிநேகிதனை ஆபத்தில் அறிந்து கொள்!

அன்பு இருந்தால் ஆகாததும் ஆகும்.

அன்புடையாளைப் பறிகொடுத்து அலையச்சே அயல்வீட்டுக் காரன் வந்து அழைத்தானாம்.

அன்புள்ள குணம் அலையில்லா நதி.

அன்பே பிரதானம் அதுவே வெகுமானம்.

அன்று கண்டவர் இன்று வந்தார்.

அன்று குடிக்கத் தண்ணியில்லை, ஆனைமேல் அம்பாரி வேண்டுமாம்!

அன்றுமில்லை காற்று, இன்றுமில்லை குளிர்.

அன்றைக்கு ஆடை இன்றைக்குக் குடை, என்றைக்கு விடியும் இடையன் தரித்திரம்.

அன்றைக்கு அடித்த அடி ஆறுமாதந் தாங்கும்.

அன்றைக்குக் கிடைக்கின்ற ஆயிரம் ரூபாயைவிட, இன்றைக்குக் கிடைக்கின்ற அரைக் காசு மேலானது.

அன்றைக்கு எழுதினதை அழித்தெழுதப் போகிறானா?

அன்றைக்குச் சொன்ன சொல் சென்ம சென்மத்திற்கும் உறைக்கும்.

அன்றைக்குத் தின்கின்ற பலாக்காயை விட இன்றைக்குத் தின்கிற களாக்காய் பெரிது.

அன்னதானத்திற்கு நிகர் என்னதானம் இருக்கிறது ?

அன்னநடை நடக்கப் போய்க் காகம் தன்னடையும் இழந்தாற் போல.

அன்னப் பாலுக்குச் சிங்கியடித்தவன் ஆவின் பாலுக்கு சர்க்கரை தேடுகிறானாம்.

அன்னப்பிடி வெல்லப்பிடி ஆச்சுது.

அன்னமயம் இன்றி பிள்ளைமயம் இல்லை.

அன்னமயமே பிராணமயம்.

அன்னமிட்டாரைக் கன்னம் இடலாமா?

அன்னம் இறங்குவதே அபான வாயுவால்.

அன்னம் ஒடுங்கினால் அஞ்சும் ஒடுங்கும்.

அன்னம் அதிகம் தின்பானும் ஆடை அழுக்கு ஆவானும் பதர்.

அன்னம் முட்டினால் எல்லாம் முட்டும்.

அன்னிய சம்பந்தமல்லாமல் அத்தை சம்பந்தம் இல்லை.

அன்னிய மாதர் அவதிக்கு உதவுவரா?.

அன்னைக்கு உதவாதவன் ஆருக்கும் உதவாதவன்.

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.

# ஆ

ஆறு மாசம் பழுத்தாலும் விளாமரத்தில் வெளவால் சேராது.

ஆ ஆ என்று சொல்தவற் சென்ன, அன்னம் படைப் பவர்க்கல்லவா தெரியும் ?

ஆகட்டும் போகட்டும் அவரைக்காய் காய்க்கட்டும், தம்பி பிறக்கட்டும் தம்பட்டங்காய் காய்க்கட்டும், அவனுக்குக் கலியாணம் ஆகட்டும் உன்னைக் கூப்பிடுகிறேனா இல்லையா பார் என்றானாம்

ஆகாயத்தில் எறிந்த கல் அங்கேயே நிற்குமா?

ஆகாத வேளையில் பிள்ளை பிறந்தால், அண்டை வீட்டுக் காரனை என்ன செய்யுமாம்?

ஆகாத பஞ்சாங்கத்திற்கு அறுபது நாழிகையும் தியாச்சியம்.

ஆகாத வேளையில் பிள்ளை பிறந்தால் அப்பனையும் ஆத்தாளை யும் கொல்லுமே தவிர, பஞ்சாங்கம் சொன்ன பார்ப் பானை என்ன செய்யும்?

ஆகாதவன் குடியை அடுத்துக் கெடுக்க வேண்டும்.

ஆகாசத்தில் பறக்க உபதேசிப்பேன், என்னைத் தூக்கி ஆற்றுக்கு அப்பால் விடு என்றானாம் குரு.

ஆகாயத்திற்கு மையம் காட்டுகிறது போல்.

ஆகாயத்தைப் பருந்தா எடுத்துக் கொண்டு போய்விடும்?

ஆகாய வல்லிடி அதிர இடிக்கும்.

ஆகாயம் பார்க்கப் போயும் இடுமுடுக்கா?

ஆகாயம் பெற்றது பூமி தாங்கினது

ஆகாயமே விழுந்தாற் போல பேசுகிறாயே?

ஆகிறவன் அரைக்காசிலும் ஆவான் ஆவாதவன் ஆயிரம் கொடுத்தாலும் ஆகான்.

ஆவது அஞ்சிலே தெரியும், காய்ப்பது பிஞ்சிலே தெரியும்.

ஆகுங் காலத்தில் அடியாளும் பெண் பெறுவாள்.

ஆகுங் காலம் ஆகும், போகுங் காலம் போகும்.

ஆகுங்காலம் வந்தால் தேங்காய்க்கு இளநீர் போலச் சேரும்!

ஆக்கப் பிள்ளை நமது வீட்டில், அடிக்கிற பிள்ளை எதிர் வீட்டிலோ?

ஆக்கப் பொறுத்தவன் ஆறப்பொறுனோ?

ஆக்கமாட்டாத அழுகல் நாரிக்குத் தேடமாட்டாத திருட்டுச் சாவான்.

ஆக்க வேண்டாம் அரைக்க வேண்டாம் பெண்ணே, என்னருகில் இருந்தால் போதுமடி கண்ணே!

ஆக்கி அரைத்துப் போட்டவள் எல்லாந்தான் கேட்பாள்.

ஆக்குகிறவள் சலித்தால் அடுப்புப்பாழ், குத்துகிறவன் சலித்தால் குந்தாணி பாழ்.

ஆங்காரத்திலே அழிந்தபேர் அனந்தம் பேர்.

ஆங்காலத்தில் எல்லாம் அங்கு இங்கு ஆடி, சாங்காலத்தில் சங்கரா சங்கரா என்றுளாம்.

ஆசாரப் பார்ப்பான் காசிக்குப் போனும் பறையன் கேசம் தலையிலடி பட்டதாம்.

ஆசாரம் இல்லாத அசடருடன் கூடிப் பாசாங்கு பேசிப் பதியிழந்து போனேனே!

ஆசை அண்டினல் அழுகையும் அண்டும்.

ஆசை அண்டா விட்டால் அழுகையும் அண்டாது.

ஆசை அவள் மேலே ஆதரவு பாய் மேலே.

ஆசை அறுபதுநாள் மோகம் முப்பது நாள்; தொண்ணூறு நாளும் போனல் துடைப்பக் கட்டையடி.

ஆசை இருக்கிறது தாசில் உத்தியோகம் பார்க்க, அமிசை இருக்கிறது கழுதை மேய்க்க.

ஆசையுள்ளளவும் அலைச்சலும் உண்டு.

ஆசைகாட்டி மோசம் செய்கிறதா ?

ஆசை அதிகமுள்ளவனுக்கு ரோஷமிருக்குமா ?

ஆசைக்கு அளவில்லை.

ஆசைக்கொரு பெண்ணும் ஆஸ்திக்கொரு ஆணும்.

ஆசைப்பட்ட பண்டம் ஊசிப்போயிற்று.

ஆசை வெட்கம் அறியாது.

ஆசை வைத்தால் நாசந்தான்.

ஆச்சாபுரக் காட்டிலே ஐம்பது புலிகளைக் குத்தினவன் பறைச்சேரி நாயோட பங்கம் அழிகிறுன்.

ஆடப் பாடத் தெரியாதவனுக்கு இரண்டு பங்கு.
ஆடமாட்டாதவள் கூடம் கோணல் என்றளாம்.
ஆடவிட்டு நாடகம் பார்க்கிறதா ?
ஆடாது எல்லாம் ஆடி அவரைக் காயும் அறுத்தாச்சுது.
ஆடி அமர்ந்தது ஒரு நாழிகையில்.
ஆடி அறவெட்டை, அகவிலை நெல்விலை.
ஆடி ஓடி நாடியிலடங்கிற்று.
ஆடி ஓய்ந்த பம்பரம் போல.
ஆடிக்கரு அழிந்தால் மழை குறைந்து போம்.
ஆடிக் கறக்கிற மாட்டை ஆடிக் கறக்கவேண்டும், பாடிக் கறக்கிற மாட்டை பாடிக் கறக்கவேண்டும்.
ஆடிக்காற்று எச்சில் கல்லைக்கு வழியா ?
ஆடிக் காற்றிலே அம்மியே மிதக்கும்போது இலவம் பஞ்சுக்கு என்ன சேதி ?
ஆடிக்கு அழைக்காத மாமியாரைத் தேடிப்பிடிச்சு செருப்பாலடி.
ஆடிக்கொரு தடவை, அம்மாவாசைக்கொரு தடவையா ?
ஆடி மாதத்தில் குத்தின குத்து, ஆவணி மாதத்தில் வலி எடுத்ததாம்.
ஆடியகாலும் பாடிய நாவும் சும்மா இருக்காது.
ஆடி விதை தேடிப் போடு.
ஆடு இருக்க இடையனை விழுங்குமா ?
ஆடு திருடின கள்ளனைப்போல விழிக்கிறன்.
ஆடு கடிக்கும் என்று இடையன் உறியேறிப் பதுங்குவானும்.
ஆடு இருந்த இடமும் அகமுடையான் இருந்த இடமும் உருப்படாது.
ஆடு கெட்டவன் ஆடித் திரிவான், கோழி கெட்டவன் கூவித் திரிவான்.
ஆடு கொடாத இடையன் ஆவைக் கொடுப்பானு ?
ஆடு கொழுப்பது எல்லாம் இடையனுக்குத் தானே லாபம் ?
ஆடு கோனுனின்றித் தானய்ப் போகுமா ?
ஆடுங் காலத்தில் தலைகீழாக நடந்தால், ஓடுங் கப்பரையும் ஆவான்.

ஆடுங் காலத்தில் தலைகீழாக ஓடினாலும் கூடும் புசிப்புத்தான் கூடும்.

ஆடு தழை தின்பது போல.

ஆடு தின்பாளாம், ஆட்டைக்கண்டால் சீசீ என்பாளாம்.

ஆடு நனைகிறதென்று ஓநாய் அழுகிறதாம்.

ஆடு பகையும் குட்டியுறவுமா?

ஆடு பிடிக்கப்போய் கரடி அகப்பட்டது போல.

ஆடு பிழைத்தால் மயிர் தானும் கொடான்.

ஆடுவதுமாடி அவரைக் காயும் பறித்தாச்சு.

ஆடுவதே மணியமாய் இருக்கிறான்.

ஆடுவரும் பின்னே (தலை) ஆடிவரும் முன்னே.

ஆடு வீட்டிலே ஆட்டுக் குட்டி காட்டிலே.

ஆடை இல்லாதவன் அரை மனிதன்!

ஆடையைத் தின்றால் வெண்ணெய் உண்டா?

ஆட்காட்டி தெரியாமல் திருடப்போகிறவன் கெட்டிக் காரனா? அவன் காலடி பிடித்துப்போகிறவன் கெட்டிக் காரனா?

ஆட்காட்டி சொந்தக்காரனையும் திருடனையும் பிடித்துக் கொடுக்கும்.

ஆட்டமும் கூத்தும் அடங்கிற்று அத்தோடே

ஆட்டாளுக்கு ஒரு சீட்டாள் அடப்பகாரனுக்கு ஒரு துடைப்பக்கட்டை.

ஆட்டாளுக்கு ஒரு மோட்டாளாம்.

ஆட்டில் ஆயிரம், மாட்டில் ஆயிரம், வீட்டில் கரண்டி பாலில்லை.

ஆட்டின் கழுத்தறுப்புப் போல.

ஆட்டுக்கடா சண்டையில் நரி செத்ததுபோல.

ஆட்டுக் கறியும் நெல்லுச் சோறும் தம்மா தும்மா, அந்தக் கடன் கேட்கப்போனா கிய்யா கிய்யா.

ஆட்டுக்கிடையிலே ஓநாய் புகுந்தாப்போல.

ஆட்டுக் குட்டிக்கு ஆனையைக் காவு கொடுக்கிறதா?

ஆட்டைத் தோளின்மேல் போட்டுக் கொண்டு காடெங்கும் தேடினது போல்.

ஆட்டுக்குத் தீர்ந்தபடி குட்டிக்கும் ஆகுது.

ஆட்டுக்கும் மாட்டுக்கும் முறையா, காட்டுக்கும் பாட்டுக்கும் வரையா?

ஆட்டுக்கும் மாட்டுக்கும் இரண்டு கொம்பு, இந்த அய்யங்காருக்கு மூன்று கொம்பு.

ஆட்டுக்கும் வால் அளவறுத்துதான் இருக்கிறது.

ஆட்டுக் கொத்தது குட்டிக்கு.

ஆட்டுத் தலைக்கு ஒச்சன் பறக்கிறது போல.

ஆட்டு வெண்ணெய் ஆட்டு மூளைக்கும் காணாது!

ஆட்டைக் காட்டி வேங்கையைப் பிடிக்கப் பார்க்கிறான்.

ஆட்டைத் தேடி அயலார் கையில் கொடுப்பதைவிட வீட்டைக்கட்டி நெருப்பு வைப்பது மேலானது.

ஆணாய்ப் பிறந்தால் அருமை, பெண்ணாய்ப் பிறந்தால் எருமை.

ஆணிக்கு இணங்கின பொன்னும் மாமிக்கு இணங்கின பெண்ணும் அருமை.

ஆணுக்குக் கேடு செய்தாலும் பெண்ணுக்குப் பிழை செய்தல் ஆகாது.

ஆணுக்குப் பெண் அஸ்தமிச்சுப் போச்சோ?

ஆணை அடித்து வளர், பெண்ணைப் போற்றி வளர்.

ஆணையும் வேண்டாம் சத்தியமும் வேண்டாம் துணியைப் போட்டுத் தாண்டு.

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் திரும்புவார்களா?

ஆண்டி எப்போ சாவான்? மடம் எப்போது ஒழியும்.

ஆண்டிகள் கூடி மடம் கட்டினாற் போல.

ஆண்டி கிடப்பான் மடத்திலே, அவன் சோளி கிடக்கும் தெருவிலே.

ஆண்டிக்குப் பிச்சையா அவன் சுரைக் குடுக்கைக்குப் பிச்சையா?

ஆண்டிக்கு வாய்ப் பேச்சு அண்ணாவுக்கு அதுவும் இல்லை.

ஆண்டிச்சி பெற்றது அஞ்சும் அவலம்.

ஆண்டிமகன் ஆண்டியானால் நேரமறிந்து சங்கு ஊதுவான்.

ஆண்டியே சோற்றுக்கு அலையச்சே லிங்கம் பால் சோற்றுக்கு அழுகிறதாம்.

ஆண்டிவேஷம் போட்டும் அலைச்சல் தீரவில்லை.

ஆண்டை கூலியைக் குறைத்தால், சாம்பான் வேலையைக் குறைப்பான்.

ஆண்டைமேல் கோபம் கிடாவின் மேலாற்றினன்.

ஆண்பிள்ளை ஆயிரம்பேர் ஆனாலும் ஒத்திருப்பர், பெண் பிள்ளைகள் அக்கா தங்கச்சி ஆனாலும் ஒத்திரார்கள்.

ஆண்மையற்ற வீரன் ஆயுதத்தின் மேல் குறை சொல்லுவான்.

ஆதாயமில்லாத செட்டி ஆற்றைக் கட்டி இறைப்பானா?

ஆதாயமில்லாத செட்டி ஆற்றோடே போகிறானாம்.

ஆதாயமே செலவு அறையிருப்பே நிலுவை.

ஆதீனக்காரனுக்குச் சாதனம் வேண்டுமா?

ஆத்தாளும் மகளும் காத்தானுக்கு அடைக்கலம், அவன் காத்தாலும் காத்தான், கைவிட்டாலும் விட்டான்.

ஆத்தாளை அக்காளைப் பேசுகிறதில் கோபம் இல்லை, அகமுடையாளைப் பேசுகிறதுக்குத்தான் கோபம் பொங்கிப் பொங்கி வருகிறது.

ஆத்தாள் அம்மணம்; அன்றாடம் வீட்டில் கோதானமாம்

ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு.

ஆத்திரக்காரன் கோத்திரம் அறிவானா?

ஆத்திரத்தை அடக்கினாலும் அடக்கலாம்; மூத்திரத்தை அடக்க முடியாது (கூடாது).

ஆத்திரமுடையவன் கோத்திரமறியான்.

ஆத்தை படுகிற பாட்டுக்கு மகன் மோருக்கு அழுகிறான்

ஆத்மசுத்தியென்கின்ற நெஞ்சலக்கணம் தெரியாதவனுக்கு பஞ்சலக்கணந் தெரிந்து என்ன பலன்.

ஆந்தை சிறியது கீச்சல் பெரியது.

ஆந்தை விழிப்பது போல விழிக்கிறான்.

ஆந்தை பஞ்சையாக இருந்தாலும் சகுனத்திற்குப் பஞ்சையில்லை.

ஆபத்தில் அறியலாம் அருமைச் சிநேகிதனை.

ஆபத்திற்காத்தவன் ஆட்சியை அடைவான்.

ஆபத்துக்காகாத பெண்சாதியை அழகுக்கா வைத்திருப்பது?

ஆபத்துக்கு உதவினவனே நண்பன்.

ஆபத்துக்குப் பாபமில்லை.
ஆபத்துக்கு உதவுவானு விலைமாது புருஷன்?
ஆபத்தும் சம்பத்தும் யாருக்கும் உண்டு.
ஆமுடையானுக்கில்லாத வெட்கம் அடுத்த வீட்டுக்காரனுக் கென்ன?
ஆமணக்கு முத்து ஆணிமுத்தாகுமா?
அகமுடையான் செத்தவளுக்கு மருத்துவச்சி தயவேன்?
அகமுடையான் அடித்தது பெரிதல்ல சக்களத்தி சிரிப்பாளென்று அழுகிறேன்.
அகமுடையானை அடித்ததற்கு மைத்துனனைக் கோபித்துக் கொண்டாளாம்.
அகமுடையானை நம்பி ஆடலாமா ஆட்டம்.
அகமுடையானைக் கொன்ற அறநீலி.
அகமுடையானுக்குப் பொய் சொன்னாலும் அடுப்புக்குப் பொய் சொல்லலாமா?
ஆமை புகுந்த வீடும் அமீனு நுழைந்த வீடும் உருப்படாது.
ஆம் என்ற தோஷம் கனத்தது வயிற்றிலே.
அகமுடையான் பலமுண்டானால் குப்பை ஏறிச்சண்டை போடலாம்.
அகமுடையான் திட்டியதைப் பற்றி அடுத்த வீட்டுத்தச்சனைக் கோணல் நிமிர்த்தச் சொன்னாளாம்.
ஆமை கிணற்றிலும் அணில் கொம்பிலும்.
ஆமையுடனே முயல் முட்டை இடப்போய் கண் பிதுங்கிச் செத்ததாம்.
ஆயிரங்கலம் நெல்லுக்கு ஒரு அந்துப் பூச்சி போதும்.
ஆயக்காரன் அஞ்சு பணம் கேட்பான், அதாவெட்டுக்காரன் ஐம்பது பணம் கேட்பான்.
ஆயத்துக்குக் குதிரை கியத்துக்குக் குட்டி.
ஆயத்துக்குப் பயந்து ஆற்றிலே நீந்தினது போல.
ஆயக்காரனுக்கு பிரம்மஹத்திக் காரன் சாட்சி.
ஆய உபாயம் அறிந்தவள் அரிதல்ல வெல்வது.
ஆயிரம் கப்பிலில் நழுவின கப்பி.
ஆயிரத்தில் ஒருவனே அலங்கார புருஷன்.
ஆயிரங் காலத்துப் பயிராச்சுதே.

ஆயிரம் குணம் ஒருலோப குணத்தாலே தட்டும்.

ஆயிரமுடையான் அமர்ந்திருக்கும், அரைப்பண முடையான் ஆடி விழும்.

ஆயிரம் குதிரையை அறவெட்டின சிப்பாய்தானு இப்போ பறைச்சேரி நாயோடே பங்க மழிகிருன்.

ஆயிரங்காலே மாகாணி பணம்.

ஆயிரங் காக்கைக்கு ஒரு கல்.

ஆயிரம் தடவை சொல்லி அழுதாச்சு !

ஆயிரம் நட்சத்திரம் கூடினுலும் ஒரு சந்திரன் ஆகாது.

ஆயிரம் பசுக்களில் ஒரு பசு உதைத்துக் கொண்டால் நஷ்டமா

ஆயிரம் காக்கைக்குள் ஒரு அன்னம் அகப்பட்டது.

ஆயிரம் கட்டு அண்டத்தைத் தாங்கும்.

ஆயிரம் பேரைக் கொன்றவன் அரை வைத்தியன்.

ஆயிரம் பொய்சொல்லி ஒரு கலியாணம் செய்துவை.

ஆயிரம் பேரிடத்தில் சினேகம் பண்ணினுலும் ஆண்பிள்ளை களுக் கென்ன?

ஆயிரம் பனையுள்ள அப்பனுக்குப் பிறந்தும் பல்லுக்குத்த ஒரு ஈர்க்குச்சி இல்லை.

ஆயிரம் பாம்பிடம் ஒரு தேரை அகப்பட்டது போல.

ஆயிரம் பேர் கூடினுலும் ஒரு அந்துப்பூச்சியைக் கொல்லக் கூடாது.

ஆயிரம் பட்டும் அவமாச்சு, கோயிலைக் கட்டியும் குறையாச்சு

ஆயிரம் ரூபாய் முதல் இல்லாமல் பத்துரூபா வட்டி நஷ்டம்.

ஆயிரம் வந்தாலும் ஆத்திரம் ஆகாது.

ஆயிரம் பொன் பெற்ற குதிரைக்கு அரைப்பணத்துக்குச் சவுக்கு.

ஆயிரம் பொன் போட்டு யானைவாங்கி அரைப் பணத்து அங்குசத்துக்கு பால்மாறுகிறதா?

ஆயிரம் மாகாணி அறுபத்திரண்டரை.

ஆயிரம் வருஷம் சென்று செத்தாலும் அநீதச்சாவு ஆகாது.

ஆய்பார்த்த கலியாணம் போய்ப்பார்த்தால் தெரியும்.

ஆயுதமில்லாரை அடிக்கிறதா?

ஆரக்கழுத்தி அரண்மனைக் காகாது.

ஆய்ந் தோய்ந்து பாராதான் தான் சாகக்கடவன்!
ஆரடா விட்டது மானியம்? நான் விட்டுக் கொண்டேன் மானியம்.
ஆயுதப் பரீட்சை அறிந்தவன் நூற்றில் ஒருவன்.
ஆரணியமான அழகாபுரிக்கு கோரணியான குரங்கு வந்து தோன்றிற்று.
ஆரால் கேடு? வாயால் கேடு.
ஆரியக்கூத்தாடினாலும் காரியத்தில் கண்ணாயிரு.
ஆருக்காகிலும் துரோகஞ் செய்தால் ஐந்தாறு நாட் பொறுக்கும், ஆத்ம துரோகஞ் செய்தால் அப்போதே கேட்கும்,
ஆருக்கு ஆர் சதம்.
ஆருக்கும் அஞ்சான் ஆர்ப்படைக்கும் தோளான்.
ஆருக்குவந்த விருந்தோ என்றிருந்தால் விருந்தாளி பசி என்னாவது?
ஆருமற்றதே தாரம். ஊரில் ஒருவனே தோழன்.
ஆருமில்லாப் பெண்ணுக்கு அண்டை வீட்டுக்காரன் மாப்பிள்ளை.
ஆரும் இல்லாத ஊரிலே அஸ்வமேத யாகம் செய்தானாம்.
ஆருக்கு வந்ததோ? எவருக்கு வந்ததோ என்றிருக்காதே!
ஆருக்குப் பிறந்து மோருக்கு அழுகிறாய்!
ஆரோ செத்தான், எவனோ அழுதான்.
ஆர் ஆத்தாள் செத்ததும் பொழுது விடிந்தால் தெரியும்.
ஆர் ஆருக்கு ஆளானேன் ஆகாத உடம்பையும் புண்ணாக்கிக் கொண்டு.
ஆர்கடன் வைத்தாலும் மாரிகடன் வைக்கக் கூடாது.
ஆர்குடி கெட்டாலும் சந்தைக்குக் காற்பணம்.
ஆர்குடியை கெடுக்க ஆண்டி வேஷம் போட்டாய்.
ஆர் வாழ்வு ஆருக்கு நீன்றது.
ஆர் குத்தினாலும் அரிசியானால் சரி.
ஆலமரத்தைச் சுற்றிவந்து அடிவயிற்றைத் தொட்டுப் பார்த்தது போல.
ஆலமரம் பழுத்ததென்று பறவைக்கு ஆர் சீட்டனுப்பியது?
ஆலயமிடித்து அன்னதானம் பண்ணப் போகிறான்.

ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி, நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி.

ஆலைக்குள் அகப்பட்ட சோலைக் கரும்புபோல!

ஆலையில்லா ஊரில் இலுப்பைப்பூ சர்க்கரை.

ஆல் பழுத்தால் அங்கே கிளி; அரசு பழுத்தால் இங்கே கிளி.

"ஆல்போல் விழுதுவிட்டு, அறுகுபோல் வேரோடி, மூங்கில் போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பீர்."

ஆவணி மாதம் அழுகைத் தூற்றல்.

ஆவிரை இலையும் ஆபத்துக்குதவும்.

ஆவுடையாரையும் லிங்கத்தையும் ஆறுகொண்டுபோகும் போது சுற்றுக் கோயில் சுவாமியெல்லாம் சர்க்கரைப் பொங்கலுக்கு அழுகுகிறதாம்.

ஆவென்று போனபின் அள்ளியிடுவது யார்.

ஆவும் தென்னையும் ஐந்து வருஷத்தில் பலனீயும்.

ஆ வேறு நிறமானாலும் பால் வேறு நிறமாமோ.

ஆழம் தெரியாமல் காலை விட்டுக்கொண்டதுபோல்.

ஆளமாட்டாதவனுக்குப் பெண்டாட்டி ஒரு கேடு!

ஆழாக்கு அரிசி மூவாழாக்குப் பானை; முதலியார் வருகிற வீராப்பைப் பாரு.

ஆழம் அறியும் மூங்கில்; மேளம் அறியும் அரவம்!

ஆளுக்கு ஒரு குட்டுக்குட்டினால் அடியேன் தலைமொட்டை!

ஆளனில்லாத மங்கைக்கு அழகு பாழ்.

ஆளனில்லாத துக்கம் அழுதாலும் தீராது.

ஆளுக்கு ஒத்த ஆசாரமும் ஊருக்கு ஒத்த உபசாரமும் வேண்டாமா?

ஆளானஆள்புகுந்தால் ஆமணக்கு விளக்கெண்ணெய் ஆகும்.

ஆளை ஆள் குத்தும், ஆள்மிடுக்கு பத்துப் பேரைக் குத்தும்.

ஆளைக்கண்டு ஏமாற்றுமாம் ஆலங்காட்டுப்பேய்.

ஆளுக்குத் துக்குணி ஆள்பாரம்.

ஆளுக்குள்ளே ஆளா இருப்பான்.

ஆளை ஆள் அறியவேண்டும், மீனைப் புளியங்காய் அறிய வேண்டும்.

ஆளைப் பார்த்தால் அழகு மலை! வேலையைப் பார்த்தால் இழவு மலை.

ஆள் இருக்கக் கொலை சாயுமா ?
ஆளைச்சுற்றிப் பார்க்காமல் அளக்கிறதா ?
ஆள் இல்லா ஊருக்கு அழகு பாழ்.
ஆள் இளப்பமாயிருந்தால் எருது மச்சான் முறை கொண்டாடும்.
ஆள் இல்லாப்படை அம்பலம்.
ஆள் இளந்தலைக் கண்டு தோணி மிதக்கும்.
ஆள் கண்டு ஏய்க்குமாம் ஆலங்காட்டு நரி.
ஆள் கொஞ்சமாகிலும் ஆயுதம் மிடுக்கு.
ஆள் ஏற நீர் ஏறும்.
ஆறும் குழந்தை பெண்ணாகப் பிறந்தால் ஆனை குடித்தனமும் நீறாய் விடும்.
ஆறிலும் சாவு ; நூறிலும் சாவு.
ஆறின கஞ்சி பழங்கஞ்சி.
ஆறு கடக்கிற வரையில்தான் அண்ணன் தம்பி முறை : ஆறுகடந்தபின் நீயாரோ நானாரோ !
ஆள்மெத்தக் கூடினால் மீன் மெத்தப் பிடிக்கலாம்.
ஆறு காதம் என்கிறபோதே கோவணத்தை அவிழ்த்துக் குடுமியில் கட்டிக்கொண்டானாம்.
ஆறுகெட நாணல் இடு, ஊருகெட நூலை இடு, காடு கெட ஆடுவிடு. மூன்றுங்கெட மூதேவியை விடு.
ஆறு நிறைய ஜலம் போனாலும் நாய் நக்கித்தான் குடிக்க வேண்டும்.
ஆறு நீந்தினவனுக்கு வாய்க்கால் எம்மாத்திரம்.
ஆறு நேராய்ப் போகாது!
ஆறு கொண்டது பாதி, தூறு கொண்டது பாதி.
ஆறு நேரான ஊரும், அரசனோடெதிர்த்த குடியும், புருஷனோடு ஏறுமாறான பெண்டிரும் நீறு நீறாகி விடும்.
ஆறு பார்க்கப் போன ஆய்ச்சிக்குப் பிடித்தது-ஜலிப்பு.
ஆறு போவதே போக்கு; அரசன் செய்வதே தீர்ப்பு.
ஆறு மாசப் பயணத்தை அஞ்சி நடந்தால் முடியுமா?
ஆறு மாசத்துக்குச் சனியன் பிடித்தது போல.
ஆறு மாதம் வீட்டிலே; ஆறு மாதம் காட்டிலே.
ஆறும் கடன், நூறும் கடன் பெரிசாச் சுட்டா, பணியாரத்தை!

ஆறும் நாலும் பத்து, நாலும் ஆறும் பத்து.
ஆறெல்லாம் கண்ணீர்; அடியெல்லாம் செங்குருதி.
ஆற்றருகிலிருந்த மரமும் அரசனருகிலிருந்த வாழ்வும் நிலையல்ல.
ஆற்றித் தூற்றி அம்பலத்தில் வைக்கப் பார்க்கிறான்.
ஆற்றிலே ஆயிரம்காணி தானம் செய்தாற்போல.
ஆற்றிலே ஒரு காலும் சேற்றிலே ஒரு காலும்.
ஆற்றிலே, கணுக்கால் தண்ணீரிலும் அஞ்சி நடக்கவேண்டும்.
ஆற்றிலே போற தண்ணியை ஐயா குடி அம்மா குடி.
ஆற்றிலே போட்டாலும் அளந்து போடு.
ஆற்றிலே கரைத்த புளியைப் போல
ஆற்றுக்குப் போனதும் இல்லை; கால் செருப்பைக் கழற்றினது மில்லை.
ஆற்றுக்கும் பயம்; காற்றுக்கும் பயம்.
ஆற்று நிறையத் தண்ணீர் போனாலும் அள்ளிக்குடிக்குமா நாய்.
ஆற்று நீரை யூற்றி அலசிக் கழுவினாலும் வேற்று நீர் வேற்று நீர்தான்.
ஆற்றுப் பெருக்கும் அரச வாழ்வும் அரை நாழிகை!
ஆற்று மணலிலே தினம் புரண்டாலும் ஒட்டுகிறது தானே உடம்பிலே ஒட்டும்.
ஆற்று மணலையும் ஆகாசத்து நட்சத்திரத்தையும் அளக்க முடியுமா ?
ஆற்றுவாரு மில்லை; தேற்றுவாரு மில்லை.
ஆற்றைக் கடத்திவிடு; ஆகாயத்தில் பறக்கக் குளிகை தருகிறேன் என்றான் மந்திரவாதி.
ஆற்றைக் கடந்தால் ஓடக்காரனுக்கு ஒரு சொட்டு.
ஆற்றைத் தாண்டியல்லவோ கரையேற வேண்டும்.
ஆற்றோடே போகிறான் நல்ல வேலைக்காரன்.
ஆற்றோடு போனாலும் போவேன்; தெப்பக்காரனுக்கு ஒரு காசு கொடுப்பதில்லை.
ஆனதக்வாமல் ஆவது அறிவாரோ?
ஆனதுக்கு ஒரு ஆகாதது; ஆகாததற்கு ஒரு ஆனது.

ஆனதெய்வத்தை ஆறு கொண்டு போகிறது: அனுமந்த ராயனுக்குத் தெப்பத் திருவிழாவா?

ஆனமட்டும் ஆதாளியடித்து, ஆந்தையைப் போல் விழிக்கிருன்.

ஆனமுதலை யழித்தவன் மானமிழப்பது அரிதல்ல.

ஆனவன் ஆகாதவன் எங்குமே உண்டு.

ஆனால் அச்சிலே வார், ஆகாவிட்டால் மிடாவிலே வார்.

ஆனால் ஆதித்த வாரம் ஆகாத போனால் சோமவாரம்.

ஆனால் பிரம்மரிஷி ஆகாவிட்டால்........

ஆனி அடியிடாதே, கூனிக் குடி புகாதே.

ஆனி அரணை வால்பட்ட கரும்பு ஆனைவால் ஒத்தது.

ஆனை அசைந்து தின்னும், வீடு அசையாமல் தின்னும்.

ஆனை ஆசார வாசலைக் காக்கும், பூனை புழுத்த மீனைக்காக்கும்.

ஆனை ஆயிரம் பெற்றால் அடியும் ஆயிரம் பெறுமா?

ஆனை இருந்து அரசாண்ட இடத்தில் பூனை இருந்து புலம்பி அழுகிறது.

ஆனை இலைக்கறி, பூனை பொலிக்கறி.

ஆனை உண்ட விளாங்கனியைப் போல.

ஆனை ஏறித் திட்டி வாசலில் நுழைவதைப் போல.

ஆனை ஏறிச் சந்தின் வழியாக நுழைவானேன்.

ஆனை ஒரு குட்டி போடுவதும் பன்றி பலகுட்டி போடுவதும் சரியாகுமா?

ஆனை கட்டச் சங்கலி தானே எடுத்துக் கொடுத்தாற் போல.

ஆனைகட்டத்தான் வானமுட்டப் போர்.

ஆனை கண்ட குருடர் அடித்துக் கொண்டது போல.

ஆனை கறுத்தால் ஆயிரம் பொன்; ஒட்டை கருத்தால் உதவியென்ன?

ஆனை காணமற் போனால் குண்டுச் சட்டியில் தேடினால் அகப்படுமா?

ஆனை குட்டிபோடும் என்று பார்த்தால், லத்தியல்லவோ போடுது !

ஆனை கேட்ட வாயால் ஆட்டுக்குட்டி கேட்பதா ?

ஆனைக்கில்லை கானலும் மழையும்.

ஆனைக்கு அறுபது முழம், அறக்குள்ளனுக்கு எழுபது முழம்.

ஆனைக்கு ஒருகாலம் பூனைக்கு ஒரு காலம்.
ஆனைக்குக் கோவணம் கட்டியதைப்போல.
ஆனைக்குச் சிட்டுக்குருவி மத்தியஸ்தம் செய்தாற்போல.
ஆனைக்குத் தீனியிடும் வீட்டில் ஆட்டுக்குட்டிக்குப் பஞ்சமா ?
ஆனைக்குத் துறடும் அன்னத்துக்கு மிளகாயும் வேண்டும்.
ஆனைக்குத் தேரை இட்டது போல.
ஆனைக்கும் உண்டு அவகேடு.
ஆனைக்கும் அடிசறுக்கும்.
ஆனைக்கும் சரி பூனைக்கும் சரி.
ஆனைக்கும் புலிக்கும் நெருப்பைக்கண்டால் பயம்.
ஆனைக் கூட்டத்தில் சங்கம் புகுந்தது போல.
ஆனை இருந்தாலும் ஆயிரம் பொன் ; இறந்தாலும் ஆயிரம் பொன்.
ஆனைக்கு வேகிற சோற்றில் பூனைக்குப் பங்கில்லை.
ஆனை தழுவிய கையால் ஆட்டுக்குட்டியைத் தழுவுவதா ?
ஆனை தன் தலையில் மண்ணைத் தானே அள்ளிப் போட்டுக் கொள்வதைப் போல.
ஆனை தன் பலமறியாமல் மத்தகத்தை மதில்சுவரில் முட்டியதைப் போல.
ஆனை துறத்தி வந்தாலும் ஆலயத்துக்குள் நுழையலாகாது.
ஆனை நிழல் பார்க்கத் தவளை அழுவதைப்போல.
ஆனை படுத்தால் ஆள்மட்டம்.
ஆனையைப் பார்க்கக்கூட வெள்ளெழுத்தா ?
ஆனை போன வழியிலே ஆட்டுக்குட்டியா போக முடியாது ?
ஆனை வந்தாலும் தாண்டுவான் ; புலி வந்தாலும் தாண்டுவான்.
ஆனை போகிற வழியில் எறும்பு தாரை விட்டாற் போல.
ஆனைப் பசிக்குச் சோளப்பொரி தாங்குமா ?
ஆனை மதத்தால் வாழைத்தண்டு ; ஆண்பிள்ளை மதத்தால் கீரைத்தண்டு.
ஆனை மிதித்தால் பிழைப்பார்களா ?
ஆனை மேயுங் காட்டில் ஆடுமேய இடமில்லையா ?
ஆனைமேல் ஏறுவேன் ; வீரமணி கட்டுவேன்.

ஆனைமேல் இருக்கின்ற பாரத்தை பூனைமேல் இடலாமா ?

ஆனைமேல் இருக்கின்ற அரசன் சோற்றைவிட பிச்சை எடுக்கும் பாப்பான் சோறு மேல்.

ஆனைமேல் போகிறவனைச் சுண்ணாம்பு கேட்டால் அகப்படுமா;

ஆனைமேற் போகிறவன் பானையோடு நின்றான்.

ஆனையும் ஆனையும் முட்டும்போது இடையே அகப்பட்ட கொசுவின் கதி என்னவது ?

ஆனையும் அறுகம்புல்லினால் தடைப்படும்.

ஆனையை இடுப்பிலே கட்டிச் சுளகாலே மறைப்பாள்.

ஆனையும் நாகமும் புல்லினால் தடைப்பட்டன.

ஆனையைக் கொடுத்துத் துறட்டுக்கு மன்றாடினாற் போல.

ஆனையைத் தண்ணீரில் இழுக்கும் முதலை, பூனையை தரையில் இழுக்குமா ?

ஆனையைப் பிடிப்பதும் பானையில் அடைப்பதும் அதுவே செல்லப்பிள்ளைக்கு அடையாளம்.

ஆனை லத்தி ஆனையாகுமா ?

ஆனையை வித்துவானுக்கும் பூனையைக் குறவனுக்கும் கொடு.

ஆனையைத் தேடக் குடத்துக்குள் கைவிட்டதைப் போல.

ஆனையை விற்று பூனைக்கு வைத்தியம் பார்க்க வேண்டும்.

ஆனை வரும் பின்னே ; மணியோசை வரும் முன்னே.

ஆனை வாய்க்கரும்பு போலே.

ஆனையின் வாலைப்பிடித்துக் கரை ஏறலாம், ஆட்டின் வாலைப் பிடித்து கரையேறலாமா ?

ஆனைமேல் வருபவன் அந்துகாலன், குதிரைமீது வருபவன் குந்து காலன்.

ஆனை விழுங்கிய அம்மையாருக்கு பூனையொரு சுண்டாங்கி.

ஆனை விழுந்தால் தந்தம் ; புலி விழுந்தால் தோல்.

ஆனை வேகம் அடங்கும் அங்குசத்தில்



இகழ்ச்சியுடையான் புகழ்ச்சி அடையான்.

இக்கரை மாட்டுக்கு அக்கரை பச்சை.

இக்கரையில் பாகலை விதைத்து அக்கரையில் கொடி கொம்பு நட்டான்.

இங்கிதம் தெரியாதவனுக்குச் சங்கீதம் தெரிந்து பலன் என்ன?

இங்கு புதையல் இருக்குமா ரங்கா; அதற்கும் சந்தேகமா வெங்கா.?

இங்கே தலையைக் காட்டுகிறான்; அங்கே வாலைக் காட்டுகிறான்.

'இங்கே வா நாயே' என்றால் மூஞ்சியை நக்குகிறது.

இசைவு இல்லா பாட்டு இழுக்கு.

இச்சித்த காரியம் இரகசியம் அல்ல.

இச்சைச் சொல் யாசகத்தால் இடர்பட்டோர் இல்லை.

இச்சையுமில்லை கிருபையுமில்லை.

இஞ்சி தின்ற குரங்கைப்போல—

இஞ்சி என்றால் தெரியாதா; எலுமிச்சம்பழம் போலத் தித்திப்பாக இருக்குமே.

இஞ்சி லாபம் மஞ்சளிலே!

இடக்கனுக்கு வழியெங்கே? கிடக்கிறவன் தலைமேலே.

இடதுகைக்கு வலதுகை துணை; வலது கைக்குஇடதுகை துணை.

இடதுகை பிட்டத்துக்கு எளிது.

இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடுங்குவான்.

இடம் அகப்படாத தோஷம்; அதனால்தான் அவள் மெத்தப் பதிவிரதை.

இடம் வலம் தெரியாதவனோடு இணக்கம் செய்யக்கூடாது.

இடறிய காலே இடறுகிறது.

இடான், தொடான் மனுஷாள் மேலே செத்த பிராணன்.

இடியோசை கேட்ட பாம்பு (நாகம்) போல.
இடிக்குக் குடை பிடிக்கலாகுமா ?
இடித்த புளியைப் போலிருக்கிறான்.
இடித்தவள், புடைத்தவள் இங்கேயிருக்க, எட்டிப் பார்த்தவள் கொட்டிக்கொண்டு போனாள்.

இடித்து அடித்து ஒருகூடை இடுவதிலும், பிடிசோறு அன்பாய் போடுவதே மேல்.

இடிவிழுந்த மரம்போல ஏங்கினான்.
இடிவிழுவானுக்கு வாழ்க்கைப்பட்டு எந்நேரமும் இடிஜாமம்.
இடுப்பு ஒடிந்த கோழிக்கு உரல்குழியே கைலாசம்.
இடுப்பு சுருங்குவது பெண்களுக்கு அழகு.
இடுப்பு வைத்த இடமெல்லாம் அடுப்பு வைத்தான்.
இடுவது பிக்ஷை ; பெறுவது மோக்ஷம்.
இடுவார் பிச்சையைக் கெடுக்காதே !
இடைக்கணக்கன் செத்தால்; இனி பிழைப்பவன் நாட்டான்.
இடை சாய்ந்த குடம் கவிழும்.
இடைச்சன் பிள்ளைக்காரிக்கு தலைச்சன் பிள்ளைக்காரி மருத்துவம் பார்த்தாற்போல.

இடைச்சி ஆத்தாள் கோணிச்சி.
இடைச்சி சம்பத்தும் சாணைத்தி வாழ்வுஞ்சரி,
இடைச்சிக்கு மாப்பிள்ளை என்றைக்கிருந்தாலும் வருவான்.
இடைத்தெருவில் கோலம் வரும்போது, குசத்தெரு எங்கே என்கிறான்.

இடைப்பிறப்பும் கடைப்பிறப்பும் ஆகாது.
இடையனும் பள்ளியும் இருந்தபுலம் சாவி.
இடையன் கரடிமேல் ஆசைப்பட்டதுபோல.
இடையன் கலியாணம் விடியும்போது.
இடையன் கெடுத்தது பாதி ; மடையன் கெடுத்தது பாதி.
இடையன் புத்தி பிடறியிலே.
இடையன் வெட்டிய கொம்பைப் போல.
இடையாண்டியுமில்லை. குயத்தாதனுமில்லை.
இட்ட குடியும் கெட்டு ஏற்ற குடியுங்கெட்டது.

இ உறவு எட்டு நாளைக்கு ; நக்கின உறவு நாலு நாளைக்கு.

இட்ட எழுத்திற்கு மேல் ஏற ஆசைப்பட்டால் கிடைக்குமா !

இட்ட கையை நத்துமா, இடாத கையை நத்துமா ?

இட்டதில் ஒன்றுங் குறைவில்லை.

இட்டதெல்லாம் கொள்ளும் பட்டி மகள் கப்பரை.

இட்டதெல்லாம் பயிரா ; பெற்றதெல்லாம் பிள்ளையா.

இட்டமற்ற முனியன் : அட்டமத்துச் சனியன்.

இட்டவர் தொட்டவர் கெட்டவர்கள் இப்போது வந்தவர் நல்லவர்கள்.

இட்டவன் இடாவிட்டால் வெட்டுப்பகை.

இட்ட வீட்டுக்கு இரண்டகம் நினைக்கலாமா ?

இட்டாருக்கு இட்ட பலன், ஏறியடித்தார்க்கு ஏறிய பலன்.

இட்டாருக்கு இடவும்; செத்தாருக்கு அழவும்.

இட்டார் பெரியோர் ; இடாதார் இழிகுலத்தோர்.

இட்டுக் கெட்டார் எங்குமேயில்லை.

இட்டு வைத்தால் தின்னவும் எடுத்து வைத்தால் சுமக்கவும் தெரியும்.

இணக்க மறந்திணங்க வேண்டும்.

இணக்கமில்லாதவனோடு என்ன வாது ?

இணங்காரோடு இணங்குவது இகழ்ச்சி.

இணங்கினால் தித்திப்பு, பிணங்கினால் கசப்பு.

இணைபிரிந்த அன்றில் போல.

இதற்கா பயப்பட்டேன் என் ஆண்டவனே ஆணை

இதிரை வந்தாலும் தாண்டுவேனே.

இது அனுமானுச்சே.

இது எல்லாம் பொம்மலாட்டம்.

இது என் குலாசாரம். இது என் வயிற்றுசாரம்.

இது என்ன வெள்ளரிக்காய் விற்ற பணமா ?

இது சொத்தை, அது புழுத்தது.

இது சொத்தை, அது புளியங்காய் போல்.

இது பெரிய இடத்துப் பேச்சு.

இத்தனை அத்தனையானால், அத்தனை எத்தனை ஆகும் ?

இத்தனை பெரியவன் கையைப் பிடித்தால் எப்படி மாட்டேன், என்கிறது.

இத்தனை பேர் பெண்டுகளில் என்பிள்ளைக்கொரு தாயில்லை.

இந்த அடிக்கு எந்த நாயும் சாகும்.

இந்த அமாவாசைக்கும் வெட்கமில்லை. வருகிற அமாவாசைக்கும் வெட்கமில்லை.

இந்த உலக வாழ்க்கை சதமா ?

இந்த எலும்பைக் கடிப்பானேன், சொந்தப் பல்லு போவானேன்.

இந்தக் கண்ணிற் புகுந்து அந்தக் கண்ணிற் புறப்படுகிறான்.

இந்த கூழுக்கா இத்தனைத் திருநாமம்.

இந்த சனுக்கனுக்கு இரண்டு பெண்சாதி, வந்தவாசி மட்டும் வல்லவாட்டு.

இந்தச் சிற்றுண்டி எனக்குத் தெவிட்டிப் போயிற்று.

இந்தப் பூராயத்தில் குறைச்சலில்லை.

இந்தப் பூனையும் பால் குடிக்குமா ?

இந்தப் பெரிய கொள்ளையிலே அப்பா என்று கூப்பிட பிள்ளையில்லை.

இந்தப் பெருமையும் பந்தல் அழகும் பார்த்தாயா பண்ணைக்காரா ?

இந்தப் பையனுக்கு இந்த வீட்டு ஓதம் உறைந்துப்போய் விட்டது.

இந்த வளைவு சிக்கினால் எப்படித்தான் பிள்ளை பிழைக்கும் ?

இந்த வீட்டிலே வைத்தது மாயமாயிருக்கிறது.

இந்திரனைச் சந்திரனை இலையாலே மறைப்பான், எமதரும ராஜனைக் கையாலே மறைப்பான்.

இந்திராதி தேவருக்கும் வந்திடும் தீவினை.

இந்திரைக்கு மூத்தவள் மூதேவி.

இமைக்குற்றம் கண்ணுக்குத் தெரியாது.

இயமன் ஒருவனைக் கொல்வான். ஏற்றம் மூவரைக் கொல்லும்.

இயற்கை வாசனையோ செயற்கை வாசனையோ ?

இரக்கப் போனாலும் சிறக்கப் போ.

இரக்கமில்லாதவன் நெஞ்சம் இரும்பிலும் கொடிது.

இரங்காதவர் உண்டா ? பெண் என்றால் பேயும் இரங்கும்.

இரசவாதிக்கு ஏது பஞ்சம் ?
இரண்டு ஆட்டிலே ஊட்டின குட்டியானான்.
இரண்டு ஓடத்திலே கால் வைக்கிறதா ?
இரண்டு ஓடத்தில் கால் வைத்தவனைப் போலிருக்கிறான்.
இரண்டு கையும் போதாது என்று அகப்பையும் கட்டிக் கொண்டேன்.
இரண்டு நாய்க்கு ஒரு எலும்பு போட்டாற் போல.
இரண்டு பட்ட ஊரில் குரங்கும் குடி இராது.
இரண்டு பெண்டாட்டிக்காரனுக்கு கொண்டை என்ன கொண்டை ?
இரண்டு பெண்டாட்டிக்காரன் பாடு திண்டாட்டம்.
இரண்டு பெண்டாட்டிக்காரன் வீட்டில் நெருப்பேன் ?
இரண்டு வீட்டிலும் கலியாணம், இடையில் செத்ததாம் நாய்க்குட்டி.
இரண்டு வீட்டு விருந்தாளி கெண்டை ஏறிச் செத்தாள்.
இரத்தினத்தைச் சேர்ந்த இழைபோல.
இரந்தும் பருந்துக்கு இடு.
இரந்தோர்க்கு ஈவது உடையார்கடன்.
இரப்பவனுக்கு பஞ்சம் என்றைக்கும் இல்லை.
இரப்பவனுக்கு வெண் சோறும் பஞ்சமா ?
இரவல் உடைமை இசைவாயிருக்கிறது. என் பிள்ளை ஆனை நான் கொடுக்கமாட்டேன்.
இரவல் துணியாம், இரவல் துட்டாம், இழுத்துக்கொட்டு மேளத்தை ; இறுகக் கட்டுத் தாலியை.
இரவல் சதமா, திருடன் உறவா ?
இரவல் சேலையை நம்பி இடுப்புக் கந்தையை எறிந்தாளாம்.
இரவல் சோறு பஞ்சம் தாங்குமா ?
இரவிமுன் பனிபோல்.
இரவிலுண்ணுமல் பகலுண்ணுதவனுக்குப் பெருத்தலில்லை.
இரவிக் போனாலும் பறக்கப்போக வேண்டும்.
இராகு திசையில் வாழ்ந்தவனும் இல்லை, இராஜதிசையில் கெட்டவனும் இல்லை.
இராக்கண்ட கனவு மிடாப்போல வீங்கின கதை.
இராஜ சமூகத்திற்கு எலுமிச்சம் பழம் சிறப்பு.

இராஜப் பயலோடே கூடித் தாதப்பயலும் கெட்டானும்.
இராஜன் ஆனாலும் தன் தாய்க்கு மகனே.
இராஜன் எவ்வழியோ குடிகள் அவ்வழி.
இராஜன் ஏறிய குதிரைக்கு மேடு ஏது பள்ளமேது ?
இராஜன் செங்கோல் தன் நாடு வரையில்.
இராஜன் மெச்சினது ரம்பை.
இராஜா இருக்க பட்டணம் அழியுமா ?
இராஜா கடன்படப் புழுக்கை காடித் தண்ணீர் குடித்தது போல
இராஜா கேட்கக் கேட்க இன்றென்று புறப்படுதென்றானும்.
இராஜா மகள் ஆனாலும் கொண்டவனுக்குப் பெண்டுதான்.
இராஜாவின் பலமிருந்தால் அஷ்டமத்துச் சனி என்ன செய்யும்.
இராஜாளியைக் கண்ட கொக்குப் போல.
இராஜீகம் தெய்வீகம் எப்படியோ ?
இராட்சதனுக்கு ஒரு புரோட்சதன்.
இராப்பட்டினி பாயோடே.
இராயர் ஏறின குதிரைக்கு மேடேது பள்ளம் ஏது ?
இராவுத்தனே சினந்திருக்கும்போது குதிரை கோதுமை ரொட்டிக்கழுததாம்.
இராவுத்தனை தள்ளினதும் அல்லாமல் குழியும் பறித்ததாம் குதிரை.
இருக்கிற அன்றைக்கு எருமை மாடு தின்றாற்போல.
இருக்கிறவன் ஒழுங்காய் இருந்தால்தானே சிரைக்கிறவன் செவ்வையாய் சிரைப்பான்.
இருக்கிறவன் நல்லவனானால் இடைப்பந்தியிலிருந்தால் என்ன, கடைப்பந்தியில் இருந்தால் என்ன ?
இருட்டு வீட்டுக்குள் போனாலும் திருட்டுக் கைபோகாது.
இருதலைக்கொள்ளி எறும்புபோல ஆனேன்.
இருந்த கால் மூதேவி, நடந்தகால் சீதேவி.
இருந்தும் கெடுத்தான், பாவி செத்தும் கெடுத்தான்.
இருபத்தோரு மழையும் எண்ணி ஊற்றியது.
இரும்பு அடிக்கிற இடத்தில் ஈக்கு என்ன வேலை ?

இரும்பு கோணினால் யானையை வெல்லலாம். கரும்பு கோணினால் கட்டியும் பாகுமாம்.

அரும்பு கோணினால் அதன் மணங்குன்றுமோ நரம்பு கோணினால் நாமதற்கு என் செய்வாம் ?

இரும்பு பிடித்தவன் கையும் சிரங்கு பிடித்தவன் கையும் சும்மாயிராது.

இலைபழுப்பு ஆனாலும் குலப்பழுப்பு ஆகாது.

இல்லாது பிறவாது அள்ளாது குறையாது.

இழவுக்கு வந்தவள் தாலியறுப்பாளா?

இளம் கன்று பயமறியாது.

இளமையில் முயற்சி முதுமையில் காக்கும்.

இன்றிருப்பார் நாளையில்லை.

இன்றைக்கு என்பதும் நாளைக்கு என்பதும் இல்லை என்பதற் கடையாளம்.

இன்றைக்குச் செத்தால் நாளைக்கு இரண்டு நாள்.

## ஈ

ஈக்கு விஷம் தலையில் தேளுக்குக் கொடுக்கில்.

ஈசன் எப்படியோ ; அப்படியே தாசன்.

ஈச்சமுள் கொண்டு இறுக இறுகத் தைத்தாலும் தேற்றிய வசனம் சொல்லாமல் விடான்.

ஈட்டி எட்டின மட்டும் குத்தும், பணம் பாதாளம்வரை பாயும்

ஈசன் கோயில் இருநாள் ஒருநாள் கந்தாயம்.

ஈரத்துணி போட்டு கழுத்தறுப்பான்.

ஈரைப்பேனாக்கி பேனைப் பெருமாளாக்குகிறான்.

# உ

உடையவன் இல்லாச்சேலை ஒரு முழக்கட்டை.
உண்ட சோற்றிலே நஞ்சைக் கலந்தாற்போல
உண்ட களைப்பு தொண்டருக்கும் உண்டு.
உண்ட வீட்டுக்கு இரண்டகம் பண்ணலாமா?
உண்டிசுருங்குதல் பெண்டிற்கு அழகு.
உண்டு கொழுத்தால் நண்டு வளையில் இருக்குமா?
உண்டுருசி கண்டவனும் பெண்டுருசி கண்டவனும் விடான்.
உண்ணப் படையுண்டு வெல்லப் படையில்லை.
உன்னுக்கை அறுத்து சுண்ணும்புக் குறியிடுவேன்.
உண்ணுச் சொத்து மண்ணுய்ப்போகும்.
உண்ணுமல் ஒன்பது வீடு போகலாம், உடுக்காமல் ஒரு வீடும் போக லாகாது.
உடைமையும் கொடுத்து அருமையும் குலைவதா?
உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லாது.
உண் உண் என்று உபசரிப்பான் இல்லாத வாசலிலே உண்ணுமை கோடி பெறும்.
உடும்புக்கு இரண்டு நாக்கு உனக்கு என்ன இரண்டு நாக்கா?
உண்ட உடம்பு உருளும், தின்ற பாக்கு சிவக்கும்.
உண்டவள் உண்டுபோக என்தலை விண்டு போவதா?
உண்ணுமல் தின்னுமல் உறமுறைக் கீயாமல்.
உண்பது நாழி உடுப்பது நான்குமுழம், எண்பது கோடி நினைந் தெண்ணும் மனம்.
உண்பாரைப் பார்த்தாலும் உழுவாரைப் பார்த்தல் ஆகாது?
உண்மை சொல்லி கெட்டாரும் இல்லை பொய் சொல்லி வாழ்ந்தாரும் இல்லை.
உதட்டிலே உறவும் உள்ளே (நெஞ்சிலே) பகையும்.
உதட்டுக்கு மிஞ்சின பல்லும், திருட்டுக்கு மிஞ்சின கையும் ஆகாது.

உதவாப் பழங்கலமே, ஓசையில்லா வெண்கலமே.
உதவி செய்வாருக்கு இடையூறு ஏது ?
உதறுகாலி வந்தாள் உள்ளதையும் கெடுத்தாள்.
உதிக்கின்ற கதிரோன் முன்னே ஒளிக்கின்ற மின்மினியைப் போல.

உதைத்த கால் புழுக்கிற போதல்லவா புழுக்கும்.
உதைப்பானுக்கும் வெளுப்பான் சாதி வண்ணான்.
உத்தமனுக்கு எத்தாலும் கேடு இல்லை.
உத்திராடத்தில் ஒரு பிள்ளையும் ஊர்வாரியில் ஒரு நிலமும்.
உபசரியாத வீட்டிலே உண்ணுதிருப்பதே கோடி தனம்.
உபசாரம் செய்தவர்க்கு அபசாரம் பண்ணுவதா ?
உபசார வார்த்தை வாய்க்குக் கேடு, தூற்றுப் பருக்கை வயிற்றுக்கு கேடு.

உப்பிட்டவரை உள்ளளவும் நினை.
உப்பிருந்த பாண்டமும், உபாயம் இருந்த நெஞ்சமும் தப்பாமல் தட்டுண்டு உடையும்.

உப்பில்லா பண்டம் குப்பையிலே.
உப்புக்கண்டம் பறிகொடுத்த பாப்பாத்தி போல விழிக்கிருள்.
உப்பு எடுத்த கையாலே கர்ப்பூரம் எடுக்க வேண்டும்.
உப்புத் தண்ணீரும் கப்பு மஞ்சளும் ஊறிப் போச்சுது.
உப்புநீர் மேகம் சேர்ந்தால் உலகிற் பிரவாகம்.
உப்பு மிஞ்சினல் தண்ணீர் போடு தண்ணீர் மிஞ்சினல் உப்பைப் போடு.

உப்பும் கற்பூரமும் ஒன்ருய் வழங்குமா?
உப்பும் சோறும் உணர்த்தியாய் உண்ணவில்லையா?
உப்பைத் தொட்டுக்கொண்டு உரலை விழுங்குவது போல.
உம் என்ருளாம் காமாட்சி ஓட்டிக் கொண்டாளாம் மீனுட்சி.
உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாமோ?
உயிரிருந்தால் உப்பு விற்றும் பிழைக்கலாம்.
உயிரோடு ஒரு முத்தம் தராதவள் செத்தால் உடன் கட்டை ஏறுவாளா?

உயிர் போம்போதும் தைரியம் விடலாகாது.
உரலில் அகப்பட்டது உலக்கைக்குத் தப்புமா?

உரலுக்கு ஒரு பக்கம் இடி, மத்தளத்திற்கு இருபக்கமும் இடி.
உருக்கமாய் உள்ள சிற்றுத்தே ஒதுக்கில் வாடி கட்டி அழ.
உருசிகண்ட பூனை உறிக்கு உறி. தாவுமாம்.
உருத்திராக்ஷப் பூனை உபதேசம் பண்ணினது போல்.
உருவத்தை அல்ல; குணத்தைப்பார்; பணத்தையல்ல சனத்தைப்பார்.
உருவிய வாளை உறையில் இடாத வீரன்.
உலகத்துக்கு ஞானம் பேய், ஞானத்துக்கு உலகம் பேய்.
உலகம் பலவிதம்.
உலகில் பெண் என்றால் பேயும் இரங்கும்.
உலக்கை தேய்ந்து உளிபிடி ஆச்சுது.
உலக்கைப் பூசைக்கு அசையாதவள் திருப்பாட்டுக்கு அசைவாளா?
உலக்கையாலே காதுகுத்தி உரலாலே தக்கை யிட்டது போல.
உலைவாயை மூடினாலும் ஊர்வாயை மூடமுடியுமா?
உல்லாச நடை மேலுக்குக் கேடு, மினுக்கு எண்ணெய் தலைக்குக் கேடு.
உழக்கு உள்ளூர்க்கு, பதக்குப் பரதேசிக்கு.
உழவிற்கு ஏற்ற கொழு.
உழவின் மிகுந்த ஊதியம் இல்லை.
உழவும் தரிசும் ஓர் இடத்திலே, ஊமையும் செவிடனும் ஒரு மடத்திலே.
உழவுமாடு என்றால் ஊரிலே விலைபடாதா?
உழுகிற நாளில் ஊருக்குப் போனால் அறுக்கிற நாளில் ஆள் தேவை யில்லை.
உழுகிறமாடு பரதேசம் போனால் அங்கு ஒருவன் கட்டி உழுவான், இங்கு ஒருவன் கட்டி உழுவான்.
உழுகிறவன் கணக்குப் பார்த்தால் உழக்கேனும் மிஞ்சாது.
உழுவானுக்கு ஏற்ற கொழு, ஊராருக்கு ஏற்றதொழு.
உளி எத்தனை, மலை எத்தனை?
உழைக்கிற கழுதை என்றைக்கும் உழைத்தே தீரவேண்டும்.
உள்ளக் கருத்து வள்ளலுக்குத் தெரியும்.
உள்ளங்கைப் பால் சோற்றை விட்டு புறங்கையை நக்கியது போல.

உள்ளங்கைப் புண்ணுக்குக் கண்ணாடி ஏன்?
உள்ளங்கை நெல்லிக் கனிபோல.
உள்ளது சொல்ல ஊருமல்ல; நல்லது சொல்ல நாடுமல்ல.
உள்ளதும் கெட்டதடா நொள்ளைக்கண்ணா.
உள்ள தெய்வங்களை ஒருமிக்க வருத்தினாலும் பிள்ளை கொடுக்கிற தெய்வம் புருடன்.
உள்ளதைச் சொன்னால் நொள்ளைக் கண்ணிக்கு நோப்பாளம்.
உள்ளதையும் கெடுத்தான் கொள்ளிக்கண்ணன்.
உள்ளதில் ஒன்றும் குறையாது கள்ளமில்லா மனத்தவர்க்கு.
உள்ளம் தீயெறிய உதடு பழம் சொரிய.
உள்ளிய தெள்ளியராயினும் ஊழ்வினை பைய நுழைந்திடும்.
உள்ளுக்குள்ளே கொட்டின தேளே, ஒரு மந்திரம் சொல்கிறேன் கேளு.
உள்ளூரிலே விலைபடாத மாடா அசலூரில் விலைபடும்.
உள்ளே பார்த்தால் ஓக்காளம் வெளியே பார்த்தால் மேற்பூச்சு.
உறவு உண்ணாமல் கெட்டது, உடம்பு உடுக்காமல் கெட்டது.
உறியிலே கட்டி தூக்கினும் அழுகல் பூசணிக்காய் அழுகலே.
உறைமோருக்கு இல்லாத வீட்டில் விலைமோருக்குப் போனது போல.
உற்ற கணவனும் ஒரு நெல்லும் உண்டானால் சித்திரம்போலே குடிவாழ்க்கை செய்யலாம்.
உற்றார்க்கு ஒரு பிள்ளைகொடான், நமனுக்கு நாலு பிள்ளை கொடுப்பான்.
உற்றார் தின்றால் புற்றாய் விளையும்; ஊறார் தின்றால் வேராய் விளையும்.
உனக்கும் பேபே உன் அப்பனுக்கும் பேபே.
உனக்கு யான் அபயம் எனக்கு நீ அபயம்.
உன் காலை நீயே கும்பிடாதே.
உன் தொண்டையைப் பாம்பு பிடுங்க.
உன் பிள்ளையைத் தின்று தண்ணீர் குடிக்க.
உன் மதம் மண்ணாய்ப் போக.
உன் வண்டவாளம் உல்லாம் எனக்குத் தெரியும்.
உன் வாயிலே மண்விழ.

உன்னை அறுத்துப்போட்டால் பத்துக் காணிக்கு எருவாகும்.
உன்னை அள்ளதுள்ள கொண்டுபோக.
உன்னைப் பிடி என்னைப்பிடி உலகாத்தாள் தலையைப்பிடி.
உன்னை வஞ்சித்தவனை ஒரு போதும் நம்பாதே
உன்னை வெட்டி பலிபோட.
உன்னோடு பிறந்ததில் மண்ணோடே பிறக்கலாம்.

ஊக்கமது கைவிடேல்.
ஊக்கமுடைமை ஆக்கத்திற்கு அழகு.
ஊசிக்கு ஊசி எதிரேறிப் பாயுமா ?
ஊசிபோகிறது கணக்குப் பார்ப்பான் பூசணிக்காய் போகிறது தெரியாது.
ஊசி போல தொண்டையும் சாலு போல வயிறும்.
ஊசியை ஊசிக் காந்தம் இழுக்கும்; உத்தமனை சிநேகம் இழுக்கும்.
ஊணினால் உறவு, பூணினால் அழகு.
ஊணும் உறக்கமும் ஒத்தார்க்கு ஒத்தபடி.
ஊண் ஒடுங்க வீண் ஒடுங்கும்.
ஊத அறிந்தவன் வாதி, உப்பு அறிந்தவன் யோகி.
ஊதுகிற சங்கு ஊதினால் விடிகிற பொழுது விடிகிறது.
ஊத்தை போகக் குளித்தவனுமில்லை, பசி போகத் தின்றவனுமில்லை.
ஊத்தை வாயன்தேட நாற்ற வாயன் தின்ன.
ஊமை ஊரைக் கெடுக்கும் பெருச்சாளி வீட்டைக் கெடுக்கும்.
ஊமையன் பேச்சு பழகின பேருக்குத் தெரியும்.
ஊராரைப் பகைத்து உயிருடன் இருந்தவர் இல்லை.
ஊரார் உடைமைக்குப் பேயாய்த் திரிகிறான்.
ஊரார் பண்டம் உமிபோல், தன்பண்டம் தங்கம்போல்.

ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்.

ஊரார் வீட்டுக் கல்யாணமே ஏன் அவிழ்ந்தாய் கோவணமே.

ஊரார் வீட்டுச் சோற்றைப் பார் ஓசுபாடி வயிற்றைப் பார்.

ஊரார் வீட்டு நெய்யே என் பெண்டாட்டி கையே.

ஊரிலே கல்யாணம் மாரிலே சந்தணம்.

ஊரில் எளியாரை வண்ணான் அறிவான், சாதிப் பொன் பூண்டாரைத் தட்டான் அறிவான்.

ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோவில் ஆண்டி.

ஊருக்கு ஓமல் வீட்டிற்கு வயிற்றெரிச்சல்.

ஊருக்கெல்லாம் ஒரு வழி உனக்கு ஒரு வழியா ?

ஊருக்கு எல்லாம் சாஸ்திரம் சொல்லுகிற பல்லி கழுநீர்ப் பானையில் விழுந்தாற்போல.

ஊருக்கொரு வேசி யாருக்கென்று ஆடுவாள்?

ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.

ஊரெல்லாம் சுத்தி, எனக்கென்ன புத்தி, என் பேர் முத்தி.

ஊரென்று இருந்தால் சேரியும் இருக்கும்.

ஊரை உழக்கால் அளக்கிறான். நாட்டை நாழியால் அளக்கிறான்.

ஊரைச் சொன்னாலும் பேரைச் சொல்லாதே.

ஊரை வளைத்தாலும் உற்ற துணை இல்லை ; நாட்டை வளைத்தாலும் நல்லதுணையில்லை.

ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம்.

ஊர் இருக்கிறது பிச்சை போட ; ஓடிருக்கிறது வாங்கிக் கொள்ள.

ஊர் உண்டு பிச்சைக்கு ; குளம் உண்டு தண்ணீருக்கு.

ஊர் ஓட ஒக்க ஓடு ; நாடு ஓட நடுவே ஓடு.

ஊர் கூடி செக்குத்தள்ள, வாணியன் எண்ணெய் கொண்டு போக.

ஊர் நஷ்டம் ஊரிலே ; தேர் நஷ்டம் தெருவிலே.

ஊர்ப் பிள்ளையை முத்தமிட்டால் உதட்டுக்குக் கேடு.

ஊழிக்காய்ச்சல் அதிகமானல் குளியக்காரன் பாடு கொள்ளை.

ஊறுகாயைக் கடித்துக் கொண்டு ஒரு பானை சோற்றை எனதல்ல என்பான்.

ஊன்றக் கொடுத்த தடி மண்டையைப் பிளந்தது போல.

# எ

எக்குப்புடவை சேர்ந்தால் கைக்குண்டோ உபசாரம்

எங்கள் ஆத்துக்காரரும் கச்சேரிக்குப் போய் வந்தார்.

எங்கும் மடமாய் இருக்கிறது இருக்கத்தான் இடமில்லை.

எங்கே திருடினாலும் கன்னக்கோல் வைக்க ஓர் இடம் வேண்டும்.

எங்கே புகையுண்டோ அங்கே நெருப்புண்டு.

எச்சில் தின்றாலும் வயிறு நிறைய தின்னவேண்டும், ஏச்சுக் கேட்டாலும் விடியுமட்டும் கேட்க வேண்டும்.

எடுக்கிறது எருமைச்சுமை (தம்பி) படுக்கிறது பஞ்சமெத்தை.

எடுக்கிறது பிச்சை ; ஏறுவது பல்லக்கு.

எடுத்து மூடிவிட்டு எதிரே வந்து நிற்கிறாள்.

எடுப்பாரும் பிடிப்பாரும் உண்டானால் இளைப்பும் தவிப்பும் உண்டாகும்.

எடுப்பாரைக் கண்டால் குடம் கூத்தாடும்.

எட்டாக் கனியைப் பார்த்து இச்சித்தென்னபலன்.

எட்டாம்பேறு பெண் பிறந்தால் எட்டிப் பார்த்த வீடு குட்டிச்சுவர்.

எட்டி பழுத்தென்ன ஈயாதார் வாழ்ந்தென்ன?

எட்டினால் குடுமியைப் பிடி எட்டாவிட்டால் காலைப்பிடி.

எட்டு குஞ்சு அடித்தாலும் சட்டிக்கறி ஆகாது.

எட்டேகால் லட்சணமே, எமனேறும் வாகனமே

எட்டிச் சுவரே, கூரையில்லா வீடே.

எண்சாண் உடம்பிற்கு சிரசே பிரதானம்,

எண்ணைத் தொலையாது ஏட்டிலடங்காது.
எண்ணமெல்லாம் பொய் எமன் ஓலை மெய்.
எண்ணறக் கற்று எழுத்தற வாசித்தாலும் பெண்புத்தி பின்புத்தியே.
எண்ணிச் செய்கிறவன் செட்டி எண்ணுமற் செய்கிறவன் மட்டி.
எண்ணித் துணிக கருமம் துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கு.
எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்.
எண்ணெய்ச் செலவொழிய பிள்ளை பிழைத்தபாடில்லை.
எண் மிகுத்தவனே திண் மிகுத்தவன்.
எதார்த்தவாதி வெகுஜன விரோதி.
எதிர்த்த வீடு ஏகாலி வீடு, அடுத்த வீடு அம்பட்டன் வீடு.
எது எப்படிப் போனாலும் தன் காரியம் தனக்கு.
எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்.
எத்திலே பிள்ளை பெற்று இரவலிலே தாலாட்டுவது.
எந்த மடத்துக்கு எந்த ஆண்டி சதம்.
எந்த வாக்கு பொய்த்தாலும் சந்தை வாக்கு பொய்க்காது.
எமன் வாயிலிருந்து வந்ததுபோலே.
எய்தவனிருக்க அம்பை நோவானேன் ?
எரிகிறதைப் பிடுங்கினால் கொதிக்கிறது அடங்கும்.
எரிகிற விளக்கானாலும் தூண்டுகோல் அவசியம்.
எரிகிற வீட்டில் பிடுங்கினது லாபம்.
எருதும் எருதும் போராட நடுப்புல்லு தேய்ந்தாற்போல.
எருது கெட்டார்க்கும் எட்டே கடுக்காய், இளம் பிள்ளைத் தாய்ச்சிக்கும் எட்டே கடுக்காய்.
எருது கொழுத்தால் தொழுவத்தில் இராது, பறையன் கொழுத்தால் பாயில் இரான்.
எருது தன் நோயை நினைக்கும், காக்கை தன் பசியை நினைக்கும்.
எருதின் நோய் காக்கை அறியுமா ?
எருதும் வண்டியும் ஒத்தால் மேடு பள்ளம் ஏது ?
எருமை மூத்திரம் எக்கியத்திற்கு ஆகுமா ?

எருமை மாட்டின் மேல் எத்தனை சூடு இருந்தாலும் தெரியாது, பசுமாட்டின் மேல் ஒரு சூடு இருந்தாலும் தெரியும்.

எருமை மாட்டின் மேல் மழை பெய்தது போல.

எருமை மாட்டை தண்ணீரில் போட்டுக்கொண்டு விலை பேசுகிறது.

எருவுக்குப் போனவன் இளையாளைக் கைப் பிடித்ததுபோல.

எலிக்குத் திண்டாட்டம் பூனைக்குக் கொண்டாட்டம்.

எலிக்குப் பயந்து வீட்டைக் கொளுத்தியது போல.

எலிப்புழுக்கை இரப்பில் இருந்தென்ன, வரப்பில் இருந்தென்ன ?

எலுமிச்சங்காய்க்கு புளிப்பு ஏற்றுவதுபோல.

எலும்பு இல்லா நாக்கு எல்லாப் பக்கமும் பேசும்.

எலும்பைக் கடிக்கிற நாய்க்குப் பருப்பும் சோறும் ஏன் ?

எலும்பைக் கடிப்பானேன், சொந்தப் பல்லும் போவானேன் ?

எல்லாத் தலையிலும் எட்டு எழுத்து, பாவி என் தலையில் பத்து எழுத்து.

எல்லாத்துக்கும் உண்டு இலையும் பழுப்பும்.

எல்லாம் அறிந்தவனும் இல்லை, ஒன்றும் அறியாதவனும் இல்லை.

எல்லாம் தெரிந்த நாரி, நிமிர்த்தி ஏற்றடி விளக்கை.

எல்லாம் சொல்லுமாம் பல்லி, கழனிப் பானையில் விழுமாம் துள்ளி.

எல்லாரும் ஆலின்கீழ் நுழைந்தால், இவன் ஆலின் நிழலின் கீழே நுழைவான்.

எல்லாரும் ஏறி இளைத்த குதிரையின் மேல் சாஸ்திரியார் ஏறி சறுக்கி விழுந்தார்.

எல்லாரும் பல்லக்கு ஏறினால் யார் பல்லக்கைத் தூக்குவது ?

எல்லைப் பாழ்பட்டாலும் கொல்லைக் கடமை விடார்.

எவன் ஆகிலும் தான் சாக மருந்துண்பானா?

எழுத வாசிக்கத் தெரியாமற் போனாலும் எடுத்துக் கவிழ்க்கத் தெரியும்

எழுதாக் கடனுக்கு அழுதால் தீருமா ?

எழுதியவன் ஏட்டைக் கெடுத்தான், படித்தவன் பாட்டைக் கெடுத்தான்

எழுதிய விதி அழுதால் தீருமா?

எழுதி வழங்கான் வாழ்க்கைக் கழுதை புரண்ட களம்.

எழுதுவது அருமை, எழுதியதைப் பழுதறவாசிப்பது அதிலும் அருமை.

எழுத்து அறிந்த வண்ணான் கிழித்து எறிவான் ஓலை.

எழுத்துக்குப்பால் மாறின கணக்கனும், படுக்கைக்குப் பால் மாறின தாசியும் வருத்தம் அடைவார்கள்.

எளியவன் பெண்டாட்டி எல்லோருக்கும் மைத்துனி.

எளியாரை வலியார் அடித்தால், வலியாரைத் தெய்வம் அடிக்கும்.

என் என்னுமுன்னே எண்ணெய் கொண்டு வருகிறான்.

என்னுக்கு ஏழு உழவு, கொள்ளுக்கு ஓர் உழவு.

என்னுக்குப் புள்ளுவரும்; எச்சிலுக்கு எறும்பு வரும்.

என்னுக்குள் எண்ணெய் எங்கும் நிறைந்திருக்கும்.

என்னுதான் எண்ணெய்க்கு உலருகிறது, எலிப்புழுக்கை என்னத்திற்கு உலருகிறது?

என்னும் பச்சரிசியும்போல் இருக்கவேண்டும்.

எறிகிறது முயலுக்கு; படுகிறது பற்றைக்கு.

எறிவானேன் சொறிவானேன்.

எறும்பின் கண் அதன் அளவிற்குப் பெரியது, ஆனையின்கண் அதன் அளவிற்குச் சிறியது.

எறும்பு ஊரக் கல்லும் தேயும்.

எறும்புக்குக் கொட்டாங்கச்சித் தண்ணீர் சமுத்திரம்.

எறும்புக்கும் தன் கையால் எண்சாண் உடம்பு.

எறும்பு முதல் எண்ணாயிரம் கோடி அழுதது.

என் அப்பன் கூத்தாடி எனக்கொன்றும் தெரியாது பிச்சை போடு.

என் இளக்காரம் விளக்காய் எரிகிறது.

என் காரியம் எல்லாம் நந்தன் படைவீடாய்ப் போயிற்று!

என் குடிகெட்டதும், உன் குடிகெட்டதும் பொழுது விடிந்தால் தெரியும்.

என் குடுமி அவன் கையில் அகப்பட்டுக்கொண்டது.

என் பிழைப்பு சிரிப்பாய்ச் சிரிக்கிறது தெருவிலே!

என் பேரில் தப்பிருந்தால் என்னை மொட்டையடித்துக் கழுதைமேல் ஏற்றிக்கொள்.

என் மகள் வாரத்தோடு வாரம் முழுகுவாள், என் மருமகள் தீபாவளிக்குத் தீபாவளி தலைமுழுகுவாள்.

என் முகத்தில் கரி தடவாதே!

என்றும் இடிக்குலைச்சல் எப்போதும் நீங்குவதில்லை.

என்றைக்கும் போடாத லட்சுமி இன்றைக்குப் போடவில்லை. தினம் போடுகிறவளுக்கு இன்றைக்கு என்ன வந்தது?

என்ன சொன்னாலும் என் புத்தி போகாது!

என்னடியம்மா, தெற்கத்தியாள் எந்நேரம் பார்த்தாலும் தொள்ளைக் காது?

என்ன மாயம், இடைச்சி மாயம்; மோரோடு தண்ணீர் கலந்த மாயம்.

என்னவாய்ச் சொல்லி இதமாய் உரைத்தாலும், கழுதைக்கு உபதேசம் காதில் ஏறுது.

என்னிலும் கதி கெட்டவன்தான் எனக்கு வந்து மாலை யிட்டான்.

என்னைக் கெடுத்தது நரை, என் மகளைக் கெடுத்தது அழகு.

என்னைப் போலக் குரலும் என் அக்காளைப் போல ஒயிலும் இல்லை என்கிறதாம் கழுதை.

# ஏ

ஏகமும் கெட்டவனே (செத்தவனே), ஏறடா பர்டையிலே.

ஏகாதசித் திருடியை ஏற்றடா ரதத்தின்மேல்.

ஏகாதசி மரணம் துவாதசி தகனம்.

ஏகாதசி விரதம் என்று நாக்கைப் பிடுங்கிக்கொள்வார்களா?

ஏகாலி வாஹனம் பொதி சுமந்ததைப் போல.

ஏச்சிலும் பேச்சிலும் வல்லவனே

ஏடாக்கூடக்காரனுக்கு வழியெங்கே என்றால், " போகிறவன் தலையின்மேல் " என்பான்

" ஏடாகூடம் பேசினால் அகப்பைச் சூனியம் வைப்பேன்.

ஏட்டில் அடங்காது ; எண்ணத் தொலையாது.

ஏட்டிலே சர்க்கரை என்று எழுதிவிட்டு நக்கினால் தித்திக்குமா?

ஏட்டுச் சுரைக்காயோ ; வீட்டுச் சுரைக்காயோ !

ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவுமா ?

ஏணிக் கொம்பிற்கு எதிர்க்கொம்பு போடலாமா ?

ஏணியைத் தள்ளிவிட்டுப் பரணிமேல் ஏறலாமா ?

ஏணுக்குக் கோணும் ஏட்டிக்குப் போட்டியும்.

ஏணிக் கழிக்குக் கோணற் கழி வெட்டலாமா ?

ஏண்டா கருடா சுகமா என்றால் இருக்கிற இடத்தில் இருந்தால் சுகம்தான் என்றான்.

ஏண்டா தம்பீ ரகுநாதா இதற்குள் வந்து புகுந்து கொண்டாய்.

" ஏண்டா தென்னை மரத்தில் ஏறுகிறாய்?" என்றால்
" கன்றுக் குட்டிக்குப் புல்லுப் பிடுங்க !" என்கிறான்
" தென்னை மரத்திலே ஏதுடா புல் ?" என்றால்
" அதுதானே கீழே இறங்குகிறேன் " என்கிறான்.

" ஏண்டா பட்டப்பகலில் திருடுகிறாய் ?" என்றால்
" என் அவசரம் உனக்குத் தெரியுமா ?" என்கிறான்.

ஏண்டா முடிச்சை அவிழ்க்கிறாய் ; என் பசி உனக்குத் தெரியுமா ?

" ஏன் பாட்டி மஞ்சள் குளித்தாய் ?" என்றால் " பழைய நினைவடா பேரப்பிள்ளாய் " என்கிறாள்.

ஏண்டி பெண்ணே ! இளைத்தாய் குதிர்போல.

ஏண்டி பெண்ணே குந்தியிருக்கிறாய் ; சோறு பற்றாமல் !

ஏதும் அற்றவனுக்கு இரண்டு பெண்டாட்டி ஏன் ?

ஏமாந்தால் நாமம் போடுவான்.

ஏய்ச்சால் மதனியை ஏய்ப்பேன். இல்லாவிட்டால் பரதேசம் போவேன்.

ஏரி உடைவதற்கு முன்னால் அணைபோட வேண்டும்.

ஏரி நிறைந்தால் நீர் கசியும்.

ஏரி பெருகினால் எங்கும் பெருக்கு.

ஏரி நீரை கட்டுவது அரிது ; உடைப்பது எளிது

ஏரியின் மேல் கோபித்துக்கொண்டு கால் கழுவாமல் போனால், ஏரிக்கா நாறும் ?

ஏரியோ தண்ணீர் ; சூரிய தேவா.

ஏருழுகிறவன் இளப்பமானால், எருது மைத்துனன் முறை கொண்டாடும்.

ஏரை அடித்தேனோ : கூழை அடித்தேனோ ?

ஏர் உழுகிற பிள்ளை இளைத்துப் போகிறது ; பரியம் போட்ட பெண்ணைப் பார்த்து வளர் !

ஏர் பிடித்தவன் என்ன செய்வான் ; பானை பிடித்தவள் பாக்கியம்.

ஏர் பிடித்தவன் ஏழை;பானை பிடித்தவள் பாக்கியசாலி.

ஏலேல சிங்கன் பணம் ஏழுகடலில் போனாலும் திரும்பும்.

ஏவற்பேய் கூரையைப் பிடுங்கும்.

ஏவா மக்கள் மூவா மருந்து.

ஏவுகிறவனுக்கு வாய்ச்சொல்; செய்கிறவனுக்கு தலைச்சுமை.

ஏழாம் பொருத்தம் !

ஏழாயிரம் பொன் கொடுத்து வாங்கிய குதிரை பசிக்கு இறைப்பை பிடுங்கி தின்னுதாம் ; குருட்டுக் குதிரை ரொட்டிக்கு வீங்கினதாம்.

ஏழு அறை கட்டி அதனுள் வைத்தாலும் ஒரு தாழறையில் சோரம் போவாள்.

ஏழை அழுத கண்ணீர் கூரியவாளை ஒக்கும்.

ஏழை என்றால் எவர்க்கும் எளிது.

ஏழை சொல் அம்பலம் ஏறாது.

ஏழையைக் கண்டால் மோழையும் பாயும்.

ஏறச் சொன்னால் எருதுக்குக் கோபம் ; இறங்கச் சொன்னால் நொண்டிக்கு கோபம்.

ஏறமுடியாத மரத்திலே எண்ணாயிர மாங்காய்.

ஏறவிட்டு ஏணியை எடுத்தாற்போல.

ஏரு மடைக்கு நீரைப் பாய்ச்சுவதுபோல.

ஏறின கொம்பால் இறங்க வேண்டும்.

ஏறுகிற குதிரைக்கு எருதே மேல்.

ஏறுகிறவன் இடுப்பை எவ்வளவு தூரம் தாங்கலாம்

ஏறுமாறாய்ப் பேசுகிறதா ?

ஏறும் தேமல்; இறங்கும் படர்தாமரை; கூடு புருவம் குடியைக் கெடுக்கும்

ஏற்கெனவே மாமியார் பேய்க்கோலம்; அதிலும் மாமியார் எக்கிலி பேய்க்கிலி.

ஏற்கை வாசனை சேர்க்கை வாசனை.

ஏற்பது இகழ்ச்சி

ஏற்றக் கோலுக்குப் பிடித்தால்; அறுவாட் கோலுக்கு வரும்.

ஏற்றப் பாட்டுக்கு எதிர்ப்பாட்டு இல்லை.

ஏவையனைக் கண்டாளாம்; ஏணிப்பந்தம் பிடித்தாளாம்.

ஏன் என்பாரும் இல்லை; எடுத்துப் பார்ப்பாரும் இல்லை.

# ஐ

ஐங்காதம் போனாலும் அகப்பை அரைக்காசு.

ஐங்காதம் போவதற்கு அறிமுகம் தேவை.

ஐங்காதம் போனாலும் தன்பாவம் தன்னோடே.

ஐங்காயம் போட்டு அரைத்தாலும் கரைத்தாலும் தன் நாற்றம் போகாதாம் பேய்ச்சுரைக்காய்க்கு.

ஐந்து சிட்டுக்கு இரண்டு காசு விலை.

ஐந்தில் வளையாதது; ஐம்பதில் வளையாது.

ஐந்து விரலும் ஐந்து கன்னக்கோல்

ஐப்பசி மாதத்து எருமைக்கடாவும் மார்கழி] மாதத்து நம்பியானுஞ்சரி.

ஐப்பசி மாதத்து வெய்யிலில், அன்று உரித்த தோல் அன்றே காயும்.

ஐப்பசி மாதம் அழுகைத் தூற்றல்; கார்த்திகை மாதம் கனத்த மழை.

ஐம்பதிலே அறிவு; அறுபதிலே அடக்கம்; அறுபதுக்கு ஒன்றுமில்லை.

ஐம்பது வயதானுக்கு அரிவை ஏன் ?
ஐயப்பட்டால் பைய நட.
ஐயப்பன் குதிரை வையாளி விட்ட கதை.
ஐயப்பா, கையை விடு.
ஐயமான காரியத்தைச் செய்தலாகாது.
ஐயம் தீர்ந்தும் ; நெஞ்சாரவில்லை.
ஐயர் இடங்கொடுத்தாலும் அடியார்கள் இடங்கொடார்கள்.
ஐயர் கொண்டு வருகிற பிச்சைக்கு அறுபத்தாறு பை.
ஐயர் வருகிற வரையில் அமாவாசை காத்திருக்குமா ?
ஐயனார் கோவிலிலே யானையைப் பிடிக்க வேண்டும்.
ஐயனார் கோவில் செங்கல் அத்தனையும் தெய்வம்.
ஐயனார் படையில் குயவனார் பட்டதைப்போல.
ஐயா கதிர்போலே ; அம்மா குதிர்போலே.
ஐயாவுக்கு வித்தையில்லை ; அம்மாளுக்கு கர்வமில்லை.
ஐயோ என்றால் ஆறு மாதத்துப் பாவம் சுற்றும்.
ஐவருக்கும் தேவி ; அழியாத பத்தினி.



ஒக்கப் பிறந்த தங்கை ஓலமிட்டு அழச்சே, ஒப்பாரித் தங்கைக்கு சிற்றாடையாம்.
ஒடிந்த கோல் ஆனாலும் ஊன்று கோலாகும்.
ஒடுக்கம் சிதம்பரம் !
ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்.
ஒட்டி உலர்ந்த ஊமத்தங்காயைப் போல.
ஒட்டிக் கொண்டு சென்றாலும் தட்டிக் கழிக்கிறான்.
ஒட்டினாலும் உழக்குப்பால் பீச்சென்கிறதா.
ஒட்டினால் தொட்டிலும் கொள்ளும் ஒட்டாவிட்டால் கட்டிலுங் கொள்ளாது.

ஒட்டுத் திண்ணை நித்திரைக்குக் கேடு.

ஒண்ட வந்த எலி உரம் பெற்றதும் அண்டியிருந்த பூனை ஆலாய்ப் பறக்கிறது.

ஒண்ட வந்த பிடாரி ஊர்ப் பிடாரியைத் துறத்தியது போல.

ஒண்டிக்காரன் பிழைப்பும் வண்டிக்காரன் பிழைப்பும் ஒன்றுதான்.

ஒதி பெருத்தால் உரலாகுமா ?

ஒதி பெருத்தால் என்ன ; உதவாதவன் வாழ்ந்தாலென்ன ?

ஒதிய மரமும் சமயத்துக்கு உதவும்.

ஒதிய மரம் தூணுமோ ; ஒட்டாங்கிளிஞ்சல் காசாமோ !

ஒயிலாய்ப் பேசுகிறாள் ; ஆனால் கனமறிந்த கப்பரையுமல்ல ; கண்டறிந்த நாயும் அல்ல.

ஒய்யாரக் கொண்டையாம் தாழம்பூவாம்—அதன் உள்ளே இருக்குமாம் ஈரும்பேனும்.

ஒரு அச்சிலே உருக்கி வார்த்ததைப் போல.

ஒரு அடி அடித்தாலும் பட்டுக்கொள்ளலாம் ; ஒரு சொல் மட்டும் கேட்க முடியாது.

ஒரு உறையில் இரண்டு கத்தியா ?

ஒரு ஊரிலே இரண்டு பைத்தியக்காரனா ?

ஒரு ஊருக்கு ஒரு வழியா ?

ஒரு ஊருக்கு வழி சொல்ல : ஒன்பது ஊருக்கு வழி காட்டுகிறான்.

ஒரு கட்டு வைக்கோலைத் தண்ணீர் போட்டு ஒன்பது ஆட்கள் கூடி இழுத்ததைப் போல.

ஒரு கண் மூடி ஒரு கண் விழிக்கிறவன்.

ஒரு கண்ணிலே புகுந்து மறு கண்ணிலே வருபவன்.

ஒரு கண்ணில் வெண்ணெய், ஒரு கண்ணில் சுண்ணாம்பு ஏன் ?

ஒரு கம்பத்தில் இரண்டு ஆட்களைக் கட்டுவதா ?

ஒரு கரண்டி எண்ணெயைக் கொண்டு பலகாரஞ் சுட்டு பந்தி விசாரித்து பெண்டுகள் வாரிமுடித்து பெண்டுகளில் பிடிமானமில்லாமல் புறக்கடை வழியாகப் போய்விட்டது.

ஒரு காசு அகப்படுவது குதிரைக் கொம்பு.

ஒரு காசு கொடுக்காதவன் ஒரு வராகன் கொடுப்பானா ?

ஒரு காலைச் செய்த தச்சன் மறு காலுஞ் செய்வான்.

ஒரு குருவி இரை எடுக்க ; ஒன்பது குருவி வாயைத் திறக்க.

ஒரு குடம் பாலுக்கு ஒரு துளி பிரை.

ஒரு குண்டிலே கோட்டையைப் பிடிக்க முடியுமா ?

ஒரு கூடைக் கற்களும் தெய்வமாக இருந்தால், எந்தக் கல்லைத்தான் கும்பிடுவது ?

ஒரு கூடைச் செங்கல்லும் பிடாரியா ?

ஒரு கை தட்டினால் ஓசை எழும்புமா ?

ஒரு கை முழம் போடுமா ?

ஒரு சாண் காட்டிலே முழத்தடி வெட்ட.

ஒரு சுற்று சுற்றி வயிற்றைத் தடவிப் பார்த்துக்கொண்டதைப் போல.

ஒரு தரம் விழுந்தால் தெரியாதா?

ஒரு தலை இரண்டு ஆக்கினையா ?

ஒரு தாய் அற்றவருக்கு ஊரெல்லாம் தாய் !

ஒரு துட்டு ஒரு ரூபாயாக இருக்கிறது.

ஒருத்தர் போனவழி ஒருத்தர் போகவில்லை.

ஒருத்தன் ஜோலிக்குப் போகவுமாட்டேன் ஒரு காலை மிதித்தால் விடவும் மாட்டேன்.

ஒரு நன்றி செய்தவரை உள்ளளவும் நினை.

ஒரு நாள் கூத்துக்குத் தலையை சிரைப்பதா?

ஒரு நாளும் இல்லாத திருநாள்.

ஒருநாள் சிரிக்காதவள் திருநாளில் சிரித்தாள் ; திருநாளும் வெறும் நாளாயிற்று.

ஒரு நாள் ஒரு யுகமாக இருக்கிறது.

ஒரு பனை இரண்டு பாளை : ஒன்று கள்ளு ; ஒன்று நுங்கு.

ஒரு பணங் கொடுத்து அழச் சொல்லி ஒன்பது பணம் கொடுத்து ஓயச் சொன்னது போல.

ஒரு பணங் கொடுப்பானும் ஓயாமல் அழைப்பானும்.

ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்.

ஒரு பிள்ளை பெற்றவளுக்கு உறியிலே சோறு ; நாலு பிள்ளை பெற்றவளுக்கு நடுத்தெருவிலே சோறு.

ஒரு பிள்ளையும் பிள்ளையல்ல ; ஒரு மரமும் தோப்பல்ல.

ஒரு பிள்ளையென்று ஊட்டி வளர்த்தேன்,

ஒரு பெண் என்று ஊட்டி வளர்த்தால்; அது ஊர் மேலே போயிற்று.
ஒரு பொய்க்கு ஒன்பது பொய்.
ஒரு பொய்யை மறைக்க ஒன்பது பொய்யைச் சொல்ல வேண்டும்.
ஒரு மரத்துப்பட்டை ஒரு மரத்தில் ஒட்டுமா?
ஒருமனப்படு; ஓதுவார்க்கு உதவு.
ஒரு மிளகுக்கு ஆற்றைக் கட்டி இறைத்த செட்டி.
ஒரு மிளகும் நான்கு உப்பும் போதும்.
ஒரு முருங்கையும் ஒரு எருமையும் உண்டானல் வருகிற விருந்தை மனங்களிக்கச் செய்வேன்.
ஒரு முழுக்கிலே முத்து எடுக்க முடியுமா?
ஒருமைப்பாடு இல்லாத குடி ஒருமிக்கக் கெடும்.
ஒருவர் அறிந்தால் இரகசியம்; இருவர் அறிந்தால் பரகஸ்யம்.
ஒருவராய்ப் பிறந்தால் நன்மை; இருவராய்ப் பிறந்தால் பகைமை.
ஒருவனுடைய தாரம்; மற்றவனுக்குத் தாய்.
ஒருவனைக் கொன்றவன் உடனே சாவான்; பலரைக் கொன்றவன் பட்டமாளுவான்.
ஒருவன் குழியிலே விழுந்தால் எல்லோரும் அவன் தலையில் மண்ணை அள்ளிப் போடுவதா?
ஒருவன் தலையில் மாணிக்க மிருக்கிறதென்று வெட்டலாமா?
ஒரு காலிலே நிற்கிறான்.
ஒழுகாத வீடு உள்ளங்கையத்தனை போதும்.
ஒழுகுக்கு வைத்த சட்டியைப் போல.
ஒளியில்லா விட்டால் இருளையும், இருள் இல்லாவிட்டால் ஒளியையும் காணலாம்.
ஒள்ளியர் தெள்ளியர் ஆயின் ஊழ்வினை பைய நுழைந்துவிடும்.
ஒற்றைக்காலும் ஓரியுமாய்ச் சமசாரஞ் செய்கிறான்.
ஒன்றான தெய்வம் ஒதுங்கியிருக்க, மூலைவீட்டுத் தெய்வம் குங்கிலியத்துக்கு அழுததாம்.
ஒன்று ஒன்றாய் நூறு ஒருமிக்க நூறு?
ஒன்று கொண்டு எட்டு விற்றால் லாபம்.
ஒன்றைத் தெரிந்தவனுக்கு எல்லாம் தெரியாது.

ஒன்று நினைக்க ஒன்றாயிற்று.

ஒன்றும் அறியாளாம் கன்னி; ஓடிப் பிடித்ததாம் ஆறுமாத ஜன்னி.

ஒன்றே குதிரை, ஒருவனே ராவுத்தன்.

ஒன்றைப் பத்தாக்கு!

ஒன்றைப் பிடித்தால் உடனே சாதிக்க வேண்டும்.



ஊருராய்ப் போவானுக்கு வாழ்க்கைப்பட்டு ஓட்டமயொழிய நடையில்லை.

ஓங்கி அறைந்தால் ஏங்கி அழச் சீவனில்லை.

ஓசை காட்டிப் பூசை செய்!

ஓசை பெறும் வெங்கலம்; ஓசை பெறாது மண்கலம்.

ஓட மருந்துண்டு உறங்கி விழுந்தாயோ?

ஓடம் வண்டியிலும் வண்டி ஓடத்திலும் ஏறுவதுண்டு.

ஓடம் விட்ட ஆறும் அடி சுடும்.

ஓடவும் மாட்டான்; பிடிக்கவும் மாட்டான்; ஓயாமல் பேசுவான்.

ஓடி ஒரு கோடி தேடுவதைக் காட்டிலும் இருந்து ஒரு காசு தேடலாம்.

ஓடி ஆடி உள்ளங்காலும் வெளுத்தது.

ஓடிப்போன ஊரில் ஆதரித்தவன் கவுண்டன்!

ஓடிப்போன புருஷன் வந்து கூடிக் கொண்டாலும்; உடைமை மேல் உடைமை போட்டு மினுக்கிக் கொண்டாளாம்.

ஓடு இருக்கிறது நாடும் இருக்கிறது.

ஓடுகிற கழுதையின் வாலைப் பிடித்தால் உடனே கொடுக்கும் உதை!

ஓடுகிற பாம்பைக் கையால் பிடித்து, உண்ணுகிற சோற்றில் மண்ணைப் போட்டுக் கொள்ளும் காலம்.

ஓடுகிற பாம்பைக் கையால் பிடிக்கும் வயது.

ஓடுகிறவனைக் கண்டால் துரத்துபவனுக்கு எளிது.
ஓடுகிற வெள்ளம் அணையில் நிற்குமா?
ஓடுமீன் ஓட உறு மீன் வரும் அளவும் வாடியிருக்குமாம்—கொக்கு!
ஓட்டத்துக்குப் பாக்குப் பிடிக்கிறான்.
ஓட்டைக் கப்பலுக்கு ஒன்பது மாலுமி.
ஓட்டைக் குடத்திலேதான் சர்க்கரை இருக்கும்.
ஓட்டைச் சட்டியானாலும் கொழுக்கட்டை வெந்தால் சரி.
ஓட்டைத் தோண்டியும் அறுந்துபோன தாம்புக் கயிறும்.
ஓட்டைப் பானையில் விட்ட தண்ணீரைப்போல.
ஓட்டை மணியானாலும் ஓசை நீங்குமா?
ஓணான் வேலிக்கு இழுக்க : தவளை தண்ணீருக்கு இழுக்க.
ஓதாதாருக்கு இல்லை உணர்வோடு ஒழுக்கம்.
ஓதுவார் எல்லாம் உழுவான் தலைக்கடையில்.
ஓதுவார்க்கு உதவு.
ஓதுவானுக்கு ஊரும் ; உழுவானுக்கு நிலமும் இல்லையா?
ஓம பிண்டத்தை நாய் இச்சித்ததைப்போல.
ஓயா மழையும் ஒழியாக் காற்றும்.
ஓய்ச்சலும் இல்லை ; ஒழிவும் இல்லை.
ஓரக்கண்ணியைப் பழிக்கிறான் ஒற்றைக் கண்ணன்.
ஓரஞ் சொன்னவன் குடித்தனம் போல.
ஓர் ஆண்டி பசித்திருக்க உலகமே கிறு கிறென்று சுழலும்.
ஓர்ப்படியாள் பிள்ளை பெற்றாள் என்று ஒக்கப் பிள்ளை பெறலாமா?

# ஔ

ஔவியம் பேசுதல் எவ்விதமும் கேடு.
ஔவை சொல்லுக்கு அச்சமில்லை.
ஔவையார் மேலும் குற்றம் உண்டு; அண்ணாவி பேச்சுக்கும் பழுதுண்டு.



கக்கத்தில் நிமுண்டுகிற கை நமன்கை.
கக்கின பிள்ளை தக்கும்.
கங்காஸ்னனம் துங்கா பானம்.
கங்கைக்குப் போன கிடாவைப்போல.
கங்கையிலே படிந்தாலும் பேய்ச் சுரைக்காய் நல்ல சுரைக்காய் ஆகாது.
கங்கையிலே பிறந்த நத்தை சாலிக்கிராமம் ஆகாது.
கங்கையில் முழுகினாலும் பாபம் தீராது.
கங்கையில் முழுகினாலும் காக்கை அன்னம் ஆகுமா?
கசக்கி முகரலாமா?
கசடர்க்கு இல்லை கற்றோர் உறவு.
கசடர்க்கு யோகம் வந்தால், கண்ணும் மண்ணும் தெரியாது.
கசிந்து வந்தவன் கண்ணைத் துடை.
கச்சற்கருவாடு மோட்சத்திற்குப் போனாலும் பிச்சைக்காரன் மோட்சத்துக்குப் போக மாட்டான்.
கஞ்சிகண்ட இடம் கைலாசம்; சோறு கண்டஇடம் சொர்க்கம்.
கஞ்சித் தண்ணீருக்குக் காற்றாய்ப் பறக்கிறான்.
கஞ்சிவரதப்பா என்றால் எங்கடா வரதப்பா என்கிறான்.
கஞ்சி வார்க்க ஆளில்லையென்றாலும் கச்சை கட்ட ஆளிருக்கிறது.
கடலிலே ஏற்றம் போட்ட கதை.
கடலிலே துரும்பு கிடந்தாலும் கிடக்கும்,மனதிலே ஒரு சொல் கிடவாது.
கடலிலே பிறந்த உப்புக்கும் மலையிலே பிறந்த நார்த்தங் காய்க்கும் உறவுண்டு.
கடலிலே போட்டுவிட்டுச் சாக்கடையில் தேடுவதா ?
கடலில் இட்ட பெருங்காயத்தைப்போல.
கடலில் கரைத்த புளியைப்போல.

கடலில் கையைக் கழுவிவிடுவதா?
கடலுக்குக் கரை போட்டவர்களுண்டா?
கடலைத் தாண்ட காலுண்டு; கால்வாயைத்தாண்ட காலில்லை
கடல் கொதித்தால் விளாவ நீர் ஏது?
கடல் தாண்ட மனமுண்டு, கால்வாயைத் தாண்டக் காலில்லை.
கடல் திடல் ஆகும், திடலும் கடலாகும்.
கடல் நீர் இருந்தென்ன காஞ்சிரைப் பழுத்தென்ன ?
கடல் மீனுக்கு நீந்தவா கற்றுக்கொடுக்க வேண்டும் ?
கடல் வற்றினல் கருவாடு தின்னலாம் என்று உடல் வற்றிச் செத்ததாம் கொக்கு.
கடவுள் இருக்கிருர்.
கடனோடு கடன், கந்தப் பொடி காற்பணம்.
கடன் இல்லாத கஞ்சி கால்வயிறு.
கடன்காரனுக்குக் கடனும் பழிகாரனுக்குப் பழியும் கொடுத்துத் தீர வேண்டும்.
கடன் கொண்டார் நெஞ்சம்போல கலங்கினன் இலங்கை வேந்தன்!
கடன் பட்டும் பட்டினி கிடப்பதா ?
கடன் வாங்கினும் கல்யாணம் செய்.
கடன் வாங்கிக் கடன் கொடுத்தவனும் கெட்டான் ; மரம் ஏறிக் கை விட்டவனும் கெட்டான்.
கடன் வாங்கியும் பட்டினி; கல்யாணம் பண்ணியும் பிரம்மச்சாரி
கடா கடா என்றாலும் மருந்துக்கு ஒரு பீர் என்கிருன்.
கடா பின் வாங்குவதெல்லாம் பாய்ச்சலுக்கு அடையாளம்.
கடாவானாலும் உழக்குப் பால் கறக்காதா என்கிருன்.
கடிப்பதற்கு ஒரு எலும்பும் இல்லை ; காதில் மினுக்க ஓலையும் இல்லை.
கடிக்கமாட்டாத பாக்கு உத்தம தானம்.
கடிக்க வரும் நாய்க்கு தேங்காய் கீற்றைப் போட்டாற்போல.
கடிக்கிற நாய்க்கு கழுத்தில் குறுங்கயிறு.
கடிதான சொல் அடியிலும் பெரிது.
கடித்த நாயை வெறி நாய் என்பதுபோல.
கடித்த நாய்க்குக் காடியைக் கொடு.

கடித்த பாம்புக்குப் பால் வார்த்தால், அது விஷத்தைத்தான் கக்கும்.

கடித்த வாயைத் துடைத்ததுபோல.

கடித்தாலும் கடிக்கட்டும் நீ சும்மாயிரு.

கடிவாளம் இல்லாத குதிரை.

கடுகத்தனை நெருப்பானாலும் போரைக் கொளுத்திவிடும்.

கடுகிலும் கால் திட்டம் கரண்டி; அதிலும் கால்முட்டை எண்ணெ கடன் வாங்கி, என் தலை சீவிக் கட்டி, மகள்தலை வாரிக் கட்டி, குறை யெண்ணெய் வைத்த இடத்தில் அசல் வீட்டுக்காரி வந்திடறிவிட்டாள்; அது பெருகி ஏரி பெருகினால்போல் பெருகி ஓடுகிறது என்றாள்.

கடுகுக் களவும் களவுதான்; கற்பூரக் களவும் களவுதான்.

கடுகு சிறுத்தாலும் காரம் போகுமா?

கடுகு போகிற இடத்தைத் தடிகொண்டு தேடுவான்; பூசணி போன இடம் தெரியாதாம்.

கடுகும் மலையாச்சு; மலையும் கடுகாச்சு.

கடுகைத் துளைத்து ஏழ்கடலைப் புகுத்தியதுபோல.

கடுக்காய்க்கு அகணி நஞ்சு: சுக்கிற்குப் புறணி நஞ்சு.

கடுங்காற்று மழை கூட்டும்; கடுஞ்சிநேகம் பகை கூட்டும்.

கடுஞ்சிநேகம் கண்ணுக்குப் பகை.

கடுஞ் செட்டுக் கண்ணைக் கெடுக்கும்.

கடுஞ்சொற் கேட்டால் காதுக்குள் கொப்பளம்.

கடு முடுக்கடா சேவகா, கம்பாவிடா சம்பளம்.

கடும்பசி, கல்மதிலை உடைத்தாவது களவுசெய்யச் சொல்லும்.

கடும்போரில் கை விடலாமா?

கடை கெட்ட மூளிக்குக் கோபங் கொண்டாட்டம்.

கடை கெட்ட வாழ்வு தலைகட்ட நேரமில்லை.

கடைக்குக் கடை ஆதாயம்.

கடைக்குக் கடை ஆள் இருப்பார்கள்.

கடைத்தேங்காயை எடுத்து, வழிப்பிள்ளையாருக்கு உடைத்ததைப்போல.

கடைந்த மோரிலேயே குடைந்து வெண்ணெய் எடுப்பாள்.

கடையச்சே வராத வெண்ணெய்; குடையச்சே வரப் போகிறதா?

கடையிலே கட்டித் தூக்கினாலும்; அழுகற் பூசணி அழுகலேதான்.

கட்டக் கருமணியில்லை யென்றாலும் பெயரென்னவோ பொன்னம்மாள்!

கட்டாணித்தனமாய் கலியாணஞ் செய்தான்.

கட்டாந்தரையில் தேள் கொட்டக் குட்டிச் சுவரில் நெறி கட்டியதாம்.

கட்டி அழுகிறதுபோது; கையும் துழாவுகிறது.

கட்டி அழுகையிலே என் மகளே, உனக்குப் பெட்டியிலே கை என்ன?

கட்டிக் கொடுத்த சோறும், கற்றுக் கொடுத்த வார்த்தையும் எதுவரைக்கும் உதவும்?

கட்டிக் கொண்டு வரச் சொன்னால் வெட்டிக் கொண்டு வருகிறான்.

கட்டித் தங்கமானால் கலீரென்று ஒலிக்குமா?

கட்டிலைத் திருப்பிப் போட்டால் தலைவலிபோகும்.

கட்டில் உள்ள இடத்தில் பிள்ளையைப் பெற்று, சுக்கு கண்ட இடத்தில் கஷாயம் குடிப்பாள்.

கட்டிவைத்த பணத்தைக் தட்டிப் பறித்தாற் போல.

கட்டினவனுக்கு ஒரு வீடானால், கட்டாதவனுக்குப் பலவீடு.

கட்டின வீட்டுக்கு எட்டு வக்கணை.

கட்டின வீட்டுக்குப் பழுது சொல்வார் பலர்.

கட்டுக்கு அடங்காத காளையைப் போல.

கட்டுக்கு அடங்காத பிடாரியைப் போல.

கட்டுக்குக் கட்டு மாற்றிக் கட்டவேண்டும்.

கட்டிவைத்த பூனையை வா 'புஸ் புஸ்' என்றால் வருமா?

கட்டுச்சாதத்தில் எலிக் குஞ்சை வைத்துக் கட்டியதைப் போல.

கட்டுச் சோற்று மூட்டையையும் கைக்குழந்தையையும் எடுக்க லாகாது.

கட்டுப்படாத பெண் கொட்டுப்போட்டு ஓடியது,

கட்டுப்பட்டாலும் கவரிமயிரால் கட்டுப்பட வேண்டும், குட்டுப்பட்டாலும் மோதிரக்கையால் குட்டுப்பட வேண்டும்.

கட்டுமரத்தை சென்னக்குன்னி அரிப்பது போல.

கட்டை (உடம்பு) இருக்கிறமட்டும் கஷ்டமுண்டு,

கட்டைப்பாறையை விழுங்கிவிட்டுசுக்குக் கஷாயம் குடித்தது போல.

கட்டையிலே வைக்க.

கட்டை விளக்குமாற்றுக்குப் பட்டுக்குஞ்சலம் கட்டியதைப் போல.

கட்டோடே போனல் கனத்தோடு வரலாம்.

கணக்கு அதிகாரத்தைப் பிளக்கும் கோடாலி.

கணக்குப்பிள்ளைப் பெண்சாதி கம்மல் போட்டாள் என்று காரியக்காரன் பெண்சாதி காதை அறுத்துக் கொண்டாளாம்.

கணக்கனுக்குப் பட்டினி உடன்பிறப்பு.

கணக்கன் கணக்கு அறிவான், தன் கணக்கைத்தான் அறியான்.

கணக்கன் கணக்கைத் தின்னுவிட்டாலும் கணக்கனை கணக்கு தின்றுவிடும்.

கணக்கன் வீட்டுக் கல்யாணம் விளக்கெண்ணெய்க்குக் கேடு.

கணக்கு அறிந்த பிள்ளை வீட்டில் இருந்தால் வழக்கு அருது.

கணக்குக் குஞ்சையும் காக்கைக் குஞ்சையும் கண்ட இடத்திலே கண்ணைக்குத்து.

கணக்கிலே கயிறு கோர்த்து இருக்கிறது

கணக்கைப் பார்த்தால் பிணக்கு வரும்.

கணபதி பூஜைக்குக் கைமேல் பலன்.

கணக்கனைப்பிரிந்து அயல்வீட்டில் இருக்காதே.

கணவனை வைத்துக் கொண்டல்லவோ, கள்ளமாப்பிள்ளையை கொள்ள வேண்டும்,

கணுக்கால் பெருத்தால் கணவனைத் தின்பாள்.

கண்கட்டி மந்திரமா காட்டவந்தாய் ?

கண்கட்டிய புழுவைப்போல.

கண்கண்டது கை செய்யும்.

கண்கொத்திப் பாம்பைப்போல இருந்தாலும் கண்ணிலே மண்ணைப் போடுகிறான்.

கண் குருடு ஆனாலும் நித்திரையில் குறைவில்லை.

கண் குற்றம் கண்ணுக்குத் தெரியுமா ?

கண்கெட்டபிறகா சூரிய நமஸ்காரம் ?

கண் கண்டு வழி நட!

கண்ட கண்ட கோயிலெல்லாம் கையெடுத்துக் கும்பிட்டேன்.

கண்டது கற்கப் பண்டிதனாவான்.

கண்டதே காட்சி கொண்டதே கோலம்.

கண்டது காட்சி, பெற்றது பேறு.

கண்டது சொன்னால், மூள்வது பகை.

கண்டது பாம்பு, கடித்தது மாங்கொட்டை.

கண்ட மாப்பிள்ளையை நம்பிக் கொண்ட மாப்பிள்ளையை கைவிட்டதுபோல.

கண்டறியாதவன் பெண்டு படைத்தால், காடு மேடெல்லாம் இழுத்துத் திரிவான்.

கண்டார் கண்டபடி பேசுகிறார்கள்.

கண்டால் அல்லவோ, பேசுவார் தொண்டைமான்.

கண்டால் ஒரு பேச்சு, காணாவிட்டால் ஒரு பேச்சு.

கண்டால் காமாட்சி நாயக்கன் ; காணாவிட்டால் காமாட்டி நாயகன்.

கண்டிடில் ஆயம், காணாவிடில் மாயம்.

கண்டிருந்தும் மலத்தை கவிழ்ந்திருந்து தின்பார்களா ?

கண்டவன் எடுத்தால் கொடுப்பானா ?

கண்டு செத்த பிணமானால் சுடுகாட்டில் எரியும்.

கண்டு பேசக் காரியமும் இருக்கிறது ; முகத்தில் விழிக்க வெட்கமாகவும் இருக்கிறது.

கண்டுங் காணாமலும், கேட்டுங் கேட்காமலும் இருக்க வேண்டும்.

கண்டுங் காணாதது போல விட்டுவிட வேண்டும்.

கண்ணாடி நிழலில் கண்ட பணம், கடன் கொடுக்க உதவுமா ?

கண்ணாடி, பித்தன், கருங்குரங்கு, காட்டானை, மண்ணாளும் வேந்தனோடு ஐந்தும் பித்து.

கண்ணாலே கண்டாலும் மண்ணாலே மறைக்க வேண்டும்.

கண்ணாரக் காணாதது மூன்றில் ஒரு பங்கு!

கண்ணாலே சிவன் கடகடவென்று போனாலும் வண்ணானுக்கு மழை நஞ்சு.

கண்ணாலே சிவன் கடகடவென்று போனாலும் வண்ணாரக் கழுதை பொதி சுமந்தே தீரவேண்டும்.

கண்ணால் கண்டதற்குச் சாட்சி ஏன்?

கண்ணான பேரையெல்லாம் புண்ணாக்கிக் கொண்டு, கரும்பான பேரையெல்லாம் வேம்பாக்கிக் கொண்டேன்.

கண்ணான மனதைப் புண்ணாக்குகிறான்.

கண்ணிமை கைநொடி அளவே மாத்திரை.

கண்ணிமைபோலக் காக்கிறான்—கடவுள்!

கண் இமையா முன்னே பறந்து போனான்.

கண்ணில் அகப்பட்ட எண்ணெய் கரிக்குமோ?

கண்ணில் குத்திய விரலைக் கண்டிப்பாருண்டோ?

கண்ணிலே படுவது புருவத்திலே படியும்.

கண்ணிலே கண்டது கோடி; காணாதது அனந்த கோடி.

கண்ணில் புண் வந்தால் கண்ணாடி பார்க்கலாகாது.

கண்ணினால் எண்ணுவான்.

கண்ணிற் கண்டது பொய், கருதி விசாரித்தது மெய்.

கண்ணினாற் கண்டதைக் கையினாற் செய்யவேண்டும்.

கண்ணின் முன்னே ஒன்றைச் சொல்லி, காணாத இடத்தில் ஒன்றைச் சொல்வது—கபடன் செயல்.

கண்ணுக்கு இமை காதமா?

கண்ணுக்குக் கண்ணாயிருந்தும் கடைப் பெண்ணுக்கு வழி பார்க்கிறான்.

கண்ணும் கலத்தண்ணீர் விடும்.

கண்ணுக்குள் சம்மணம் கட்டுவாள்.

கண்ணுங் கருத்தும் உள்ளபோது கிடைக்காதது; கண் பஞ்சடைந்த பின் கிடைக்குமா?

கண்ணும் புண்ணும் உண்ணத் தீரும்.

கண்ணைக் கட்டி காட்டிலே விட்டதுபோல.

கதைக்குக் காலில்லை; பேய்க்குப் புட்டம் இல்லை.

கத்தரிக்காய்க்குக் காலுங் கையும் முளைத்ததுபோல்.

கத்தரிக்காய் சொத்தை என்றால் அரிவாள்மணை குற்றம் என்கிறாள்.

கத்தி எட்டின மட்டும் பாயும், பணம் பாதாளம் மட்டும் பாயும்.

கத்தியையும் வெண்ணெயையும் காய்ச்சித் துவைத்துக் கடை.

கத்தியைப் பார்க்கிலும் கனகோபம் கொலை செய்யும்.

கத்து கத்து என்றால் கழுதையும் கத்தாது! பாடு பாடு என்றால் புலவனும் பாடான்.

கந்தப் பொடிக் கடைக்காரனுக்கு கடுகு வாசனை தெரியுமா ?

கந்தை ஆனாலும் கசக்கிக் கட்டு; கூழானாலும் குளித்துக் குடி.

கந்தைக்கு ஏற்ற பொந்தை; கழுவுக்கு ஏற்ற கோமுட்டி.

கந்தைத் துணியும் கரி வேஷமும் ஆனான்.

கந்தையைக் கட்டி வெளியே வந்தால் கண்ணாட்டி ;
வெள்ளையைக் கட்டி வெளியே வந்தால் வெள்ளாட்டி.

கப்பலிலே பாதிப்பாக்கை போட்டுவிட்டுத் தேடுவதுபோலே !

கப்பல் உடைந்தாலும் கன்னத்தில் கை வைக்காதே !

கப்பல் ஏறிவிட்ட கடனை கொட்டை நூற்றால் அடைக்க முடியுமா ?

கப்பல் ஏறிவிட்ட காகம் கலங்குமா ?

கப்பலில் ஏற்றிக் கடலில் கவிழ்த்ததுபோல.

கப்பல் போல் துறை கிடக்கும்.

கப்பல்காரன் பெண்டாட்டி தொப்பைக்காரி, கப்பல் உடைந்தாலோ பிச்சைக்காரி.

கப்பற்காரன் வாழ்வு காற்றடித்தால் போச்சு.

கப்பி என்றால் வாயைத் திறக்கிறது ; கடிவாளம் என்றால் வாயை மூடிக் கொள்ளுகிறது.

கம்பளியில் சோற்றைப் போட்டு மயிர் மயிர் என்கிறதா ?

கம்பளி விற்ற பணத்திற்கு மயிரா முளைக்கும் ?

கம்பன் வீட்டு கட்டுத்தறியும் கவிபாடும்.

கம்புக்குக் களை வெட்டினாற் போலுமிருக்க வேண்டும். தம்பிக்கு பெண் பேசினாற் போலுமிருக்க வேண்டும்.

கம்புமாவு கும்பினால் கூழுக்கு அழுமா ?

கம்மாளன் துணி வாங்கினால் கால்மயிர் தெரிய வாங்குவான், அதைச் சலவைக்குப் போட்டாலும் வேகாது.

கம்மாளன் பசுவைக் காதறுத்துக் கொண்டாலும் உள்ளே செவ்வரக்கு பாய்ச்சியிருப்பான்.

கம்மாளன் பசுவைக் காதறுத்துக் கொள்ளவேண்டும்.

கம்மாளன் பணம் கரியும் பொறியுமாய் போய்விடும்.

கம்மாளன் பல்லக்கேறினுல் கண்டவர்க்கு எல்லாம் இறங்க வேண்டும்.

கம்மாளன் வீட்டிலே பிள்ளை பிறந்தால், விலைமகள் தெருவில் சர்க்கரை வழங்குவாள்.

கயிறு இல்லாத பம்பரம்போலே.

கயிற்றைப் பாம்பென்று கலங்குவதுபோல்.

கரடி கையில் உதை பட்டவனுக்குக் கம்பளிக்காரனைக் கண்டாலும் பயம்!

கரடிக்குப் பிடித்த இடமெல்லாம் மயிர்.

கரடி துரத்தினுலும் கைக்கோளர் தெருவில் போக வழியிருக்குமா?

கரடி புற்றிலே வாயை வைத்ததுபோல.

கரணம் தப்பினுல் மரணம்

கரதலாமலகம் (நெல்லிக்காய்) போல் காண்கிறது.

கரிசனப்பட்ட மாமியாள், மருமகளைப் பார்த்து ஏக்க முற்ருளாம்.

கரி விற்ற பணம் கரியாய் இருக்குமா?

கரு இல்லாத முட்டையும் குரு இல்லாத வித்தையும்

கருங்கண்ணிப் பட்டாலும் கரையான், திரும்பிப் பாரான்.

கருங்காலிக் கட்டைக்கு வாய்கோணுத கோடாலி கதலித் தண்டுக்கு கோணிவிடும்.

கருடனைக் கண்ட பாம்புபோல.

கருடன் இடமானுல் எவன் கைப்பொருளும் தன் கையிற் சேரும்.

கருடன் காலில் சதங்கை கட்டியதுபோல.

கருடனுடன் ஊர்க்குருவி பறப்பதுபோல.

கருப்பங்கட்டியிலும் கல் இருக்கும்.

கருப்பிலே பிள்ளையை விற்ருற்போல.

கருப்பங்கட்டி ஆதாயத்தை எறும்பு இழுத்துக்கொண்டு போச்சு!

கருப்பட்டி என்றவன் வாயைச் சுளுப்பட்டி என்று நக்குவதா?
கருமத்தை முடிப்பவன் அருமை யொன்றும் பாரான்.
கருமான் உலைக்களத்தில் நாய்க்கென்ன வேலை ?
கரும்பு ஆலையில் அகப்பட்ட எறும்புபோல.
கரும்பிலும் தேள் இருக்கும்; கள்ளியிலும் பால் இருக்கும்.
கரும்பு கசந்தால் வாய் குற்றம்.
கரும்பு கட்டோடு இருந்தால் எறும்பு தானே வரும்.
கரும்புக்கு உழுத புழுதி காய்ச்சிய பாலுக்குச் சர்க்கரை ஆகுமா ?
கரும்புக்கு கணு இருந்தால் கசக்குமா ?
கரும்பு தின்னக் கூலி வேண்டுமா ?
கரும்பை முறித்துக் கழுதையை அடித்த கதை !
கரும்பும் வேம்பாகும் காதல் போதையிலே.
கரும்பு ருசியென்று வேரோடு பிடுங்கலாமா ? (கல்லலாமா ?)
கரும்புள்ளபோதே ஆலையிலிடு.
கருவேல மரத்துக்கு நிழலில்லை ; கன்னனுக்கு முறையில்லை.
கரைகாணாத கப்பலை போலத் தவிக்கிறான்.
கரைப்பார் கரைத்தால் கல்லுங் கரையும்.
கர்த்தனைக் குருடன் கண் தான் வேண்டுவான்.
கர்மத்தால் வந்தவற்றைத் தருமத்தால் தொலைக்க வேண்டும்.
கல உமி தின்றால் ஒரு அரிசி தட்டாதா ?
கலகம் பிறந்தால் நியாயம் பிறக்கும்.
கலக்கினும் கடல் சேறாகாது.
கலத்துக்குத் தெரியுமா கர்ப்பூர வாசனை ?
கலப்பணத்தைக் காட்டிலும் ஒரு கிழப்பிணம் நல்லது.
கல நெல்லுக்கு கல உமியிருக்குமா ?
கலப்பாலில் ஒரு துளி விஷத்தைக் கலந்ததுபோல.
கலப்பாலையும் சோற்றையும் காலால் உதைத்துவிட்டு, விலை மோருக்கும் கூழுக்கும் வெளியே தவிப்பதா ?
கலப்பால் கறக்கலாம் துளிப்பால் முலைக்கு ஏறுமா ?
கலப்பால் குடித்த பூனை ஆழாக்கு பால் குடியாது.
கலமா இடித்தவன் பாவி, கப்பி இடித்தவன் புண்ணியவதியா?
கலம் கலந்தால் குலம் கலக்கும்.

கலம் குத்தினுலும் பதர் அரிசி ஆகாது.
கலம் பதரைக் குத்தினுலும் அரிசி ஆகுமா?
கலியாண சந்தடியிலே தாலிகட்ட மறந்ததுபோல.
கலியாணத்திலும் பஞ்சமில்லை களத்திலும் பஞ்சமில்லை.
கலியாணப் பந்தலிலே கட்டின ஆடுபோல.
கலியாணம் எங்கே? காசுப் பையிலே.
கலியாணம் கழிந்தால் கைச் சிமிழ் கிட்டாது.
கலியாணம் செய்தும் சந்நியாசியா?
கலியாணம் பண்ணின வீட்டில் ஆறுமாசம் கருப்பு.
கலியாண வீட்டில் பந்தற் காலை கட்டி அழுபவள் செத்த வீட்டில் சும்மா இருப்பாளா?
கலியாண வீட்டில் பிள்ளை வளர்ந்தாற்போல.
கலியாண வீட்டிற்குப் போயறியான்; மேளச் சத்தமும் கேட்டறியான்
கலியாண வீட்டுக்குக் கறி அகப்பை, சாவு வீட்டுச் சோற்று அகப்பை.
கலையும் மப்பைக் கண்டு கட்டியிருந்த விதையை வட்டிக்கு விட்டானும்.
கல் ஆனுலும் கணவன், புல் ஆனுலும் புருஷன்.
கல் எறிக்குத் தப்பினுலும் தப்பலாம் கண் எறிக்குத் தப்ப முடியாது.
கல்மேல் எழுத்துக் கலையுமோ?
கல்வடிச் சத்தன் போனவழி; காடுமேடு எல்லாம் தவிடுபொடி.
கல்லா ஒருவன் குலநலம் பேசுதல் நெல்லுடன் பிறந்த பதராகும்மே.
கல்லாடம் படித்தவனேடு மல் ஆடாதே.
கல்லாதவரே கண்ணில்லாதவர்.
கல்லாதார் செல்வத்திலும் கற்றூர் வறுமை நலம்.
கல்லார் உறவகல காடிக் கடல்கட.
கல்லார் உறவினும் கற்றூர் பகை நலம்.
கல்லாலே கட்டிச் சாந்தாலே பூசியிருக்கிறதா?
கல்லினும் வன்மை கண்மூடா நெஞ்சம்.
கல்லில் நார் உரிக்கிறதுபோல.
கல்லின் மேலிட்ட அம்புகளைப் போல.

கல்லுக்குள் தேரையைக் காப்பாற்ற வில்லையா ?
கல்லினுள் தேரையும், முட்டைக்குள் குஞ்சையும் ஊட்டி வளர்ப்பது யார் ?
கல்லுங் கரைய மண்ணும் உருக அழுதாள்.
கல்லுங் கரையுமோ கற்றூண் இற்றுப் போமோ ?
கல்லும் காவேரியும் உள்ள மட்டும் வாழ்க.
கல்லு வருகிற விசையைக் கண்டால் பல்லைச் சிக்கென மூட வேண்டும்.
கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ ?
கல்லை யாகினும் கரைக்கலாகும் கல் மனதைக் கரைக்கலாகாது.
கல்லுளிச் சித்தன் போனவழி காடுமேடெல்லாம் தவிடு பொடி.
கல்லைக் கட்டி முத்தங் கொடுத்தாற் போல.
கல்லைப் போலக் கணவனிருக்கக் கஞ்சிக்கு அழுவானேன் ?
கல்வி யழகே அழகு.
கல்வியில்லாச் செல்வமும் கற்பில்லா அழகும் கடுகளவும் பிரகாசிக்காது.
கல்வி என்ற பயிருக்குக் கண்ணீர் மழை வேண்டும்.
கல்வி கரையில கற்பவர் நாள் சில.
கல்வி கற்பதை விடத் தன் கருத்தை ஆய்வதே நன்மை.
கல்வி கற்றும் கழுநீர் பானையில் கையை விடுவது போல.
கல்விக்கு இருவர், களவுக்கு ஒருவர்.
கல் வீட்டுக்காரித் திருநாள் கழுக்கம்; குச்சு வீட்டுக்காரித் திருநாள் கூக்குரல்.
கவரைச் செட்டி மேலே கழுதை புரண்டேறினாற் போல.
கவைக்குத் தகாத காரியம் சபைக்குத் தகுமா ?
கழனியில் விழுந்த கழுதைக்கு அதுவே கைலாசம்.
கழியிருந்தால் கழுதையை மேய்த்துக் கொள்ளலாம்.
கழுகுக்கு மூக்கிலே வியர்ப்பது போல.
கழுக்கு மொழுக்கு என்றிருக்கிறான்.
கழுதை கெட்டால் குட்டிச்சுவர்.
கழுதைக்கு உபதேசம் காதிலே சொன்னாலும் அவலக் குரல் ஒழிய ஆங்கேதுமில்லை.

கழுதைக்கு ஏன் கடிவாளம் ?
கழுதைக்குத் தெரியுமா கற்பூர வாசனை.
கழுதைக்குப் பரதேசம் குட்டிச் சுவர்.
கழுதைக்கு வாழ்க்கைப்பட்டு உதைக்கு அஞ்சலாமா ?
கழுதை தேய்ந்து கட்டெறும்பாயிற்று
கழுதைப் புட்டையானாலும் கை நிறைய வேண்டும்,
கழுதைப் புண்ணுக்குத் தெருப் புழுதி மருந்து.
கழுதை மூத்திரத்தை நம்பிக் கட்டுச் சோற்றை அவிழ்ப்பதா ?
கழுதையின் காதிலே கட்டெறும்பை விட்டதைப் போல.
கழுத்தறுக்கும் கத்தியைக் கையிலே கொடுத்தது போல.
கழுத்திலிருப்பது உருத்திராட்சம் ; கையில் இருப்பது கன்னக்கோல்.

கழுத்துக்கு கத்தி வந்திருக்கச்சே செய்வதென்ன ?
கழுத்து மாப்பிள்ளைக்குப் பயப்படா விட்டாலும் வயிற்றுப் பிள்ளைக்குப் பயப்பட வேண்டும்.

கழுத்து வெளுத்தாலும் காகம் கருடன் ஆகாது ?
கழுநீர்ப் பானையில் விழுகின்ற பல்லியைப் போல.
கழுவிக் கழுவி ஊற்றினாலும் கவிச்சு நாற்றம் போகாது.
கழுவிய காலை சேற்றில் வைப்பதா ?
கழுவேறத் துணிந்த நீலி, கண்ணில் மை கரிக்கிறது என்றாளாம்.

களவும் கற்று மற.
களிறு வாயில் அகப்பட்ட கரும்பு மீளுமா ?
களை பிடுங்காத பயிர் காற்பயிர்.
கள் விற்றுக் கலப்பணம் சம்பாதிப்பதைவிடக் கற்பூரம் விற்றுக் காற்பணம் சம்பாதிப்பதே மேல் !

கள்ளப் பிள்ளையும் செல்லப்பிள்ளையும் ஒன்று ?
கள்ள மனம் துள்ளும்.
கள்ள மாடு சந்தை ஏறாது.
கள்ள வாசலைக் காப்பானைப் போல.
கள்ளனுக்கு ஊரெல்லாம் பகை.
கள்ளனைக் காட்டிக் கொடுத்தவன் பகை.
ள்ளனுக்குத் தெரியும் களவு முறை.

கள்ளனுமாகி விளக்கும் பிடிக்கிறான்,

கள்ளனை உள்ளே வைத்துக் கதவைச் சாற்றியது போல.

கள்ளனை நம்பினாலும் நம்பலாம் ; குள்ளனை நம்பக்கூடாது.

கள்ளன் செய்த சகாயம் ; காதை யறுக்காமல் கடுக்கனைக் கழற்றிக் கொண்டதுதான்.

கள்ளன் பிள்ளைக்கும் கள்ளப் புத்தி.

கள்ளன் பெண்சாதி கைம்பெண்.

கள்ளன் பெரிதா? காப்பான் பெரிதா ?

கள்ளி என்னடி கல் இழைப்பது ; காதில் இருப்பது பித்தளை.

கள்ளிக்குக் கண்ணீர் முந்தும்.

கள்ளிக்குத் தண்ணீர் கண்ணிலே ; நீலிக்குத் தண்ணீர் இமையிலே.

கள்ளிக்கு முள்வேலி இடுவானேன் ?

கள்ளிக்கும் கற்றாழைக்கும் களை வெட்டுவதா ?

கள்ளிக்கு வேலி ஏன் ; சுள்ளிக்குக் கோடாலி ஏன் ?

கள்ளுக் குடித்தவனுக்கு வாய் என்றும் மற்றது ஏதென்றும் தெரியாது.

கள்ளுண்ட குரங்கு.

கள்ளும் சூதும் இருக்கும் இடத்தில் விலைமகளும் கள்ளனும் கண்டிப்பாய் இருப்பார்கள்.

கள்ளை ஊற்றி உள்ளதைக் கேள்.

கள்ளை விட்டுக் காட்டுத் தேனைக் குடித்தது போல.

கறக்கக் கறக்க ஊறும் பசுவின் பால் ! படிக்கப் படிக்க ஊறும் மெய்ஞ்ஞானம்.

கறக்கிறது உழக்கு ; உதைப்பது பல்லுப்போக.

கறந்த பாலும் எச்சில் ; பிறந்த பிள்ளையும் எச்சில்.

கறந்த பாலையும் காகம் தொடாது.

கறந்த பாலைக் காய்ச்சாமல் குடித்தால் காசநோய் தானாகவே வரும்.

கறந்த பால் போல் பேசுகிறான்.

கறந்த பால் காம்புக்குள் ஏறுமா ?

கறவையுள்ளவன் விருந்துக்கு அஞ்சான்.

கறிக்கு இல்லாத வாழைக்காயை பந்தலில் தோரணங் கட்டினானாம்.

கறிக்குக் கல நெய் வார்த்தாலும் கணக்கோடு வார்க்க வேண்டும்.

கறுத்ததெல்லாம் தண்ணீர், வெளுத்ததெல்லாம் பால்.

கறுப்பு வெளுப்பு ஆகாது ; கசப்பு இனிப்பு ஆகாது.

கறையான் புற்றெடுக்கப் பாம்பு குடி புகுந்ததுபோல.

கற்கக் கசடறக் கற்றபின் அதுவே இனிப்பு.

கற்கண்டால் செய்த எட்டிக் காயும் கசக்குமோ ?

கற்பில்லாத அழகு ; வாசனையில்லாத மலர்.

கற்பெனப்படுவது சொல் தவறாமை.

கற்றவனிடத்திலா வித்தையைக் காட்டுவது ?

கற்றது கைமண்ணளவு ; கல்லாதது உலகளவு.

கற்றழைக் காய்ச்சியா குடிக்கப் பார்க்கிறாய்.

கற்றவரது கோபம் நீரின் பிளவு போல மாறும்.

கற்றவனுக்கு மயிரத்தனை ; கல்லாதவனுக்கு மலையத்தனை.

கற்றவனுக்கு வித்தை கால் நாழி.

கற்றவனும் உண்பான் ; பெற்றவனும் உண்பான்.

கத்தாழை நாற்றமும் பித்தளை வீச்சமும் போகாது.

கற்றோர் அருமை கற்றோரே அறிவர்.

கன ஆசை கன நஷ்டம்.

கனக மாரி பொழிந்தது போல.

கன தாராளம் மனது இறுகல்.

கனத்த உடைமைக்கு அனர்த்தம் இல்லை.

கனத்தால் இனமாகும் பணத்தால் சனமாகும்.

கனத்திற்கு நற்குணம் சுமைதாங்கி.

கனத்தைக் கரம் காக்கும், கருவாட்டுப் பானையை பூனை பார்க்கும்.

கனமழை பெய்தாலும் கருங்கல் கரையுமா ?

கனமுடன் கைப்பொருள் இழப்பான்.

கனவிலும் காக்கைக்கு மலம் தின்பதே நினைவு!

கனவில் கண்டவனுக்குப் பெண்ணைக் கொடுத்த கதை.

கனவில் உண்ட சோறு பசியைத் தீர்க்குமா ?

கனவில் கண்ட பணம் கடனைத் தீர்க்குமா ?

கனவில் கண்ட பொருள், கானில் கண்ட புனல்.

கனவில் கண்ட பொருள் கைக்கு எட்டுமா ?
கனிந்த பழம் தானே விழும்.
கனியை விட்டுக் காயைத் தின்கிறதா ?
கன்மத்தினுற் சாதியேயன்றி சென்மத்தினுல் இல்லை.
கன்று இருக்கப் பாலைக் கறவாத பசு, கன்று செத்த பிறகு கலப் பால் கறக்குமா?
கன்றுகளாய்க் கூடி களைபறிக்கப் போனுல் வைக்கோல் ஆகுமா செத்தை ஆகுமா ?
கன்று கெட்டால் காணலாம் தாயருகே.
கன்றுக்குட்டி கிட்டவும் கடன்காரன் கிட்டவும் இருக்கலாகாது.
கன்றுக் குட்டியை அவிழ்க்கச் சொன்னுர்களா கட்டுத் தறியைப் பிரிக்கச் சொன்னுர்களா?
கன்றும் பசுவும் காடேறி மேய்ந்தால் கன்று கன்று வழியே, பசு பசு வழியே.
கன்றுள்ளபோதே காணும்; செத்த பிறகா கொட்டப் போகுது.
கன்றை இழந்த பசுவைப்போல.
கன்றைக் கண்டு ஓடி வரும் பசுப்போல.
கன்றைக் காணுப் பசுப்போல.
கன்றைத் தேடி பசு தவிப்பதைப்போல.
கன்றை விட்டு மாட்டை முட்ட விடுவது.
கன்னக்கோலை மறைத்துவிட்டு கைச்சபமணியை சபிப்பது போல.
கன்னத்தில் அடித்தாலும் கதறியழச் சீவனில்லை.
கன்ன வாசல் கரிப்பானைபோல.
கன்னனுக்கு முன்னே கழுதை பரதேசம் போனுற்போல.
கன்னன் நடமாடக் குயவன் குடிப்போவான்.
கன்னி யிருக்கக் காளை மணம் போகலாமா ?
கன்னி யிருக்கக் காளை மனை ஏறலாமா?
கன்னிப்பூ மலரவில்லை.
காகத்திலே வெள்ளையுண்டா ?
காகம் இருக்கப் பழம் விழுந்தது போல.

காகம் இல்லாத ஊர் சோனகன் இல்லாத ஊர்.

காகம் ஏறப் பனம்பழம் விழுமா?

காகம் 'கா' என்றால் கணவனைப் போய் அப்பா என்று கட்டிக் கொள்வாளாம்.

காகத்தின் கழுத்து கருத்தென்ன வெளுத்தென்ன ?

காகம் காலையில் காகா எனக் கத்தும்.

காகம் வலமானால் ஆயுள் விருத்தியாகும்.

காக்கனுக்கும் பூக்கனுக்கும் பூத்தாயோ புன்னை கண்ணாளன் வருமளவும் பொறுக்கவில்லையே புன்னை.

காக்காயினும் கனசிவப்பு.

காக்காயின் கண்ணுக்கு பீர்க்கம்பூ பொன்னிறம்.

காக்காய்க்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு.

காக்காய் கூட்டம் போன்ற கட்டுக்கோப்பு.

காக்காய் பிடிப்பவனை நம்பாதே.

காக்காய் பிடிப்பவனுக்கே கலிகாலம்.

காக்கை இருந்த கொம்பு அசையாது.

காகம் ஏறவும் பனம் பழம் விழவும்.

காக்கைக்குருவி மூக்காலே கொறிக்கிறதுபோல.

காக்கைக்கு அஞ்சு குணம்.

காக்கையை விடக் கரியது களாப்பழம்.

காக்காய் கழுத்தில் சீட்டுக் கட்டியது போல.

காக்காயும் கத்திப் போகிறது; கருவாடும் உலர்ந்து போகிறது.

காக்கையும் குயிற்குஞ்சைத் தன் குஞ்சு போலக் காக்கும்.

காக்கையைக்கண்டு அஞ்சுவாள்; கரடியைப் பிடித்துக் கட்டுவாள்.

காசி இரண்டு எழுத்துதானே; காண எத்தனை நாள் செல்லும்?

காசிக்குப் போயும் கருமம் தொலையவில்லை.

காசிக்குப் போயும் மூடத் தவசி காலில் விழுவதா ?

காசிக்குப் போனாலும் அகப்பை அரைக்காசு.

காசிக்குப் போனாலும் கதி பெற வழியில்லை.

காசிக்குப் போனேன் காவடி கொண்டு வந்தேன்.

காசிமுதல் ராமேசுவரம் வரை.

காசிமுதல் ராமேசுவரம் வரையில் தெரிந்தவன்.

காசியில் இருந்தவன் கண்களைக் குத்தக் காஞ்சிபுரத்திலிருந்து கையை நீட்டிக் கொண்டு போனானும்.

காசில்லாதவனுக்கு வராகன் பேச்சு என்ன?

காசில்லாதவனை வேசியும் துப்ப மாட்டாள்.

காசுக்கு ஒரு குஞ்சு விற்றாலும் கணக்கன் குஞ்சு ஆகாது.

காசுக்கு ரெண்டு பீசுக்கு நான்கு.

காசுக்கு போன மானம் கோடி கொடுத்தாலும் வராது.

காசுப் பையோடே களவு போனால் கடையிலே செட்டிக்குக் காரிய மென்ன?

காசைக் கொடுத்து குத்துமாடு தேடுவதா?

காஞ்சிபுரத்துக்குப் போனால் காலை ஆட்டிக்கொண்டு சாப்பிடலாம்.

காஞ்சிபுரத்து உபச்சாரம்.

காசிக்குப் போய் தயிர் கொண்டு வந்ததைப்போல.

காடு காத்தவனும் கச்சேரி காத்தவனும் பலன் அடைவான்.

காடுஞ் செடியும் இல்லாத ஊருக்கு கழுதை முள்ளி கற்பக விருக்ஷம்.

காடு செடியும் அவளாகத் தோன்றுது என் கண்களுக்கே!

காடு வாவா என்கிறது; வீடு போபோ என்கிறது.

காடு விளைந்தாலும் ஒரு மேடு விளைந்தாலும் கடன் கழிந்து போம்.

காடு விளைந்தென்ன மச்சானே—நம்ம கையுங் காலுந்தானே மிச்சம்.

காடு விளையா விட்டாலும் கடமை போகுமா?

காடு வெந்தால் சந்தன மரமும் வேகாதோ?

காட்டானை உண்ட கனிபோலிருக்கும் தேட்டாளன் திரவியம்.

காட்டிக் கொடுத்துக் கடக்கப் போய் நிற்கலாமா?

காட்டிலே செத்தாலும் வீட்டிலேதான் தீட்டு.

காட்டில் யானையைக் காட்டி, வீட்டிலே பெண்ணைக் கொடுப்பதைப்போல.

காட்டில் புதைத்த கனதனமும், பாட்டிற் புதைத்த பழம் பொருளும், வீட்டில் மனையாள் மனமும் நாட்டில் அறிவது அரிது.

காட்டுக் கிளாக்காயும் கண்கெட்ட தயவில்லாத ஒறுைம் சேர்ந்து குலாவுவது போல.

காட்டிலே எரிந்த நிலாவும் கசட்டுக்கு செய்த நன்றியும் வீண்.

காட்டுக்குப் புலி ஆதரவு; புலிக்குக் காடு ஆதரவு.

காட்டுக்குப் போகிற வழியில் கண்டெடுத்த மாணிக்கம்.

காட்டுப் பாலுக்கு ஏற்ற கல்லுப்பு.

காட்டுப் புறுவுக்காக சதை அரிந்த மன்னன்போல.

காட்டுப் பூச்சிகள் எதிர்ப்பதைப்போல.

காட்டுப் பூனைக்கு சிவராத்திரி விரதமா?

காட்டுப் பேய்ச்சுரைக்காய் கறிக்கு உதவுமா?

காட்டு வாழை வந்தால், வீட்டு வாழ்வு போகும்.

காட்டேரி உடைமை ராத்தங்காது.

காடு வெட்டிச் சாயத்தவனுக்குக் கம்பு வெட்ட பயமா?

காணக் கிடைக்காத தங்கம்.

காணக் கிடைத்தது கார்த்திகைப் பிறைபோல.

காணப்பட்டன வெல்லாம் அறியத் தக்கன.

காணுது கண்ட கம்பங்கூழை சிந்தாது குடியடி சில்லி மூக்கி.

காணுதது கண்டாற்போல.

காணுமற் கண்டேனே கம்பங்கதிரை.

காணி ஆசை கோடி கேடு.

காணி கவிழ்ந்து போகிறதா?

காணி காணியாய்ச் சம்பாதிச்சுக் கோணி கோணியாய் செல வழித்ததுபோல.

காணிக்கு ஏத்ததுதான் கோடிக்கும்.

காணிச் சோம்பல் கோடி வருத்தம்.

காணியாளன் வீடு வேகச்சே காலைப் பிடித்து இழுத்த கதை.

காண்பாரைக் கண்டு கழுதையும் பரதேசம் போச்சாம்.

காது அறுத்தாலும் அறுக்கும் பேன் எடுத்தாலும் எடுக்கும் குரங்கு.

காதுகாது என்றுல் செவிடு செவிடு என்கிறுன்.

காதும் காதும் வைத்தாற்போல.

காது குத்தப் பொறுக்காதா?

காதுக்கு இட்டால் முகத்துக்கு அழகு.
காதை யறுத்தவன் கண்ணைக் குத்தினாலும் குத்துவான்.
காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்று வந்தவன் கொண்டு போனான்.
காந்தத்தின் முன் ஊசிக் கம்பித் தார்போல.
காந்தமும் ஊசியும் போல.
காந்தம் இழுத்த ஊசியைப்போல.
காப்புச் சொல்லும் கைமெலிவை.
காப்பானுக்கு கள்ளன் இல்லை.
காப்பொன்னிலும் மாப்பொன் திருடுவான்.
காமந்துக்குக் கண்ணில்லை.
காமனுக்குக் கண்ட இடத்தில் கண்.
காமாலைக் கண்ணனுக்குக் கண்டதெல்லாம் மஞ்சள்.
காயாகக் காய்த்துப் பூவாகப் பூத்ததாம்.
காயும் கனியும் உண்டானால் கார்த்திகை மாசம் கலியாணம்.
காயும் புழுவிற்குச் சாயும் நிழல்போல.
காய்ச்சலும் கழிச்சலும் சேர்ந்துவிட்டால் நம்புவதற்கில்லை.
காய்ச்சிக் குடிக்கிறதையும் கெடுத்தான்; கண்ணூரப்பட்டு விழுந்தான்
காய்ச்சி வார்த்த பெண்ணுக்கு பேச்சு மூச்சு அற்றது.
காய்ச்சின கஞ்சி வார்க்க ஆளில்லாமல் போனாலும் கச்சை கட்ட ஆளிருக்கிறது.
காய்ந்த கொம்பு பணியும்.
காய்த்த மரத்துக்குத்தான் கல்லடி படும்.
காய்த்தமரம் வளைந்து நிற்கும், நற்குணம் உடையோர் பணிந்து நிற்பர்.
காய்ப் பாரத்தைக் கொடி தாங்காதா?
காய்ந்த இரும்பு குடித்த நீரை விடாது.
காய்ந்த சுண்ணாம்பையும் வதங்கிய வெற்றிலையையும் இளைத்த ராஜாவையும் விடக்கூடாது.
காய்ந்த புலி ஆட்டு மந்தையில் விழுந்ததைப்போல.
காய்ந்த மரம் தளிர்க்குமா?
காய்ந்த மாடு கம்பங்கதிரில் விழுந்ததைப் போல.

காய்ந்த வானம் பெய்தால் விடாது.

காய்ந்தும் கெடுத்தது வெயில்; பெய்ந்தும் கெடுத்தது மழை.

காய்மகாரன் நெஞ்சிலே கொள்ளிக் கட்டையாற் சுட வேண்டும்.

காரணகுருவே காரிய குரு.

காராம் பசுவுக்குப் புல்லுமாம், நந்தவனத்துக்குக் காளையுமாம்.

காரிகை கற்றும் கவி பாடாதான், பேரிகை கொட்டிப் பிழைப்பது மேல்.

காரியக்காரன் கொல்லையிலே கழுதை வந்து மேய்கிறது.

காரியத்திலே கண் அல்லாமல் வீரியத்திலே இல்லை.

காரியம் ஆகுமட்டும் கழுதையின் காலைப் பிடி, அப்புறம் கழுத்தைப் பிடி.

காரியம் பெரிதா, வீரியம் பெரிதா?

கார் அறுக்கட்டும்; கத்தரி பூக்கட்டும்.

கார்த்திகை கால் கோடை.

கார்த்திகைக்கு மிஞ்சிய மழையும் இல்லை, கர்ணனுக்கு மிஞ்சிய கொடையும் இல்லை.

கார்த்திகைப் பிறையைக் கண்டதைப்போல.

கார்த்திகை மாதத்துப் பூமாதேவிபோல.

கார்த்திகை மாதத்தில் கடுமழை பெய்தால்; கல்லின் கீழ் இருக்கும் புல்லும் கதிர் விடும்.

காலகதியை யாருங்கடக்க மாட்டார்கள்.

காலங்கண்ட கூனி.

காலஞ் செய்வதைக் கோலஞ் செய்யாதே.

காலஞ் செய்வதை ஞாலம் செய்யாது.

காலஞ் செய்த கோலத்துக்கு யாரை வெறுப்பது.

காலக்ஷேபத்தில் கூலிக்குக் கத்தினாலும், கழுக்கட்டு மயிர் வெளியே தெரியக்கூடாதாம்.

காலடி வைக்கச்சே நீராலுல் கரை ஏறுவது எப்படி?

காலத்திற் பெய்த மழையைப்போல.

காலத்தால் செய்த நன்றி.

காலத்துக்கு ஏற்ற கோலம்.

காலத்துக்கு ஏற்றபடி பெருச்சாளி காவடி எடுத்து ஆடியதாம்,

காலம் அல்லாத காலத்தில் கடவேறி கதிர்காமா கதிர்காமா என்றால் கை கொடுக்குமா ?

காலம் அறிந்து ஞாலம் ஒழுகு.

காலம் அறிந்து பிழையாதான் வாலறுந்த குரங்கு.

காலம் கலிகாலம் அல்லவா ?

காலம் கெட்டுக் கிடக்கிறது. ஜாக்கிரதையாக இரு.

காலம் கெட்டுக் கைப்பிச்சை எடுத்தாற்போல.

காலம் போகும், வார்த்தை நிற்கும்; கப்பல் போகும் துறை நிற்கும்.

காலம் போன காலத்தில் மூலம் வந்து குறுக்கிட்டதுபோல.

காலாலே நடந்தால் காத வழி ; தலையாலே நடந்தால் எவ்வளவு தூரம்.

காலால் இட்ட வேலையை தலையால் செய்வான்.

காலால் நடக்காமல் காற்றாய்ப் பறக்கிறது.

காலால் முடிந்ததைக் கையால் தள்ள முடியாது.

காலிலே பட்டபிறகு கிரகசாரம் போய்விடாது.

காலிலே கட்டினால் விருது, குப்பையில் கிடந்தால் துணி.

காலில் சுற்றிய பாம்பு கடித்தாலொழிய விடாது.

காலில் பட்டது கண்ணில் பட்டது.

காலில் பட்டது கையிலும் படும் மூக்கிலும் படும்.

காலிலே விழுவது நல்லது, மேலில் விழுவது கெட்டது.

காலுக்கு உதவாத செருப்பைக் கழற்றி எறி.

காலுக்கு ஆகிற செருப்பு தலைக்கு ஆகுமா ?

காலுக்கு கடுப்பே தவிர கண்ட பலன் ஒன்றும் இல்லை.

காலுக்கு கை உதவி ; கைக்குக் கால் உதவி.

காலுக்குத் தக்க செருப்பும், கூலிக்குத் தக்க உழைப்பும்.

காலுக்குப் போட்டால் தலைக்குப் போடுகிறான்.

காலை இஞ்சி, கடும்பகல் சுக்கு, மாலை கடுக்காய் மண்டலந் தின்றால் கோலையூன்றிக் குறுகி நடப்பவர் கோலைவிட்டுக் குலாவி நடப்பாரே.

காலைக் கல்லு மாலைப் புல்லு.

காலைக் கேட்டுக் கொண்டா நடக்கிறது.

காலைச் சுற்றின பாம்பு கடியாமல் விடாது

காலைச் செல் பூத்தால் அடைத்த மழை அடங்கும்.
காலை துயில் வானும் மாலை இருப்பானும் பதர்.
காலைப் பனிக்கும் கண் விழிக்கும் ஒத்தது செல்வம்.
காலைப் பிடித்த சனியன் ஊரைச் சுற்றியடிக்கும்.
காலை மோட்சமும் வாலை ஞானமும் ஆகாது.
காலரை கொடுக்கிறேன் என்றால் காதவழி நடப்பான்.
கால் அளவே ஆகுமாம் கப்பலின் ஓட்டம்; நூலளவே ஆகுமாம் நுண் சேலை.

கால் ஆடக் கோல் ஆடும், கோல் ஆடக் குரங்கு ஆடும்.
கால் சிறிதாகில் கனல் ஊறும் கன்னியர்மேல், மால் சிறிதாகில் மனம் ஊறும்.

கால்நடைக்கு இரண்டு காசு, கைவீச்சுக்கு ஐந்து காசு.
கால்படி அரிசிக்காரன் உள்ளமட்டுந்தான்.
கால் போகாவிடத்தில் தலையிட்டுக் கொள்ளாதே.
கால்மாடு தலைமாடு தெரியாமல்.
கால்மாறிக் கட்டினால் கனம் குறையுமா?
கால்வாயைத் தாண்டாதவன் கடலைத் தாண்டுவானா?
காவடிப் பாரம் சுமப்பவனுக்குத் தெரியும்.
காவல்தானே பாவையருக்கு அழகு.
காவேரி ஆற்றை மறைப்பாய்; கார்த்திகை மாதத்துக் கற்கடக நட்சத்திரத்தை மறைப்பாயா?

காவேரி கஞ்சியாய்ப் போனாலும் நாய் நக்கித்தானே குடிக்க வேண்டும்?

காவோலை விழுந்ததென்று குருத்தோலை சிரித்ததாம்.
காளி தோட்டத்து கற்பக விருட்சம் யாருக்கும் உதவாது.
கானை போன வழியே கயிறு போகும்.
காளவாய்க்கு மழையும் கைம்பெண்ணுக்குப் பிள்ளையும்.
காறியுமிழ்ந்தவர்களைக் கண்டீர்களா? அங்கே ஒரு தட்டு வைத்தீர்களா?

காரிப்போன கருணைக்கிழங்கு பழம்புளியால் பதம் பெறும்.
காற்காசு பெறாது.
காற்காசுப் பூனை முக்காற்காசுத் தயிரைக் குடித்தது.
காற்றிலே அகப்பட்ட கப்பல்போல அலைகிறது மனம்.

காற்றிலே கருப்பிலே கண்டதில்லை.
காற்றில்லாமல் தூசி பறக்குமா?
காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்.
காற்றுக்கோ மழைக்கோ போர்த்துக்கொள்ள துணியிருக்கா.
காற்று காற்றோடே போயிற்று.
காற்றுக்கு எதிரே துப்பினால் முகத்துக்கு நேரே விழும்.
காற்றுக்கு எதிரே தோணி ஓடாது.
காற்றும் சிலரை நீக்கி வீசுமோ?
காற்றும் மழையும் கலந்து அடித்ததுபோல.
காற்றைப் பார்த்துக் கப்பல் நாட்டு.
காற்றைப் பிடித்துக் கரகத்தில் அடைக்கலாமா?
காற்றோடே வந்து மழையோடு போயிற்று.
கானலைத் தண்ணீராய்க் கண்டதைப்போல
கானலை நீரென்று எண்ணிய மான் ஓடி இளைத்ததைப்போல.

# கி

கிடக்கிறது ஓட்டுத்திண்ணை, கனவு காண்பது மச்சு வீடு.
கிடக்கிறது குட்டிச்சுவர்; கனவு காண்பது மச்சு மாளிகை.
கிடாவும் காளையும் பிணைந்தாற்போல.
கிடைக்காத சரக்கு கிடைத்ததைப்போல.
கிட்ட நெருங்க முட்டப் பகை.
கிட்டவா நாயே என்றால் மூஞ்சியை நக்குகிறது.
கிட்டாத ஒன்றை வெட்டென மற.
கிட்டினால் ராமா கோவிந்தா; கிட்டாவிட்டால் ஒன்றும் இல்லை.
கிணறு இருக்க மலை தோண்டாதே!
கிணறு இறைக்க இறைக்கச் சுரக்கும்.

கிணறு தப்பித் துரவில் விழலாமா?
கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டதுபோல.
கிணறு வெட்டித் தாகம் தீர்க்கலாமா?
கிணறு வெட்டித் தவளையையும் பிடித்து விடுவதா?
கிணற்றிலே கல்லைப் போட்டதுபோல.
கிணற்றில் இருக்கும் ஆமையைப் போலிருப்பவனுக்கு உலகம் தெரியுமோ?
கிணற்றில் தள்ளிக் கல்லையும் போட்டான்.
கிணற்றில் விழுந்தவன் மறுபடியும் விழுவானா?
கிணற்று ஆழமும் கயிற்று நீளமும் பார்க்கவேண்டும்.
கிணற்றுக்குத் தப்பித் தீயிலே பாய்ந்தான்.
கிணற்றுக்குள்ளிருந்து பேசுவதைப்போலப் பேசுகிறான்.
கிணற்றுக்குள்ளே கங்கை குதித்ததைப்போல.
கிணற்றுத் தண்ணீரை வெள்ளமா கொண்டுபோகும்?
கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பம் ஏன்?
கிணற்றுத் தவளை தண்ணீர் குடித்ததைக் கண்டது யார், குடியாததைக் கண்டது யார்?
கிணற்றைக் கண்டு கடல் ஒதுங்கிப் போகுமா?
கிணற்றைத் தூர்த்தால் வயிற்றைத் தூர்க்கும்.
கிண்டிவிட்டு கிளறிவிடு.
கிண்டிவிட்டு வேடிக்கை பார்க்கிறது.
கிண்ணி பட்டாலும் பட்டது, கிடாரம் பட்டாலும் பட்டது.
கிண்ணி வைத்துக் கிண்ணி மாற்றுகிறது.
கிரஹ சாந்திக்கு க்ஷவரம் செய்துகொள்வதா?
கிராமத்தைப் பார்க்கச் சொன்னால் சேரியைப் பார்க்கிறான்.
கிரிசை கெட்டு வரிசை மாறுகிறது.
கிரியை அற்றோன் மறை சாற்றுவது ஏன்?
கிருபாநிதியே கருணாநிதி!
கிளி பிடித்ததோ புலி பிடித்ததோ?
கிழக்கிடாவை புகழ்வது இகழ்ச்சியல்லவா?
கிழக்கிலும் மேற்கிலும் களவிலும் கடன் கொடாதே.
கிழக்குடலுக்குச் சோறும், இடி சுவருக்கு மண்ணும் இடு.
கிழக்குரங்கு விழிப்பதைப் பார்,

கிழப்பேச்சு சபைக்கு ஏறுமா ?
கிழவனுக்கு வாழ்க்கைப்படுவதைவிடக் கிணற்றிலே விழுந்து சாகலாம்.
கிழவன்தான் நரை; கிழவன் கொடுத்த பணமுமா நரை ?
கிழவி இருந்த வீடும் கிளி இருந்த காடும் ஈடேராது.
கிழவிப் பேச்சைக் கின்னரக்காரன் கேட்பானோ ?
கிழவி போனபோது சுவர் இடிந்து விழுந்ததாம்.
கிழவியும் காதம் குதிரையும் காதம்.
கிழவியைப் பாட்டி என்பதற்குக் கேட்கவும் வேண்டுமா ?
கிழிந்த சிலை காசுக்கு இரண்டு.
கிளர்ந்தும் கல்வி தளர்ச்சிப் படாது.
கிளி அருமையைப் பூனை அறியுமா ?
கிளி அழுதால் பூனை விடுமா ?
கிளியைப்போல பேச்சும் மயிலைப்போல நடையும்.
கிளியை வளர்த்துப் பூனையின் கையில் கொடுக்கலாமா ?
கிள்ளியெடுக்கச் சதையில்லாமற்போனாலும் பெயரென்னவோ தொந்தியாப்பிள்ளை.
கிள்ளுகிறவனிடத்தில் இருந்தாலும் இருக்கலாம்; அள்ளுகிறவனிடத்தில் இருக்கலாகாது.
கின்னுக்கீரைபோல் உள்ளத்தில் எண்ணாதே!
கின்னை பழுக்குமாம் கிளி வந்து கொஞ்சுமாம்.



கீத்திலே வேண்டாம் சாத்திலே வாரு.
கீரி கடித்த பாம்புபோல
கீரிக்கும் பாம்புக்கும் தீராப் பகை.
கீரியும் பாம்பும்போல.
கீரைக் கடைக்கு எதிர்க்கடை வேண்டாம்.
கீரைக்கட்டை வெட்டச்சொன்னால், தோரணம் கட்டுவதற்கா.

கீரைக்குப் புல்லுருவி கீழே முளைத்தாற்போல.
கீரைத் தண்டு பிடுங்க ஏலேலோ பாட்டு ஏன் ?
கீரை நல்லதானால் கழுவின தண்ணீரிலேயே வெந்துவிடும்.
கீரையும் இரண்டு கறி பண்ணுதே.
கீரையும் மாவும் கெட்ட புளிச்சாறும்
கீர்த்தி பெற்றும் கிலேசம் என்ன?
கீர்த்தியால் பசி தீருமா?
கீழே பாம்பு என்றால் மேலே பார்க்கிறான்.
கீழேழு லோகமும் மேலேழு லோகமும் கண்ட சாட்சி யார்?
கீழைத் தெருவிலே பல்லாக்கைக் கொடுத்து மேலைத்தெரு விலே பிடுங்கிக் கொள்வதுபோல.
கீழோராயினும் தாழ உரை.
கீழ் எலி போலத் தோண்டிக் கிளறுகிறது.
கீழ்க்காது மூளி, மேற்காது மூளி; சண்டைக்கு ரண பத்திர காளி.
கீழ்க்குலத்தான் ஆனாலும் கற்றவன் கற்றவன்தான்.
கீறி ஆற்றினால் புண் ஆறும்.

# கு

குங்கிலியத் தூபம் காட்டியும் சானித்யம குலைந்தால் கும் பிடுவது எங்கே ?
குங்குமக் கோதைக்கும் அஞ்சு பணம்; குருட்டுக் கண்ணிக் கும் அஞ்சு பணமா?
குங்குமம் சுமந்த கழுதை வாசனை அறியுமா?
குசத்தி நாக்கைக் கூழ் கூழாய் அறுத்தாலும் குடம் இரண்டு காசு என்பாள்.
குசவனுக்கு ஆறுமாதம் வேலை; தடியனுக்கு ஆறு நாழி வேலை.
குசவனுக்குப் பலநாள் வேலை, தடியனுக்கு அரை நாழி வேலை.

குச்சுவீடு கட்டியல்லோ மச்சுவீடு கட்டவேண்டும்.

குஞ்சுடன் மேய்ந்த கோழியைப் போல.

குடத்துள் ஏற்றிய விளக்கு.

குடத்தினில் விளக்கை வைத்து கோபுரத்தின்மேல் வைத்தது போல.

குடப்பால் கறந்தாலும் குதிரை ஓட்டம் ஓடாது.

குடப்பாலில் கையைவிட்டுச் சத்தியம் செய்.

குடப்பால் கறந்தால் கூரையைப் பிடுங்கித் தின்னுமாம் மாடு.

குடலும் கூந்தலும் கொண்டது கொள்கை.

குடலைப் பிடுங்கிக் காட்டினாலும் அதுவும் கஜகர்ண வித்தையென்கிறான்.

குடலைப் பிடுங்கி மாலையாய்ப் போட்டுக் கொள்ளுவேன்.

குடலைப் பிடுங்குகிறது ஒக்காளம்.

குடல் அறுந்த கோழி எங்கே போகும் ?

குடல் அறுந்த நரி எந்தமட்டும் ஓடும்?

குடல் காய்ந்தால் குதிரையும் வைக்கோல் தின்னும்!

குடல் கூழுக்கு அழுகிறதாம், கொண்டைபூவுக்கு அழுகிறதாம்.

குடி இருந்து அறிந்துகொள்; வழி நடந்து அறிந்துகொள்.

குடியிருந்து பார்; கூட்டுப் பயிர் இட்டுப் பார்.

குடியிருப்பது குச்சு வீடு; கனு காண்பது மச்சு வீடு.

குடி இல்லா ஊரிலே அடி இடல் ஆகாது.

குடி இல்லா ஊருக்கு குள்ளநரியே அரசன்.

குடியில்லா வீட்டில் குண்டுப் பெருச்சாளி உலாவும்.

குடி உடையான் முடி உடையான்.

குடிக்கிறது காடி நீர்; அதற்குத் தங்க வட்டிலா.

குடிக்கிறது கூழ்; கொப்பளிப்பது பன்னீர்.

குழந்தைப் பாலை வெடிப்பிலே வார்க்கிறதா ?

குடிக்கிற முலையும் பிடிக்கிற முலையும் ஒன்றுதானா?

குடிக்கிறவன் கையைச் சுற்றி சூடு போட்டாலும் குடியை விடான்.

குடி, சூது, விபசாரம் குடியைக் கெடுக்கும்.

குடித்த மருந்தை குடித்தாற்போல எடுத்தால் பரிகாரி வாயிலே மண்.

குடித்தனம் என்று பண்ணினால், நன்மையும் வரும்; தீமையும் வரும்.

குடித்தனமோ, துரைத்தனமோ ?

குடிபோன இடத்தில் வறட்டுநாய் காத்தது போல.

குடிமதம் அடிபடத் தீரும்.

குடியனும் வெறியனும் அடிபடாமல் குணப்படான்.

குடியிருக்க வந்தாயா, கொள்ளி வைக்க வந்தாயா ?

குடியிருந்த வீட்டுக்கே கொள்ளி வைப்பவன்.

குடியில்லா ஊரிலே குருவியும் பறக்காது.

குடியிற் பெண் வயிறெரிய, கொடியிற் சேலை நின்று எரியும்.

குடி வைத்துக் கொண்டாயோ, கொள்ளி வைத்துக்கொண்டாயோ ?

குடுமிக்குத் தக்க கொண்டை.

குடுமித் தலையின் வீராப்பை கொண்டைத் தலையா பார்த்தாயா ?

குடுமித் தலையும் மொட்டைத் தலையும் கூடுமா ?

குடும்பத்தில் இளையவனும் கூத்தாடியில் மூத்தவனும் உதவாது.

குட்டக் குட்டக் குனிகின்றவன் மடையன்; குனிய குனியக் குட்டுகிறவன் மடையன்.

குட்டி ஆடு கொழுத்தாலும் வழுவழுப்பு குறையாது.

குட்டி குலைத்து நாய் தலைமேல் வைப்பதுபோல.

குட்டிக்கரணம் போட்டாலும் லோபி ஒரு காசு கொடான்.

குட்டிக்கலகம் செய்பவன் குட்டுப்பட்டுச் சாவான்.

குட்டிக்கிடையிலே ஓநாய் புகுந்ததுபோல.

குட்டிச் சுவரிலே தேள் கொட்டி, கட்டுத் தறியிலே நெறி ஏறுமா?

குட்டிச்சுவரிலே முட்டிக்கொள்ள வெள்ளெழுத்து வேண்டுமா?

குட்டிச்சுவரும் குரங்கிருந்த மாளிகையும்.

குட்டி போட்ட பூனைபோல அலைகிறான்.

குட்டிப் பாம்பை அடித்தாலும் குற்றுயிராக விடக்கூடாது.

குட்டியின் கையைப் பிடித்துக் குரங்கு கொள்ளிக் கட்டையைச் சுடு பார்த்ததுபோல.

குட்டுப் பட்டாலும் மோதிரக் கையாலே குட்டுப்பட வேண்டும்.

குட்டி மானம் விட்டு குசவனோடு பேசினால் சட்டையும் பண்ணான்; சட்டியும் கொடான்.

குட்டைத் தாதன் குட்டையிலே விழுந்தான்.

குட்டையைக் கலக்கிப் பருந்துக்கு இரை தேடுவது.

குணத்துக்கு அழுவதா பிணத்துக்கு அழுவதா ?

குணத்தை மாற்ற குரு இல்லை.

குணம் இல்லாக் கல்வி பாழ்.

குணம் பெரிதேயன்றிக் குலம் பெரிதல்ல.

குண்டாகரணம் போட்டாலும் பிண்டச் சோற்றுக்கு வழி யில்லை.

குண்டி எத்தனை கோணினாலும் சுமை வீட்டிற்குள் சேர்ந்தால் போதும்.

குண்டி காய்ந்தால் குதிரையும் வைக்கோல் தின்னும்.

குண்டி மறைக்கத் துணியில்லை; கொண்டை பூவுக்கு அழு கிறதாம்.

குண்டுச் சட்டியிலே குட்டிக்கரணம் போடுகிறான்.

குண்டுச் சட்டியிலே குதிரை ஓட்டுகிறான்.

குண்டுபட்டுச் சாகாதவன் வண்டு கடித்து செத்தானாம்.

குண்டுமில்லாமல் மருந்துமில்லாமல் குருவியைச் சுடலாமா?

குண்டுணி சொல்லுபவனுக்கு இருநாக்கு; கட்டுவிரியனுக்கு இரு நாக்கு.

குதி குதி என்பவர்கள் எல்லாம் கூடக் குதிப்பார்களா ?

குதித்துக் குதித்து மாவிடித்தாலும் குந்தாணிக்கு ஒரு கொழு கட்டை கிடையாது.

குதிரை ராவுத்தனைத் தள்ளியதுமல்லாமல், குழியொன்றும் பறித்ததாம்.

குதிரை இருப்பு அறியும்; கொண்ட பெண்டாட்டி குணம் அறிவாள்.

குதிரை இல்லா ஊருக்குக் கழுதைத் தம்பிரான்.

குதிரை உதைத்தாலும் உதைக்கலாம்;கழுதை உதைக்கலாமா.

குதிரை எட்டடி பாய்ந்தால், குட்டி பதினாறடி பாயும்.

குதிரை ஏற அதிருஷ்டம் இருந்தால் குண்டியின் கீழ் வால் நுழையாதா?

குதிரை ஏறாமல் கெட்டது; கடன் கேளாமல் கெட்டது.

குதிரை ஏறி என்ன கோழைக்கொம்பு ஊதியென்ன, வீணர்க்கும் கீர்த்திக்கும் வெகுதூரம்.

குதிரையின் குணத்தை அறிந்துதான், தம்பிரான் கொம்பு கொடுக்கவில்லை.

குதிரை கிருடானாலும் கொள்ளு தின்பதில் குறைவில்லை.

குதிரை வாங்கியபின், லகானுக்கு வழக்கா?

குதிரைக்கு குற்றம் என்றால் ஆனைக்கு அர்ரம்.

குதிரைக்கும் நாய்க்கும் குடிபோக சந்தோஷம்.

குதிரைக் கொம்பாகிவிட்டது.

குதிரை செத்தது அல்லாமல் சேணம் சுமக்க வேலை ஆயிற்று.

குதிரை நல்லதுதான் சுழி கெட்டது.

குதிரை முட்டை.

குதிரையும் கழுதையும் ஒன்று?

குத்தக் கூலியுங் கொடுத்து, எதிர்மூச்சும் போட்டாளாம்.

குத்தார்த காதுக்கு ஊனம் இல்லை.

குப்பையிற் புதைத்தாலும் குன்றுமணியின் நிறம் போகாது.

குப்பையிலிருந்தாலும் மாணிக்கம் மாணிக்கம்தான்.

குப்பையின்றிப் பயிர் விளையாது.

குப்பையும் கோழியும் போலக் குருவும் சீடனும்.

குமரிக்கு ஒரு பிள்ளை; கோடிக்கு ஒரு வெள்ளை.

குமரி தனிவழியே போனாலும் கொட்டாவி தனி வழியே போகாது.

குமரியாக இருக்கையில் கொண்டாட்டம்; கிழவியாயிருக்கையில் திண்டாட்டம்.

கும்பி கூழுக்கு அழுகிறது; கொண்டை எண்ணெய்க்கு அழுகிறது.

கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்ததுபோல.

கும்பிடு கொடுத்து கும்பிடு வாங்க வேண்டும்.

கும்பிடுங் கள்ளர் குலைந்திடும் கள்ளர்.

கும்பிட்ட கோயில் தலைமேல் இடிந்து விழுந்தாற்போல.

கும்பிட்ட தெய்வம் குலதெய்வம்.

கும்பிட்டுக் கடன் கொடாதே; கும்பிட்டுக் கடன் வாங்காதே

கும்பியில் கல்லை விட்டெறிந்தால் மேலே தெறிக்கும்.

குயவா கலசம் கொண்டுவா, இடையா பால் கொண்டுவா !

குயில் குரலும் மயில் அழகும்போல.

குயிலைப்போல கூவுகிறாள்.

குயில் முட்டையிட காகங் கண்டுகளிக்க.

குரங்கானாலும் குலத்திலே கொள்ள வேண்டும்.

குரங்கு கைப் பூமாலை.

குரங்கின் கையில் கொள்ளி அகப்பட்ட கதை!

குரங்கின் கையில் சிக்கிய பாம்பு.

குரங்கின் தலையில் கரகம் வைத்துக் காளியைக் கும்பிட்டது போல.

குரங்கு மலத்தை மருந்துக்குக் கேட்டால் கொம்பு இலையெல்லாம் தத்தித் தத்தித் தாவும்.

குரங்கின் வயிற்றிலே குஞ்சரம் பிறக்குமா ?

குரங்கு எல்லாம் கூட்டங் கூட்டமாக இருக்கும்.

குரங்கு ஏறாத கொம்பு உண்டா ?

குரங்கு கள்ளும் குடிக்க, பேயும் பிடிக்க, தேளும் கொட்டினால் என்ன கதி ஆகும் ?

குரங்குக்குப் புத்தி சொல்லித் தூக்கணாங்குருவி தன் கூட்டை இழந்தது.

குரங்குக்கும் தன் குட்டி பொன்குட்டி.

குரங்குப் பிடி போன்ற பிடிவாதம் பிடிக்காதே.

குரங்குப் பிணமும் குறவன் பிணமும் சுடுகாடு கண்டதில்லை.

குரங்குப் புண் ஆறாது.

குரங்கு முகத்துக்குப் பொட்டு எதற்கு ?

குரு இல்லாத சீடன் உண்டா ?

குரு இல்லார்க்கு வித்தையில்லை ; முதல் இல்லார்க்கு லாபமில்லை.

குரு என வந்தான், சிறு உரை தந்தான்.

குருடன் வேண்டுவதெல்லாம் கண்கள்தான்.

குருடனுக்குக் கோல்பிடிக்க முடியுமா ?

குருடனுக்குப் பால் கொக்குப் போன்றது.

குருடனும் செவிடனும் கூத்துப் பார்த்தது போல.

குருடனும் செவிடனும் கூத்துப் பார்க்கப்போய் குருடன் கூத்தைப் பழித்தான்; செவிடன் பாட்டைப் பழித்தான்.

குருடனை நோட்டம் பார்க்கச் சொன்னதுபோல.

குருடனை நோக்கி ராஜவிழி விழிக்கச் சொன்னால்.

குருடன் கைக்கோலைப் பிடுங்கியது போல.

குருடன் பெண்டாட்டிக் கூனனுடன் உறவாடினாள்.

குருட்டுக் கண்ணுக்குக் குறுணி மையிட்டால் ஆவதென்ன ?

குருட்டுக் குதிரைக்கு சறுக்கியது சாக்கு

குருட்டுக்கோழி தவிட்டிற்கு வீங்கியது போல.

குருட்டுப்பூனை விட்டத்திற் பாய்ந்தது போல.

குருட்டு மாட்டை தெய்வம் காக்கும்.

குருமொழி கேளாதவனும் தாய் வார்த்தை கேளாதவனும் சண்டி.

குருவி தலையில் தேங்காயை வைத்தது போல.

குருவிக் கூட்டைக் கோலால் கலைக்காதே.

குருவிச் சொல்லும் மருவிக் கேளு.

குருவியின் கழுத்தில் பனங்காயைக் கட்டித் தொங்கவிட்டது போல.

குருவுக்கு ஏற்ற சீடன்.

குருவுக்குத் துரோகம் செய்தாலும் குடலுக்குத் துரோகம் செய்யக் கூடாது.

குருவுக்கும் நாமம் குழைத்துப் போடுவான்.

குலத்தளவே ஆகுங்குணம்.

குல ஸ்திரி தன் கணவனையும், பரஸ்திரி தன் மேனியையும் பேணுவாள்.

குலத்துக்கேற்ற பேச்சு.

குலத்தைக் கெடுக்கவந்த கோடாலிக்காம்பு.

குலத்தைக் கெடுக்குமாம் குரங்கு.

குலமகட்கு அழகு கொழுநனைப் பேணுதல்.

குலம் எப்படியோ குணமும் அப்படியேதான்.

குலம் குப்பையிலே, பணம் பந்தியிலே.

குலம் குலத்தோடு, வெள்ளம் ஆற்றோடு.

குலம் புகுந்தும் குறை நிரவில்லை.
குலைக்கிற நாயின் வாயில் கோலைக் கொடுத்தால் ஊரெங்கும் கொண்டோடிக் குலைக்கும்.
குலைக்கிற நாய்க்கு எலும்பைப் போடு.
குலைக்கிற நாய்க்கு கொழுக்கட்டையை போட்டாற் போல.
குலைக்கிற நாய் வேட்டைக்கு உதவாது.
குலையாத நாய் குதிகாலை கடிக்கும்.
குழந்தைக் காய்ச்சலும் குண்டன் காய்ச்சலும் பொல்லாது.
குழந்தைப் பட்டினியும் கோயில் பட்டினியுமில்லை.
குழந்தையின் தேகத்தைப்போல.
குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலேதான் மகிழ்ச்சி.
குழம்புப்பால் குடிக்க குமரகண்ட வலிப்பா!
குழிப்புண்ணை எடுத்து எழவு கொண்டாடுவதா ?
குழியிற் பிள்ளையை நரி சுற்றுவதுபோல.
குளத்தில் போட்டுவிட்டு நதியில் தேடலாமா ?
குளத்துடன் கோபித்துக்கொண்டு கால் கழுவாததுபோல.
குளத்தை வெட்டிவிட்டுத் தவளையைக் கூப்பிட வேண்டுமா?
குளம் வற்றினால் முறை விதும் உண்டா?
குளம் வெட்டப் பூதம் புறப்பட்டதுபோல.
குளம் வெட்டுவதற்கு முன்னே, முதலை குடியிருக்குமா?
குளவிக்குப் பச்சைப்புழு பிள்ளை.
குளவிக்கூட்டிலே கல்லை விட்டெறியாதே.
குளவிக்கூட்டைக் கோலால் குலைக்காதே.
குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டதுபோல.
குளிச்சவுங் கட்டியும் குட்டி இரட்டித்தது.
குளிராத வீடும் கூத்தியாரும் உண்டானால் மயிரான சம்பளம் வந்தென்ன, போயென்ன?
குளிராத வீடும் கூத்தியாரும் உண்டானால் மயிரான வேளாண்மை விளைந்தால் என்ன, விளையாமற் போனால் என்ன ?
குளிர் விட்டுப் போச்சுது.
குள்ளப்பார்ப்பான் பள்ளத்தில் விழுந்தான், தண்டு எடு தடி எடு.

குள்ளனைக் கொண்டு கடலாழம் பார்க்கலாமா?

குறத்தி பிள்ளைபெற; குறவன் காயந் தின்ன.

குறவழக்கும் சக்கிலி வழக்கும் லேசு.

குறவன் குச்சு கட்டியதுபோல.

குறுக்கே வந்து குட்டையைக் குழப்பாதே!

குறுங்கொல்லும் நெடுந் தச்சும்.

குறுணிக்காரனுக்கு வாழ்க்கைப்பட்டுப் பதக்கு பதக்கு என்று அடித்துக்கொண்டால் கிடைக்குமா?

குறுணி மைதான் இட்டாலும் குருடு குருடே.

குறுமைப் பூத்தாலும் குணம் போமா நெருப்புக்கு.

குறும்பி உள்ள காது தினவு தின்னும்.

குறும்பைத் தவிர்க்கும் குடிதாங்கி.

குறையறக் கற்றவன் கோடியில் ஒருவன்.

குறைகுடம் கூத்தாடும்.

குறையைச் சொல்லி நிறைய அள.

குறையுள்ளார்க்கு உண்டு குருவுதல்; கறையுள்ளார்க்கு கரவு உண்டு.

குறை வேலையை முடியாமல் அம்பலத்துக்கு வரலாமா?

குற்ற மனசாட்சி கூடிவாழும் சத்துரு.

குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு என்னும்; குறும்பியுள்ள காது தினவு தின்னும்.

குற்றமடைந்த கீர்த்தி குணங்கொள்ளல் ஆகாது.

குற்றம் மறைப்பதால் மற்றொரு குற்றம் நேரும்.

குனிந்து ஒரு துரும்பு கிள்ளிப் போடச் சீவனில்லாமற் போனாலும், பெயரென்னவோ பனை பிடுங்கி.

குன்றிமணி தங்கமில்லாவிட்டால், கொஞ்சங்கூடத் தட்டான் பிழைக்க மாட்டான்.

குன்றிமணி குப்பையிற் கிடந்தாலும் குன்றுமா?

குன்றின்மேலிட்ட விளக்கைப்போல.

# கூ

கூகைக்குப் பகலில் கண் தெரியாது.

கூகை விழித்தாற்போல விழிக்கிறான்.

கூட இருந்து பார்; கூட்டுப் பயிரிட்டுப் பார்.

கூடயிருந்துகொண்டு, கொள்ளியைச் செருகலாமா?

கூடத்தைக் கெடுத்தாலும் மாடத்தைக் கெடுக்காதே.

கூடம் ஒன்று போடுமுன்னே, சுத்தி இரண்டு போடும்.

கூடம் இடிந்தால் மாடம்.

கூடியிருந்து குலாவுவார் வீட்டில், ஓடி உண்ணும் கூழும் இனிதே.

கூடி எல்லோரும் தூங்கிவிடுங்கள்; பிணக்காடாய் வெட்டிக் குவிக்கிறேன் என்றான்.

கூடிருக்கக் குருவி போன மாயம் என்ன?

கூடி வாழ்ந்தால் கோடி நன்மை.

கூடை கூடையாகக் கொடுத்தாலும் குறை நீங்காது.

கூடையைச் சுட்டால் கரியாகுமா, கூந்தலைச் சுட்டால் கரியாகுமா?

கூட்டத்திற் கட்டுச் சோற்றை அவிழ்த்ததுபோல.

கூட்டோடு கைலாயம் சேர்ந்தாள்-காரைக்காலம்மை!

கூட்டோடு போச்சு; குளிரும் காய்ச்சலும்

கூண்டிலே குறுணி நெல் இருந்தால், மூலையிலே முக்குறுணி தெய்வம் கூத்தாடும்.

கூத்தரிசி குத்துகிற வீட்டில் வாய்க்கரிசிக்கு வழி இல்லை.

கூத்தாடி கிழக்கே பார்த்தான்; கூலிக்காரன் மேற்கே பார்த்தான்.

கூத்தாடிக்குக் கீழே கண்; கூலிக்காரனுக்கு மேலே கண்.

கூத்தாடிச் சிலம்பம் படை வெட்டுமா?

கூத்திக்குக் கொடுத்து தூங்காதான், வேசிக்கு இட்டு விறகானான்.

கூத்திப்பிள்ளைக்குத் தகப்பன் யார்?

கூத்தியார் ஆக்கால் செத்தால் கொட்டு முழக்கும்; கூத்தியார் செத்தால் ஒன்றுமில்லை

கூத்தியார் செத்தால் பிணம்; அவள் ஆத்தாள் செத்தால் மணம்.

கூத்தியார் வீட்டுக்கு நாய்போல அலைகிறான்.

கூத்திலே கோணங்கி வந்ததுபோல.

கூத்திற்குப் பந்தம் பிடித்ததுபோல.

கூத்திற்கேற்ற கொட்டு கொட்டுகிறது.

கூத்தாடிக்கு மீசை எதற்கு?

கூப்பாடு போட்டால் சாப்பாடு வருமா?

கூப்பிடப்போன தாதி மாப்பிள்ளையைக் கைக்கொண்டாள்.

கூரிய சொல்லான் யாரினும் வல்லான்.

கூரியனாகிலும் வீரியம் பேசேல்.

கூருக்கு எதிர் உதைத்தால் கூரேழ வருத்தும்.

கூரை ஏறிக் கோழிப்பிடிக்காத குருக்களா, வானத்தைக் கீறி வைகுண்டம் காட்டுவார்?

கூரைமேல் சோற்றைப்போட்டால்; ஆயிரம் காக்கைகள் வரும்.

கூர்மையாளனே நேர்மையாளன்.

கூலி குறைத்தாயோ குறை மரக்கால் இட்டாயோ?

கூலி குறைத்தால் வேலை கெடும்.

கூலிக்காரன் பெண்சாதி குளிகுளிக்கப் போகிறாள், குப்பையிலே ஆமணக்கு முளைக்காமற் போகாதா?

கூலிக்கு அறுத்தாலும் குறுணிக்கு அறுக்கலாம்; வீணனுக்கு அறுத்து வெளியே நிற்பானேன்?

கூலிக்குக் கழு ஏற்பார்களா?

கூலிக்குக் குத்துகிறவனை கேளிக்கை ஆடச்சொன்னாற்போல.

கூலிக்கு நாற்றுநட வந்து எல்லைக்கு வழக்கா?

கூலிக்குப் பாவி குறுக்கே வந்தான்.

கூலிப்படை வெட்டுமா?

கூவென்றவன் பேரில் கொல்லச் சினம்.

கூழிலே விழுந்த ஈ குழம்புவதுபோல.

கூழைக்குடிக்கிறாயா அப்பா, குறுணி குடிப்பேன் அப்பா.

கூழுக்குக் கட்டிக்கலயோடு போனவளே.

கூழுக்கு ருசி மாங்காய். (மிளகாய்)

கூழுக்கு மாங்காய் கொண்டாட்டம்; குரங்குக்குத் தேங்காய் கொண்டாட்டம்.

கூழுக்கும் ஆசை; மாவுக்கும் ஆசை.

கூழுக்கும் ஆசை; மீசைக்கும் ஆசையா?

கூழைக் குடித்தாலும், குப்பை சுமந்தாலும் குப்பைக்காட்டுப் பெண்கள் உருக்குமணி; பாலைக்குடித்தாலும் பட்டைக் கட்டினாலும் பட்டினத்துப் பெண்கள் பறக்கை (தட்டுவாணி)

கூழானாலும் குப்பையானாலும் குடித்துக்கொண்டவன் பிழைப்பான்,

கூழ் ஆனாலும் குளித்துக் குடி; கந்தையானாலும் கசக்கிக்கட்டு,

கூழ் என்றாலும் வாழ்வுக்குத் தக்கதென்றால் குடித்துத்தான் ஆகவேண்டும்.

கூழ் குடித்தாலும் கூட்டு ஆகாது.

கூழ் குடித்தாலும் கூட்டாய் குடிக்கவேண்டும்.

கூழ் புளித்தது; பால் கூடப் புளித்ததென்று விட்டுவிடாதே

கூனைக் குழப்படி மாமீ, காளைக்குப் பிள்ளைபெற.

கூனன் குறை தீர்ந்தான்; கொடியோன் வினை பெயர்ந்தான்.

கூனியானாலும் கூடை சுமந்துதான் கூலி பெறவேண்டும்.

கூனி வாயாற் கெட்டாற்போல.

# கெ

கெஞ்சி மணியம் பண்ணுகிறதா?

கெடுங்காலத்துக்கு கெட்டோர் புத்தியைக் கேட்பர்.

கெடுங்குடி சொற் கேளாது.

கெடுக்க நினைக்கிற் அடுக்கக் கேடுறும்.

கெடுக்கினும் கல்வி கேடு படாது.

கெடுத்தவருக்கு நீ கேடு நினைக்காதே
கெடுப்பவருக்குக் கெடுமதி பிடரியில்.
கெடுப்பதும் வாயால் படிப்பதும் வாயால்.
கெடுப்பாரைத் தெய்வம் கெடுக்கும்.
கெடுமதி கண்ணுக்குத் தோன்றாது.
கெடுமதிக்குப் படுகுழியை வெட்டு.
கெடுவாய்! கேடு நினையாதே.
கெடுவான் கேடு நினைப்பான்.
கெட்ட ஊருக்கு எட்டு வார்த்தை.
கெட்ட கழுதைக்கு துஷ்டப் புத்தி.
கெட்டகாலத்துக்கு நாரை கெளிற்று மீனை விழுங்கியதுபோல.
கெட்டகாலத்துக்கு விபரீத புத்தி.
கெட்ட குடி கெட்டது பூராவாய்க் குடி.
கெட்டகுடி கெட்டாலும் வட்டி நஷ்டம் இல்லாமல் வாங்கிவிடு.
கெட்ட குடிக்கு ஒரு கேட்டை பிறந்தது
கெட்டகுடிக்கு ஒரு துஷ்டப் பிள்ளை.
கெட்ட குடியே கெடும்; பட்ட காலிலே படும்.
கெட்ட கேட்டுக்கு கொட்டொன்று; முழுக்கொன்று.
கெட்ட கேட்டுக்குக் கொண்டை போட்ட மூண்டாசு குறைச்சலா?
கெட்ட கேட்டிற்கு வட்டம் காற்பணம்.
கெட்டது கெட்டாய் மகளே! கிட்ட வந்து படுத்துக்கொள்.
கெட்டது பட்டது கிருஷ்ணம் பேட்டை, அதிலும் கெட்டது ஆனைக்குளம்.
கெட்டதும் பட்டதும் கீரைக்கு இரைத்ததும்.
கெட்ட நாய்க்குப் பட்டதுப் பிரீதி.
கெட்ட பயலுக் கேற்ற துட்டச்சிறுக்கி.
கெட்ட பால் நல்ல பால் ஆகுமா?
கெட்ட மாட்டை தேடுமுன் எட்டு மாட்டைத் தேடலாம்.
கெட்ட மாடு தேடுவாரில்லை; மேய்த்த கூலி கொடுப்பாரில்லை.
கெட்ட மார்க்கத்தில் இருக்கும் ஒருவன்; மற்றவர்களையும் இழுத்துக் கொள்வான்.

கெட்டவனுக்குக் கெட்டதுதான் கிடைக்கும்.

கெட்டவன் கங்கை ஆடினால் போகுமா?

கெட்டவன் பட்டணம் சேர்வான்.

கெட்டார்க்கு உற்றார் கிளையிலும் இல்லை.

கெட்டாலும் செட்டி செட்டியே; கிழிந்தாலும் பட்டு பட்டே

கெட்டால் பெரிய வெட்டரிவாள்.

கெட்டான் பயல் பொட்டலிலே; விழுந்தான் பயல் சறுக்கலிலே

கெட்டான் வாழ்ந்தால் கிளை கிளையாகத் தளிர்ப்பான்; வாழ்ந்தான் கெட்டால் வரையோட்டுக்கும் ஆகான்

கெட்டிக்கார முட்டாள்.

கெட்டிக்காரனுக்குப் பயமில்லை; மட்டித்தனத்துக்கு நயமில்லை.

கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளில் தெரியும்

கெட்டித் தங்கமானால் கலீர் என்று ஒலிக்குமா?

கெட்டுப் போன பார்ப்பானுக்குச் செத்துப் போன பசு தானம்.

கெண்டை பட்டாலும் பட்டது; கிடாரம் பட்டாலும் பட்டது.

கெண்டையைப் போட்டு வராலை இழுக்கிறதா?

கெடி கற்றவன் இடறி விழுந்தால் அதுவும் ஒரு பல்டி என்பான.

கெலிப்பும் தோற்பும் ஒருவர் பங்கல்ல.

# கே

கேடது இல்லான் பாடது இல்லான்.

கேடகத்தையும் பெருமானையும் கிழாறு கொண்டு போகச்சே, கூட வந்த அனுமாருக்குத் தெப்பத் திருநாளாம்.

கேடுகாலத்தில் ஓடு கப்பறை

கேடுகெட்ட நாயே, வீட்டைவிட்டுப் போயேன்

கேடு வரும் பின்னே மதி கெட்டு வரும் முன்னே

கேட்காமல் கொடுப்பது உத்தமம்; கேட்டுக் கொடுப்பது மத்திமம், கேட்டாலும் கொடாதிருப்பது அதமம்.

கேட்டவை யெல்லாம் நம்பாதே; நம்பினதெல்லாம் சொல்லாதே.

கேட்டில் உறுதி கூட்டும் உடைமை.

கேட்டை மூட்டை செவ்வாய்க் கிழமை.

கேட்பாரும் இல்லை; மேய்ப்பாரும் இல்லை.

கேளுங் கிளையும் கெட்டார்க்கு இல்லை.

கேள்வியுடைமை கீர்த்தியே கல்வி.

கேள்விச் செவியன் ஊரைக் கெடுப்பான்.

கேள்விப் பேச்சில் பாதிதான் நிஜம்;

கேள்வி முயல்.

# கை

கை அழுத்தமானவன். காசைச் செலவிடான்.

கை இல்லாதவன் கரணம் போடவும் காலில்லாதவன் ஓடவும் முடியுமா?

கை ஈரம் காயாமல் காட்ட வருகிறது.

கையை ஊன்றித்தான் கரணம் போடவேண்டும்.

கை கண்ட பலன்.

கை கண்ட வேசிக்கு கண்ணீருக்குக் குறைச்சலா?

கை கருணைக்கிழங்கு; வாய் வேப்பங்காய்.

கை காய்த்தால் கமுகு (பாலக்கு) காய்க்கும்.

கை கொடுத்துக் கொண்டே கடையாணியைப் பிடுங்குவான்.

கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை

கைக்கு கை நெய்வார்த்தாலும் கணக்கு தப்பாது.

கைக்குருவியைக் கொண்டுதான் காட்டுக்குருவியைப் பிடிக்க வேண்டும்.

கைக்கோளனுக்குக் காற்புண்ணும் நாய்க்குத் தலைப்புண்ணும் ஆகாது.

கைதப்பிக் கண்ணிலே பட்டால், கையைக் கண்டிப்பார் உண்டா?

கைத்தாலி கழுத்தில் ஏறட்டும்.

கைநிறைந்த பொன்னைக் காட்டிலும் கண் நிறைந்த கணவனே மேல்.

கைபட்டால்தான் கண்ணாடி.

கைப்பண்டம் கருணைக் கிழங்கு.

கைப்பழத்தை விட்டுத் துறட்டிப் பழத்துக்கு அண்ணாந்து நிற்பானேன்?

கைப்புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமா?

கைப்பொருளற்றவனைக் கட்டிய பெண்டாட்டியும் எட்டிப் பாரான்.

கைப்பொருள் இல்லாதவனைக் கள்வன் என்ன செய்வான்?

கைப் பொருள் தனிலும் மெய்ப் பொருள் கல்வி.

கைம்பெண்சாதி எருமையிலே கறவை பழகியது போல.

கைம் பெண்டாட்டி பெற்ற கழிசிறை.

கைம்பெண்டாட்டி பெற்ற பெண்ணானாலும் செய்யுஞ் சடங்கைச் சீராய்ச் செய்ய வேண்டும்.

கையாடாத ஆயுதம் துருப்பிடிப்பது போல.

கையால் ஆகாத சிறுக்கி வர்ணப் புடவைக்கு ஆசைப் பட்டாளாம்.

கையால் கிழிக்கும் பனங்கிழங்கிற்கு ஆப்பும் வல்லிட்டும் குத்தியும் ஏன்?

கையால் கிள்ளி எறியும் வேலைக்குக் கனத்த கோடாரி வேண்டுமா?

கையாளாத ஆயுதம் துருப்பிடிக்கும்.

கையாளும் இரும்பு பளபளக்கும்.

கையிலே காசும் இல்லை; முகத்திலே களையும் இல்லை.

கையிலே காசு வாயிலே தோசை.

கையிலே அகப்பட்ட துட்டு கணக்குப் பேசும்.

கையிலே அரிசியும் கமண்டலத்தில் தண்ணீரும்.

கையில் இருக்கிற சோற்றைப் போட்டுவிட்டு எச்சிற் சோற்றுக்கு ஏந்திய கை போல.

கையில் இருக்கும் கனியை விட்டு விட்டு மரத்தில் இருக்கும் கனிக்குத் தாவுவது போல.

கையில் இருந்தால் கர்ணன்.

கையில் இல்லாவிட்டால் கள்ளன்.

கையில் உண்டானால் காத்திருப்பார் ஆயிரம்பேர்.

கையில் எடுக்கும் முன்பு கோழி மோசம் என்று அறியாது.

கையில் ஒரு காசும் இல்லை; கடன் கொடுப்பார் யாருமில்லை.

கையில் பிடிப்பது ஜெபமாலை; கக்கத்தில் இடுக்குவது கன்னக் கோல்.

கையில் வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்குக் அழுவானேன்?

கையில் குடையும் காலில் சோடும் வேண்டும்

கையிலிருக்கும் பறவையை விட்டு, காட்டுப் பறவைக்கு கண்ணி வைக்கலாமா?

கையிற் பிள்ளையோடு கடலில் விழுந்தாள்.

கையும் கணக்கும் சரி.

கையுங் களவுமாய்க் கண்டு பிடிக்கிறது.

கையை அறுத்து விட்டாலும் அகப்பையை கட்டிக்கொண்டு திருடுவான்.

கையை உடைத்து விட்டவன் தலையை உடைத்தாலும் உடைப்பான்,

கையைச் செட்டியார் குறைத்தால், காலை நெசக்கோளன் குறைப்பான்.

கையைப் பார் முகத்தைப் பார் என்றிருந்தால் காரியம் நடக்குமா ?

கையைப் பிடித்திழுத்தும் வராதவன், கண்ணைக்காட்டி அழைத்தால் வருவானா ?

கையைப் பிடித்துக் கண்ணை பார்த்து, மயிரைப் பிடித்து காசு வாங்குவதா ?

கையை மூடிக் கொண்டிருந்தால் கழுக்கம்; விரலைத் திறந்தால் வெட்டவெளி.

# கொ

கொக்கரித்த பேரெல்லாம் கூடத் திப்பாய்வார்களா ?

கொக்கின் தலையில் வெண்ணெய் வைத்து அது உருகிக் கண்ணில் வழியும்போது பிடித்துக்கொள்ளுவேன்.

கொக்கின் தலையில் வெண்ணெய் வைத்துப் பிடிப்பதுபோல

கொக்குக்கு உண்டா வீரசைவம் ?

கொக்குக்குத் தெரியுமா கோழிக்குஞ்சைக் கொண்டு போக.

கொக்குக் குருவிபோல கொத்திக் கொத்திச் சேர்க்கிறது.

கொக்குக் கூட்டத்தில் ராஜாளி விழுந்தாற் போல.

கொக்கென்று நினைத்தாயோ, கொங்கணவா ?

கொங்கிலே குறுணி விற்கிறது, இங்கு என்ன விற்கிறது.

கொசுவிலே பிளவை, அதிலே நீரிழிவு, அறுக்கிறது எங்கே ? அட்டை விடுவது எங்கே ?

கொசுகின் முதுகில் பிளவை வந்தது போல.

கொசுகே கொசுகே தலைமுழுகு ; நான்மாட்டேன் சனிக்கிழமை.

கொசுகை வடிகட்டி ஒட்டகத்தை விழுங்குவதா ?

கொசுவிற்குப் பயந்து குடிபெயர்ந்து போவதா ?

கொச்சியிலே குறுணி மிளகு என்றால் இங்கென்ன ?

கொஞ்சங் கொஞ்சமாய்த் தின்றால் பனையையும் தின்றுவிடலாம்.

கொஞ்சத்திலிருக்கிறதா, குரங்கு மிளகுத் தண்ணீர் குடிக்கிறது ?

கொஞ்சத்தில் உண்மையில்லாதவன், கோடியிலும் இருக்கமாட்டான்.

கொஞ்ச நஞ்சமிருந்தது குருக்களை அடைந்தது ; கோயிலை வௌவால் அடைந்தது.

கொஞ்சப் பொருளை மந்திரம் பண்ணுவது போலக் கையைக் காட்டுகிறான்.

கொஞ்சிக் கூத்தாடி நடந்தாலும், குதிரையாகுமா கழுதை.

கொடாகண்டன் விடாகண்டன்.

கொடாதகண்டனும் விடாதகண்டனும் கூடினாற் போல.

கொடிகள் அருகிலுள்ள மரத்தில் தாவும்.

கொடிக்குக் காய் பாரமா ?

கொடிக்குக் கொம்மட்டிக்காய் கனத்திருக்குமா ?

கொடுக்கமாட்டாத இடையன் சினையாட்டைக் காட்டியது போல.

கொடுக்கமாட்டாதவன் கூத்தைப் பழித்தான் ; இடமாட்டாதவன் எச்சிலென்று சொன்னான்.

கொடுப்பது உழக்குப் பால் ; உதைப்பது பல்லுப்போக.

கொடுக்கிற தெய்வம் முகத்தில் அறைந்து கொடுக்கும்.

கொடுக்கிறதையும் கொடுத்துக் குஷ்டரோகியின் காலில் விழுவானேன்.

கொடுக்கிறான் பழனியாண்டி, தின்கிறான் சுப்பனாண்டி.

கொடுங்கோல் அரசு நெடுங்காலம் நில்லாது.

கொடுங்கோல் மன்னன் ஆளும் நாட்டைவிட கடும்புலி வாழும் காடே நல்லது.

கொடுத்த கடனைக் கேட்டால் குமரகண்ட வலிப்பா.

கொடுத்தது கேட்டால் அடுத்தது பகை.

கொடுத்ததைக் கெடுக்கும் குட்டிச் சாத்தான்.

கொடுத்த பணம் செல்லாவிட்டால் கூத்தரிசிக்காரி என்ன செய்வாய்?

கொடுத்தவருக்கு எல்லாம் உண்டு. கொடாதவருக்கு ஒன்றும் இல்லை.

கொடுத்தவனைப் புகழ்வார், கொடாதவனை இகழ்வார்.

கொடுத்தாலும் ஒன்று ; கொடாவிட்டாலும் ஒன்று.

கொடுத்தால் ஒருபேச்சு ; கொடாவிட்டால் ஒருபேச்சு.

கொடுத்ததுபோல வாங்கிக் கொள்ளும்.

கொடுத்துக் கொடுத்துக் இருகையும் கூழாய்ப் போச்சு.

கொடுத்துக் கொடுத்து கையிரண்டும் காய்ப்பு காய்த்து விட்டது.

கொடுத்து நிஷ்டூரப்படுவதைவிடக் கொடாமல் நிஷ்டூரப் படுவதே மேல்.

கொடுத்தும் அறியான்; கொடுப்பவர்களைக் கண்டும் அறியான்.

கொடுத்துக் கொல்லை வழிப் போவதா?

கொடுத்துப் பொல்லாப்பாகிறதைவிட கொடாமலிருப்பதே நலம்.

கொடுப்பாரைத் தடுக்காதே.

கொடுப்பார் பிச்சையைக் கெடுவார் கெடுப்பர்.

கொடுமையற்றவன் கடுமையற்றவன்.

கொடுமை சுடப்பட்ட செல்வம், பசுங்கலத்தில் பால் கவிழ்ந்தது.

கொடும்பாவியானாலும் கொண்ட மாமியார் வேண்டும்.

கொடும்பாவி சாகாதா? கோடைமழை பெய்யாதா?

கொடையிலும் ஒருத்தன்; படையிலும் ஒருத்தன்.

கொட்டிக்கிழங்கு பறிக்கப் போனால் கோபித்துக் கொள்வார் பண்டாரம்; அவித்துரித்து முன்னே வைத்தால் அமுது கொள்வார் பண்டாரம்!

கொட்டிக்கிழங்கு வெட்டுகிறவனுக்குக் கோவிலில் வந்து ஆடத்தெரியுமா?

கொட்டிய பாலின் முன் கூவியழுவதுண்டோ?

கொட்டினால் தேள்; கொட்டாவிட்டால் பிள்ளைப் பூச்சியா?

கொட்டை நூற்கிற அம்மாளுக்குப் பட்டணத்து விசாரணை ஏன்?

கொண்ட கடையிலா விற்பது?

கொண்டபடி விற்றால் கோடி லாபம்.

கொண்ட பெண்சாதியே கூர் அரிவாளாக இருந்தாள்.

கொண்டவனுக்கு இல்லாத வெட்கம் கண்டவனுக்கு உண்டா?

கொண்டவனே தொண்டையைப் பிடித்தால், பெண்டென்ன செய்வாள்?

கொண்டவன் அடிக்கக் கொழுந்தன்மேல் விழுந்தாளாம்.

கொண்டவன் இருக்க கண்டவனோடு போவானேன்?

கொண்டவன் உறவு உண்டானால், மண்டலம் எல்லாம் ஆளலாம்.

கொண்டவன் சீறினால் கண்டவனுக்கு எல்லாம் இளக்காரம்.

கொண்டவன் பலமிருந்தால் குப்பைமேடு ஏறிச் சண்டை யிடலாம்.

கொண்டவன் குட்டிச்சாத்தான் என்பதுபோல.

கொண்டாட்டம் போய் திண்டாட்டம் ஆச்சு.

கொண்டார் முனியர் கண்டார் முனிவர்.

கொண்டானும் கொடுத்தானும் ஒன்று, இந்தக் கலியாணத்தை கூட்டிவைத்தவன் வாயில் மண்.

கொண்டானும் கொண்டானும் சம்பந்தி; கொட்ட வந்தவன் அம்பலம்.

கொண்டு குலத்தைப் பேசுவதா?

கொண்டைக்குத் தக்க பூ.

கொண்டைக்குப் பூச்சூட்டுவதா? தாடிக்குப் பூச்சூட்டுவதா?

கொண்டோர் எல்லோரும் பெண்டிரும் அல்லர்.

கொற்றடிமைக்குக் குடி அடிமையா?

கொலைக்கஞ்சாதவன் பழிக்கு அஞ்சுவானா ?

கொல்லத் தெருவில் ஊசி விற்பதா ?

கொல்லவரும் யானை முன்னே கல்லை எறியாதே.

கொல்லனைக் கண்டால் குரங்கு மல்லுக் கட்டச் சொல்லும்.

கொல்லன் உலையிலே கொசுவுக்கு என்ன வேலை ?

கொல்லன் எளிமை கண்டு குரங்கும் தன் காலுக்குப் பூண் கட்டச் சொன்னதாம்.

கொல்லன் கைக்குறடு போல்.

கொல்லன் பிணம் விரைத்தாற் போல.

கொல்லுவதுஞ் சோறு ? பிழைக்க வைப்பதுஞ் சோறு.

கொல்லுக் கொலைக்கு அஞ்சாத கொடும்பாவி.

கொல்லைக்காட்டு நரியைக் குடிவைத்துக் கொண்டது போல

கொல்லைத் தலைமாட்டில் இருப்பது போல.

கொல்லை பாழானாலும் குருவிக்கு இரைபஞ்சமா ?

கொல்லைப் பச்சிலை மருந்துக்கு உதவுமா ?

கொழுகொம்பில்லாத கொடி போலானேன்.

கொழுக்கட்டையைத் தலைபார்த்துக் கடிக்கிறான்.

கொழுக்கட்டைக்குத் தலையும் இல்லை. குறவனுக்கு முறையும் இல்லை.

கொழுக்கட்டை தின்ற நாய்க்கு குறுணி மோர் குருதட்சணை.
கொழுத்த மீனைத் தின்பவன், குருவிக்கறிக்கு அசிங்கப் படுவானா?
கொழுத்தவனுக்கு கொள்ளும் இளைத்தவனுக்கு எள்ளும்
கொழுத்தவன் கைக்கு இளைத்தவன் துரும்பு.
கொழுமீதிற் குடிகொண்ட குடிச்செல்வம் செல்வம்.
கொள் என்றால் வாயைத்திறந்து, கடிவாளம் என்றால் மூடிக் கொள்வதா ?
கொள்வாரும் இல்லை ; கொடுப்பாருமில்லை.
கொள்ளிக் கட்டையைக் கொண்டு தலையைச் சொறிவார்களா?
கொள்ளிக்கட்டையால் சுட்டால் கொப்பளிக்கும் என்று வாழைப் பழத்தால் வடுவடுவாய் வைக்கிறான்.
கொள்ளிக்கு எதிர்போனாலும் வெள்ளிக்கு எதிர்போகாதே !
கொள்ளியை இழுத்துப் போட்டால் கொதிப்பது அடங்கிப் போகும்.
கொள்ளுக் குத்திய உலக்கையைப் போல.
கொள்ளும் வரையில் கொண்டாட்டம். கொண்டபின் திண்டாட்டம்.
கொள்ளைக்குப் போனாலும் கூட்டு ஆகாது.
கொள்ளைக்கு முந்து ; கோபத்திற்கு பிந்து.
கொள்ளையிடப் போகிறவனுக்குக் குருடன் துணையாகுமா?
கொற்றவன் அறியான், உற்றிடத்து உதவி.
கொற்றவனைவிடக் கற்றவன் பெரியன்.
கொன்றாற் பாவம் தின்றால் தீரும்.

# கோ

"கோடானுகோடி வினைவரினும் மனங்கோணாமல் இருப்பதே கோடி பெறும்"
கோடாலிக் காம்பினால் குலத்திற்குக் கேடு வரும்.
கோடிச் சீமானும் கோவணாண்டியும் சரிதானா ?

கோடி தனம் இருந்தாலும் குணமில்லாத மங்கையருடன் கூடாதே.

கோடி நேசம் கேடுபடுத்தும்.

கோடிப் புடவையைக் கட்டிக்கொண்ட தைரியத்தில் குடிசையைக் கொளுத்தினளாம்.

கோடிமுன்னடர் ஏறி மிதித்தாலும் கூழாங்கல்லு சாந்துக்கு வருமா?

கோடி வித்தையும் கூழுக்குத்தான்.

கோடைஇடி குமுறினாற்போல இடித்தது.

கோடையில் காய்கிற பயிர் வாடையில் தளிர்க்கும்.

கோடையிலே தண்ணீர் ஓடை கண்ட மான்.

கோட் சொல்பவனைக் கொடுந்தேள் என்று நினை.

கோட் சொல்லும் வாய் காற்றுடன் நெருப்பு.

கோட்டுச் சம்பா ஆக்கி வைத்தால் போட்டுச் சாப்பிட வருவார்கள்.

கோட்டைக்குள்ளேயே குத்தும் வெட்டுமா ?

கோட்டையில் பெண் பிறந்தாலும் போட்டபுள்ளி போகுமா.

கோணற் கொம்பு ஏறி என்ன? குதிரைமீது ஏறி என்ன? வீணர்க்கும் கீர்த்திக்கும் வெகுதூரம்.

கோணி கொண்டது; எருது சுமந்தது.

கோணிக் கோடி கொடுப்பதைவிடக் கோணாமற் காணி கொடுப்பது மேல்.

கோத்திரத்திலேயே கிடைத்தால் குரங்கானாலும் கொள்ளு.

கோத்திரம் அறிந்து பெண்ணைக் கொடு; பாத்திரம் அறிந்து பிச்சை இடு.

கோத்திர சனம் சாத்திரம் பார்ப்பான்.

கோபத்தில் அறுத்த மூக்கு சந்தோஷத்தில் வருமா?

கோபமில்லாத துரையும் சம்பளமில்லாத சேவகனும்.

கோபமுள்ள இடத்திலே குணம் உண்டு.

கோபம், பாபம் சண்டாளம்

கோபி குதிரைமேல் கடிவாளம் இல்லாய்.

கோபுரத்திலே விளக்கை வைத்து, பொட்டுக் கூடையால் மூடுவானேன்.

கோபுரத்தின் மேலேறிக் குடத்தைக் கழற்றுபவன், அரைக் கீரைக்கொல்லையைப் பார்த்துக் 'கொள்ளை கொள்ளை' என்றானாம்.

கோபுரம் தாங்கிபோல் நடக்கிறான்.

கோபுரம் தாங்கிய பூதம்போலச் சுமக்கிறான்.

கோபுரம் தாங்கிய பொம்மையைப்போல.

கோவணத்தை அவிழ்த்து மேற்கட்டு கட்டுவது.

கோமுட்டிச் சாட்சி.

கோமுட்டிப் புத்திக்கு மோசம் இல்லை.

கோமுட்டி புத்திக்கு மோசம் ஏது; மோசம் வந்தால் செப்பலேது.

கோமுட்டியைச் சாட்சிக்குக் கூப்பிட்டதைப்போல.

கோயிலையும் குளத்தையும் அடுத்திருக்கவேண்டும்.

கோயில் இல்லாத ஊரில் குடியிருக்கவேண்டாம்.

கோயில் மணியம் என்று கூப்பிட்டால் போதும்.

கோயில் பூனைக்குப் பயம் ஏது?

கோயிற்பூனை தேவர்க்கு அஞ்சுமா?

கோரக்கர் வைத்தியம் குணத்திற்கு ஏற்குமா?

கோரை குடியைக் கெடுக்கும்.

கோரைக்கிழங்கும் வேளையில் உதவும்.

கோல் ஆடக் குரங்கு ஆடும்; அதுபோல மனம் ஆடும்.

கோல் இழந்த குருடனைப்போல.

கோவணத்தில் ஒரு காசு இருந்தால் கோழி கூவ ஒரு பாட்டு பாட வரும்.

கோவிலிடிக்கத் துணிந்தவனு, குளம் வெட்டப்போகிறான்,

கோவிலில் கொட்டு முழக்கு, கடையில் பாக்கு வெற்றிலை.

கோவிலை அடைத்து கொள்ளையிடுகிறவனு குருக்களுக்குத் தட்சணை கொடுப்பான்.

கோவில் விளங்கக் குடி விளங்கும்.

கோவுக்கு அழகு செங்கோல் முறைமை.

கோவூரான் ஊர்மேல் போக, குண்ணத்தூரான் தண்டம் கொடுக்க.

கோழியை அடிப்பதற்கு குறுந்தடி ஏன்?

கோழி களவுபோக ஆடு வெட்டிப் பொங்கல் இடுவதா?

கோழி கறுப்பானால் அதன் முட்டையுமா கறுப்பு?
கோழி கூவிப் பொழுது விடியுதா ? நாய் குலைத்து பொழுது விடியுதா?
கோழி கொடுத்துக் குரலும் அழுகிறதா?
கோழிக்கறி கொடுத்துக் குயிற்கறி வாங்கினாற்போல,
கோழிக்குஞ்சுக்குப் பால் கொடுக்குமா?
கோழிச் சிறகால் குஞ்சுகளைக் காப்பதுபோல.
கோழியைத் திருடி கூடிக்குலவுகிறான்.
கோழி போனதும் அல்லாமல் குரலும் போச்சு,
கோழி மிதித்துக் குஞ்சு முடமாகுமா?
கோழி முடத்துக்குக் கடாவெட்டி பலியிட்டதுபோல.
கோழி முட்டைக்குத் தலையுமில்லை ; கோயிலாண்டிக்கு முறையுமில்லை.
கோழியின் காலில் கச்சையைக்கட்டினாலும் குப்பையைத்தான் அது கிளறும்.
கோழையில் மொய்த்துக் குழம்பும் ஈ.
கோளுக்குமுந்தேன் ; கூழுக்குப்பிந்தேன்.
கோளுஞ்சொல்லிக் கும்பிடுவானேன்?
கோள் சொல்லிக் குடியைக் கெடுக்கிறதா?
கோணன் கோலெடுக்க, நாறும் ஆருடாச்சு.

# கௌ

கௌசிகத்து ஒளியில் வெர்க்கும் ஒளியும்.
கௌவையுடையார் காலைத்தொடு.
கௌவை கருதேன்.
கௌவை சொல்லில் எவர்க்கும் பகை.
கௌவைப் பட்டால் காயத்தில் ஒரு முழம் நீளுமா?

# ஙு

ஙப்பன் பிறந்தது வெள்ளிமலை; ஞாயி பிறந்தது பொன்மலை, ஙப்போல் வளை.

# ச

சகதியில் கல்லை விட்டெறிந்தால் மேலேதான் தெறிக்கும்.

சகதியில் கல்லை விட்டெறிந்தால் தன் துணி பிறர் துணி என்று பாராது.

சகத்தைக் கெடுத்துச் சுகத்தை வாங்குகிறான்.

சகல நதிகளுக்கும் சமுத்திரமே ஆதரவு. (வானம்)

சகல நட்சத்திரங்கள் கூடினாலும் சந்திரனுக்கு இணையாமோ?

சகலமும் கற்றவன் தன்னைச் சார்ந்திரு.

சகலன் உறவிற் சாண் கொடி பஞ்சமா?

சகுனம் நன்றாயிருக்கிறதென்று பொழுது விடியமட்டும் கன்னம் வைக்கலாமா?

சகோதரன் உள்ளவன் படைக்கு அஞ்சான்.

சக்கிலிப் பெண்ணும் சாமைக்கதிரும் பக்குவத்தில் பார்த்தால் அழகு

சக்கு சக்கெனப் பாக்குத் தின்பான் சபை மெச்ச, வீட்டிலே வந்து சுடைவாயை நக்குவான் பெண்டுகள் மெச்ச.

சங்கனும் புங்கனும் சன்னியாசிக்கு உதவியா?

சங்கிலே வார்த்தால் தீர்த்தம், சட்டியிலே வார்த்தால் தண்ணீரா?

சங்கு ஆயிரங்கொண்டு காசிக்குப் போனாலும் தன் பாபம் தன்னோடே.

சங்கு ஆயிரங்கொண்டு வங்காளம் போனாலும் பொன்பாளம் வந்தது; மண்பாளம் வந்தாலும் வந்தது.

சங்கு உடைந்தது; மண் கரைந்தது.

சங்கூதாமல் தாலி கட்டுவது உண்டா?

சங்கு சுட்டாலும் வெண்மை தரும்.

சங்கோஜம் இல்லையென்றால் சங்கையுமில்லை.

சடைகொண்ட இலுப்பையைத் தடி கொண்டு அடித்ததுபோல.

சடைத்தம்பிரானுக்குச் சாதம் இல்லாதபொழுது மொட்டைத் தம்பிரானுக்கு மோர் எங்கே கிடைக்கும்.

சடைத் தம்பிரான் சோற்றுக்கு அழுகிறானாம்; லிங்கம் பஞ்சாமிர்தம் கேட்டதாம்.

சடையைப் பிடித்து இழுத்தால் சன்யாசி கிட்ட வருவார்.

சட்டி சுட்டது; கை விட்டது.

சட்டிப் பாலுக்கு ஒரு சொட்டு மோர் பிரை.

சட்டுவம் கறிச்சுவை அறியுமா?

சணப்பன் வீட்டுக்கோழி தனக்குத்தானே விலங்கு பூட்டிக் கொண்டதைப்போல.

க்ஷணச் சித்தம்; க்ஷணப் பித்தம்.

சண்டமாருதத்தின்முன் சருகோட்டம்போல.

சண்டிக்கு ஏற்ற முண்டன்.

சண்டிக்குதிரைக்கு நொண்டி சாரதி.

சண்டி புரண்டால் காடு கொள்ளாது.

சண்டியிலும் சண்டி படுசண்டி.

சண்டை நடந்ததற்குச் சாட்சி என் மகள் இருக்கிறாள்.

சண்டை முகத்திலே உறவு ஏடி?

சதகோடி சங்கத்திலே மொட்டைத்தலைத் தாதனைக் கண்டாயா என்பதுபோல.

சதுரக்கள்ளியில் அகில் உண்டாகும்.

சதையில்லாமற் கத்தி நாடுமா?

சதைகண்டு கத்தி நாடவேண்டும்.

சப்த மேகங்களும் ஒன்றுகூடி, நெருப்பு மழை பெய்தாற்போல

சப்தம் பிறந்த இடத்திலே சகல கலைகளும் பிறக்கும்.

சத்தியத்திலே சாமி சாட்சி என்ற சத்தியம் பெரிது.

சத்தியத்தில் சிறந்தவன் அரிச்சந்திரன்.
சத்தியத்துக்கு இல்லாத பிள்ளை துக்கப்பட்டு அழப்போகிறது?
சத்தியமே கொல்லும்; சத்தியமே வெல்லும்.
சத்தியமே சக்தி; சத்தியமே சித்தி.
சத்தியமே தருமம் நித்தியம்.
சத்தியம் நன்னிலை; சாவைத் தினம் நினை.
சத்தியவாசகன்; சமஸ்த சற்குணன்.
சத்திரத்திலே சாப்பாடு மண்டபத்திலே படுக்கை.
சத்திர போஜனம்; மடத்திலே நித்திரை.
சத்திரத்துச் சோற்றுக்கு அப்பனையங்கார் உத்தரவா?
சத்துக்களோடு சத்துக்கள் சேர்வர்; சந்தனத்தோடு கர்ப்பூரம் சேரும்.
சத்துருக்களையும் சித்தமாக நேசி.
சத்துரு பெருமை தனக்கே தண்டனை.
சந்தடி சாக்கிலே கந்தப்பொடி காற்பணம்.
சந்தனம் தேய்ப்பவன் அலைவதுபோல.
சந்தனக்கட்டை தேய்ந்தால் கந்தம் குறையுமா?
சந்தனம் தெளித்த கையாலே, சாணி தெளிக்கலாச்சு.
சந்தனவிருட்சமிருக்கும் காட்டிலே சர்ப்பம் இருக்காது.
சந்தியிலே அடித்ததற்குச் சாட்சியா?
சந்திரனைப் பார்த்த கண்ணுக்குச் சனியனைப் பார்த்தாற்போல.
சந்திரனைப் பார்த்து நாய் குரைத்தாற்போல.
சந்திரன் குளிர்ச்சியாகக் காய்ந்தாலும் சூரியனையே உலகத்தார் நாடுவார்கள்.
சந்திரன், சண்டாளன் வீட்டிலும் பிரகாசிக்கிறான்.
சந்திர சூரியன் தெற்கு வடக்கிலும் பிசகான்.
சந்தை இரைச்சலிலே குடியிருந்து கெட்டேனே.
சந்தைக் கூட்டம் பொம்மலாட்டம்.
சந்தைக்கு வந்தவர்கள் துணையாவார்களா?
சன்னியாசம் சகல நாசம்.
சன்னியாசி கோவணத்துக்கு இச்சித்துச் சமுசாரம் மேவிட்டதுபோல.

சன்னியாசி கோவணம் கட்டினதுபோல.
சன்னியாசிக்குப் பழைய குணம் போகாது.
சன்னியாசிக்கும் ஜாதி மானம் போகாது
சன்னியாசிப் பயணம் தன்னைவிட்டுக் குதிப்பதுதான்.
சன்னியாசி பூனை வளர்த்ததுபோல.
சன்னியாசியார் சந்தையிலே கண்டவளே என்றாட்டினார், தவசிப்பிள்ளை சந்நியாசியார் கண்டவளே என்றாட்டினார்
சன்னியாசியைக் கடித்த நாய்க்குப் பின்னாலே நரகமாம், சன்னியாசிக்கு முன்னாலே மரணமாம்.
சன்னியாசியை நிந்தித்தவனுக்குப் பின்னாலே நரகமாம்.
சன்னியாசி வீடு (பயணம்) திண்ணையிலே.
சபம் சாயாது.
சபைக் கோழை ஆகாது.
சபையிலே நக்கீரன்; அரசிலே விற்சேரன்.
சப்பாணிக்கு நொண்டி சண்டப் பிரசண்டன்.
சப்பாணிக்கு விட்ட இடத்திலே கோபம்.
சப்பாணி மாப்பிள்ளைக்கு சந்தொடிந்த பெண்சாதி.
[illegible] சன்னியாசிக்கும் வண்ணானுக்கும் சம்பந்தமென்ன?
சமயம் வாய்த்தால் களவு செய்வான்.
சமயம் வாய்த்தால் நமனையும் பலகாரம் செய்வான்.
சமயம் வாய்த்தால் நமனையும் வெல்லலாமே!
சமர்த்ததுக்கு ஏதும் பெரிதல்ல.
சமர்த்தன் பெண்ஜாதியும் சோரம் போவாள்.
சமர்த்திலே என்ன பெற்றாள்? சட்டிச் சோற்றைத் தின்னப் பெற்றாள்.
சமர்த்திலே குண்டு பாயுமா?
சமர்த்துக்குச் சனியன்.
சமர்த்துள்ள சேவகனுக்குப் புல்லும் ஆயுதமாம்.
சமர்த்துள்ள சேவகனுக்கு வாள் பழுதானாலும் கேடில்லை.
சமாசாரம் தெரியாமல் அமாவாசைக்குப் போகிறேன்.
சமிக்ஞை அறியாதவன் சதுரன் அல்ல.
சமிக்ஞை காட்டி சண்டைக்கு அழைக்கிறான்.
சமுசாரக் குட்டு வியாதி ரெட்டிப்பு.

சமுசாரக் குட்டு வெளியிட்டால் நஷ்டம்.

சமுசாரமோ சாகரமோ!

சமுசாரம் துக்க சாகரம்.

சமுத்திர அலை ஓயப் போகிறதுமில்லை. தம்பி தலை முழுகித் தர்ப்பணம் செய்யப் போவதுமில்லை.

சமுத்திரத்திலே ஏற்றம் போட்டுத் தண்ணீர் இறைத்தாற் போல்.

சமுத்திரத்தில் ஏற்றம் போட்டது போல் இருக்கிறது.

சமுத்திரத்திற்கும் சாண் துண்டுக்கும் எம்மாத்திரம்?

சமுத்திரமும் சாக்கடையும் சரியா?

சமைக்கப் படைக்கத் தெரியாமற் போனாலும் உடைக்கக் கவிழ்க்கத் தெரியும்.

சமையல் வீட்டிலே நாய் நுழைந்தாற்போல.

சம்பத்தும் விபத்தும் கூடவே இருக்கிறது.

சம்பந்தி கிருகஸ்தன் வந்தான், தவலையை எடுத்து உள்ளே வை.

சம்பளம் அரைப் பணமானாலும், சலுகை இருக்க வேண்டும்.

சம்பளம் அரைப் பணமானாலும், சரக்கு முக்காற் பணம்.

சம்பளம் இல்லாத சேவகனும் கோபமில்லாத எஜமானனும்.

சம்பள விதத்திலேயா குண்டு படுகிறது?

சம்பா விளைந்து சாய்ந்து கிடக்குது, உண்பாரில்லாமல் ஊர்க் குருவி மேயுது.

சயமுள்ள மட்டும் பயமில்லை.

சயினன் கைச் சிலைப் பேன் போல

சாக்கு கண்ட இடத்திலே பிள்ளைக்கு அவிழ்தம் கொடுக்க நினைக்கிறது போல.

சரக்கு கண்ட இடத்திலே பிள்ளை பெறுகிறது.

சரீர பிரயாசை என்னத்திற்கு? சாண் வயிற்றுக்குத் தான்.

சருகரிக்க நேர மின்றி குளிர் காய நேரமில்லை.

சருகு பொறுக்க நேர மின்றி குளிர் காய நேரமில்லை.

சருகைக் கண்டு தணல் அஞ்சுமா?

சருக்கரை என்று எழுதினால் நாக்கு ருசிக்குமா?

சர்க்கரை தின்று பித்தம் போகுமானால், கசப்பு மருந்து ஏன் தின்ன வேண்டும்.

சர்க்கரைப் பாகுத் தோண்டியிலே தாழ மொண்டாலும் தித்திப்பு, மேலே மொண்டாலும் தித்திப்பு.

சர்க்கரையும் தேனும் சிற்றப்பா, ஏட்டில் எழுதி நக்கப்பா.

சர்க்கரையும் மணலும் சரியா?

சர்ப்பத்தின் வாய்த் தவளைப் போல.

சர்வ வில்லங்க சித்தி.

சலம் நுழையாத இடத்தில் எண்ணெயும், எண்ணெய் நுழையாத இடத்தில் புகையும் நுழையும்.

சவிப்போடு சம்பந்தி இழுத்தால் இலை பருக்கை ஏழு இலை.

சல்லடைக் கண் போல சில்லு சில்லாய் துளைக்கிறது.

சல்லிய சாரத்தியம் செய்யாதே.

சல்லி மோதக் கல்லிப் பறிக்கிறது.

சவண்டிக்குச் சாப்பிட்டான் இருக்கச் செத்தது பொய்யா?

சனிப்புப் பிடித்ததோ சனியன் பிடித்ததோ?

சளுக்கன் தனக்குச் சத்துரு, சவளிக்காரனுக்கு மித்துரு.

சற்சனர் உறவு சருக்கரைப் பாகு போல.

சற்புத்திரன் இருக்கிற இடத்திலே தறுதலையும் இருக்கிறது.

சனத்தோடு சனம் சேரும், சந்தனத்தோடு கற்பூரம் சேரும்.

சனப் பலமிருந்தால் மனப் பலம் வரும்.

சனி நீராடு.

சனிப் பிடித்ததோ சனியன் பிடித்ததோ?

சனிப் பிணம் தனிப் போகாது.

சனிப் பிணம் துணையைத் தேடும்.

சனியனை விலைக்கு வாங்கினது போல.

சனியன் பிடித்தவனுக்குச் சந்தையிலும் கந்தை அகப்படாது.

சனியன் பிடித்தவள் சந்தைக்குப் போனாலும் புருஷன் அகப்பட மாட்டான்.

ஜன்மக் குருடனுக்கு கண் கிடைத்தது போல.

ஜன்மத்தால் ஜாதியோ? கர்மத்தால் ஜாதியோ?

ஜன்மத்தில் பிறந்தது செருப்பாலடித்தாலும் போகாது.

சன்னதம் குலைந்தால் கும்பிடு எங்கே வரும்?

சன்னதம் குலைந்தால் வீராப்பு எங்கே?

சன்னம் சன்னம் பர்வதம்.

# சா

சாகத்திரிகிறுன் சண்டாளன். சாப்பிட்டுத்திரிகிறுன் பெண்டாளன்.

சாகத் துணிந்தவனுக்குச் சமுத்திரம் முழங்கால் மட்டும்.

சாகப் பொழுதின்றி வேகப் பொழுதில்லை.

சாக மாட்டாத மாடு கொம்பைக் கொம்பை அலைத்தாற் போல.

சாக மாட்டாமற் சங்கடப்படுகிறது.

சாகாமல் கற்பதே கல்வி, பிறரிடத்தில் ஏகாமல் உண்பதே ஊண்

சாகிற காலத்தில் சங்கரா சங்கரா என்றாற்போல.

சாகிறதுபோலிருந்து வியாதி தீருகிறதும் உண்டு.

சாகிற நாய் வீட்டில் ஏறினாற் போல.

சாகிற நாய் வீரத்தை காட்டினாற் போல.

சாகிற பேருக்கு சமுத்திரம் கால்வாய்.

சாகிற வரைக்கும் சங்கடமானால் வாழ்கிறது எக்காலம்?

சாகிற வரைக்கும் சஞ்சலமானால் போகிறது எக்காலமோ?

சாகிற வரையில் மருந்து கொடுக்க வேண்டும்.

சாகிற வரையில் வைத்தியன் விடான், செத்தாலும் விடான் பஞ்சாங்கக்காரன்.

சாகிற வரையில் கஷ்டமானால் சுகம் எப்போ?

சாகிறவனுக்கு சமுத்திரம் முழங்கால் மட்டும்.

சாகிறவனைப் போலிருப்பான் பிழைப்பான்; பிழைப்பானைப் போலிருப்பான் சாவான்

சாகிறவன் சனியனுக்குப் பயப்படுவானே?

சாக்கையிலே வந்தால் பாடையிலே பார்க்கலாம்

சாக்கடைச் சோறு என்றாலும் சக்களத்தி என்றாலும் சரி

சாக்கடைப் புழு என்றாலும் சக்களத்தி என்றாலும் போதும்

சாக்கடைப் புழு என்றாலும் சக்களத்தியை வெல்லப் போகாது,

சாக்கடைப் புழுவிற்கு போக்கிடம் எங்கே?

சாக்குப் போக்கும் ஏற்காது ஐயன் முன்

சாடிக்கு மூடி வாய்த்தது போல

சாடிச் சட்டிச் சூளைப் போல கோடையிடி விழுந்தாற் போல

சாட்சிக்காரன் காலில் விழுவதைவிடச் சண்டைக்காரன் காலில் விழலாம்.

சாட்டு இல்லாமல் சாவு இல்லை

சாட்டை அடியும் சவுக்கு அடியும் பொறுக்கலாம், மோட்டுப் பூச்சிக் கடியும் முணுமுணுப்பும் ஆகாது.

சாட்டை இல்லா பம்பரம் ஆடுமா?

சாட்டை இல்லா பம்பரம் ஆட்டி வைக்க வல்லவன்

சாணான் எச்சில் கருப்பட்டி, சருக்கரை வெல்லம் உழவன் எச்சில்

சாணி ஒரு கூடை சவ்வாது ஒரு பண எடை

சாணிக்குழியும் சமுத்திரமும் சரியாய் நினைக்கலாமா?

சாணிச்சட்டியும் சருவச்சட்டியும் சரியாமா?

சாணிச் சட்டி வைக்கிற இடத்தில் சாணிச்சட்டியை வைக்க வேண்டும் ; சரிகைச் சட்டி வைக்கிற இடத்தில் சரிகைச் சட்டியை வைக்க வேண்டும்

சாணிப் புழு.

சாணியும் சவ்வாதும் சரியாகுமா?

சாணியைக் கொடுத்து மெழுகு என்றானாம்.

சாணுக்குச் சாண் வித்தியாசம்.

சாணோ வயிறு; சரீர மெல்லாம் வயிறோ?

சாண் ஏற முழம் சறுக்குகிறது.

சாண் கற் கழுவினால் முழம் சோறு.

சாண் காட்டிலே முழத்தடி வெட்டலாமா?

சாண் குருவிக்கு முழ வாலாம்!

சாண் சடைக்கு முழத் துணியா?

சாண் செடியிலே முழத்தடி வெட்டலாமா?

சாண் தண்ணீரிலே முழப் பேய்!

சாண் பண்டாரத்திற்கு முழம் தாடி. (லிங்கம், வீபூதி)

சாண் பறைக்கு முழத்தடி.
சாண் பாம்பானாலும் முழத்தடி வேண்டும்.
சாண் பிள்ளையானாலும் ஆண் பிள்ளை இருக்க வேண்டும்.
சாதி அந்த புத்தி; குலம் அந்த ஆசாரம்.
சாதிக் கடுத்தப் புத்தி தீனிக்கடுத்த லத்தி.
சாதி மானமும் சமய மானமும் சந்நியாசிக்கும் உண்டு.
சாதி வாக்கு ஜங்கட வாக்கு இலுப்பைப் பூ தொளை வாக்கு.
சாது மிரண்டால் காடு இடங் கொள்ளாது
சாதுரியப் பூனை தயிரிருக்க சட்டியை நக்கிற்று
சாதுரியப் பூனை மீனை விட்டு புளியங்காயைத் தின்றதாம்
சாத்தானி குடுமிக்கும் சந்நியாசி பூணூலுக்கும் முடி போடு.
சாஸ்திரத்தைச்சுட்டுச் சதுர்மறையைப் பொய்யாக்கி, சூத்திரத்தைக் கண்டு சுகம் பெறுவது எக்காலம்?
சாஸ்திரம் பாராத வீடு சமுத்திரம், பார்த்த வீடு தரித்திரம்
சாஸ்திரம் பார்த்து பெண்ணைக் கொள், கோத்திரம் பார்த்து பெண்ணைக் கொடு
சாஸ்திரம் பொய் யென்றால் கிரகணத்தைப் பார்
சாந்துப் பெட்டி பாம்பு ஆயிற்று
சாபமிட்டாருண்டோ? தலையில் திரு எழுதாதோ? வேக விட்டாருண்டோ? எழுத்தின் படிதானோ?
சாப்பிணி மருந்தேற்காது
சாப்பிள்ளை பெறுவதிலும் தான் சாவது நலம்
சாப்பிள்ளை பெற்றவளுக்கு சந்தோஷம் வருமா?
சாப்பிள்ளை பெற்றாலும் மருத்துவச்சி கூலித் தப்பாது
சாப்பிள்ளைப் பெற்றுத் தாலாட்டவா?
சாவளவும் இருந்தால் கலியாணம் செய்து வைக்கிறேன்.
சாமி வரங்கொடுத்தாலும், பூசாரி வரங் கொடுக்க மாட்டான்.
சாமைப் பயிரும் சக்கிலியப் பெண்ணும் சமைந்தால் தெரியும்
சாம்பலைத் தின்று வெண்ணெயைப் பூசியதுபோல.
சாயந்திரத்தில் கல்யாணம், பிடி தாம்பூலம்.
சாய்ந்த மரத்தில் ஓடி ஏறலாம்
சாரத்தை உட்கொண்டு சக்கையை உமிழ்வதுபோல.

சாராயத்தை தினம் குடித்தால் ; காராளனும் கடை
மகனுவான்
சாராயத்தை வார்த்துப் பூராயத்தைக் கேளு
சாரையைத் தின்னும் ஊருக்குப் போனுல் நடுக்கண்டம்
எனக்கு.
சார்வில்லாதவனுக்கு நிலையில்லை
சாலாய் வளைந்தால் என்ன சட்டியாய் வளைந்தால் என்ன?
சாலாய் வைத்தாலும் சரி ; சட்டியாய் வைத்தாலும் சரி
சாலோடு அகப்பை தட்டாமற் போகுதா?
சாலோடு தண்ணீர் சாய்த்துக் குடித்தாலும் தாய் வார்க்கும்
தண்ணீர் தாகம் தெளியும்
சாவுக்குப் பிடித்தால் லங்கணத்திற்கு வரும்.
சாறு மிஞ்சினுல் பாறை, சாந்து மிஞ்சினுல் குப்பை.
சான்றோர் இல்லாச் சபை குறவர் சேரி.

# சி

சிங்கத்தின் காட்டை சிறு நரி வளைத்தாற்போல.
சிங்கத்தின் செவியில் ஒட்டின ஈ.
சிங்கத்திற்கு நாயா சிங்கார முடி சூட்டுகிறது?
சிங்கத்திற்குப் பங்கமில்லை.
சிங்கமிருக்க குட்டி வசமாமா?
சிங்கம் பசிக்கு ஆனையைத் தேடிக்கொள்ளும்.
சிங்கம் பசித்தால் தேரையைப் பிடிக்குமா?
சிங்காரவல்லி அங்கயற்கண்ணிக்குத் திட்டு மாறினபின்
இருட்டுச் சடங்கு
சிட்டுக்குருவிக்குப் பட்டம் கட்டினுல், சட்டிப்பானையெல்லாம்
லொட லொடவென்று தத்தும்.
சிட்டுக்குருவி மத்யஸ்தம் போனுற்போல.
சிட்டுக்குருவிமேல் பிரம்மாஸ்திரம் தொடுக்கலாமா?

சிட்டுக்குருவியா திருவணை அடைக்கப் போகிறது?
சிட்டுக்குருவியின் தலைமேல் பனங்காயை வைத்ததுபோல,
சிட்டுக்குருவியின்மேல் ராமபாணம் தொடுக்கிறதா?
சிணுக்கு எல்லாம் பிணக்குக்கு இடம்.
சிணுங்குகிறது எல்லாம் பூசைக்கு அடையாளம்.
சிதம்பர சக்கரத்தைப் பேய் பார்ப்பதுபோல.
சிதம்பரத்திலே பிறந்த பிள்ளைக்கு திருவெம்பாவை கற்றுக் கொடுக்க வேண்டுமா!
சித்தன் போக்குச் சிவன் போக்கு ஆண்டி போக்கு அதே போக்கு.
சித்தி பெருத மருந்தும் மருந்தோ, பெற்றுப் படையாத பிள்ளையும் பிள்ளையோ?
சித்திரச் செந்தாமரையை ஒத்திட முகமலர்ந்தது.
சித்திரத்திலும் சோழியன் ஆகாது.
சித்திரத்திலும் வைத்தெழுத ஒட்டான்.
சித்திரத்தில் எழுதிய செந்தாமரையைப்போல.
சித்திரத்துக் கொக்கே ரத்தினத்தைக் கக்கு.
சித்திரத்தை தோண்டி அப்புறத்தே வைப்பான்.
சித்திரபுத்திரனுக்குத் தெரியாமல் சீட்டுக் கிழியுமா?
சித்திரப் பதுமையைப்போல பிரமிக்க.
சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்.
சித்திரை யென்று சிறுக்கிறதுமில்லை; பங்குனியென்று பருக்கிறதுமில்லை.
சித்திரை மாசத்திற் செல்வன் பிறந்தால் சீரும் சிறப்புங் கெடும்.
சித்திரை மாசத்திற் பிறந்த கேடனுமில்லை; ஐப்பசியிலே பிறந்த அதிர்ஷ்டவானும் இல்லை.
சித்தூரிலே செல்லக் கூத்து.
சித்திராங்கி பொம்மா சின்ன வெங்கிடம்மா.
சிநேகஞ் செய்தபின் சோதி; தெளிந்த பின் நம்பு.
சிநேகம் செய்யுமுன் ஆராய்ந்து செய், செய்தபின் ஐயப் படாதே.
சிந்தி அறுந்து போகிற மூக்கு எந்த மட்டும் இருக்கும்?
சிந்தின வீட்டிலே சேராது, மங்கின வீட்டிலே வராது.

சிப்பியிலே விழுந்த மழைத்துளி முத்தாகும்.

சிப்பியிலே விளையாதது; சங்கிலே விளையப்போகிறதா?

சிரசுக்கு மேலே செய்கிற ஆக்கினையுமுண்டோ?

சிரஞ்சீவி பெற்றவருக்கு எம பயம் ஏது?

சிரட்டைத் தண்ணீர் எறும்புக்கு சமுத்திரம்.

சிரித்தாயோ சேலையை அவிழ்த்தாயோ?

சிரித்துக் கழுத்தறுக்கிறது.

சிரித்து சிரித்துத் தின்கின்ற தோசைக்கு காசில்லையா?

சிரித்தாயோ சிரைக் குலைத்தாயோ?

சிரிப்பாணிக் கூத்து சிரிப்பாய் சிரித்து சீலைப் பேன் குத்துகிறது.

சிரிப்பார் சிரிக்க தெருவிலே நிற்கிறது.

சிரைத்தால் மொட்டை, வைத்தால் குடுமி.

சிரைத்தாற் கூலி, சேவித்தாற் சம்பளம்.

சிறுக்கச் சிறுக்க குத்துகிறதெல்லாம் சித்திரத்திற்கு அழகு.

சிறுவுண்டானால் சேவகமுண்டு.

சில்லரைக் கடன் சிரழிக்கும்.

சில்லரை வைத்தியம்.

சிவசொத்து குல நாசம்.

சிவபூசை வேளையிலே கரடி புகுந்ததுபோல.

சிவலிங்கத்தின் மேல் எலி போல.

சிவனே என்றிருந்தாலும் தீவினை விடவில்லை.

சிவியாருக்கு அடிமைப் பட்டால் சாகவும் வேண்டும், சுமக்கவும் வேண்டும்.

சிறகிலும் மெல்லியதாய் பொன் அடிப்பான்.

சிறகு இல்லாத பறவையைப்போல் ஆனேன்.

சிறகு பறிகொடுத்த பறவையைப்போல்.

சிறகு முளைத்தார் பறத்தலும் கற்றார்.

சிறப்போடு பூனை இறப்பிலிருந்தால் புறப்படமாட்டாதெலி.

சிறியாரோடு இணங்காதே, செம்புக்கு புளிவிட்டுக் கடையாதே.

சிறியார் வசை செய்பொன் போல.

சிறியார்க்கினியவைக் காட்டாதே, செம்புக்கு புளி விட்டு ஆக்காதே.

சிறியோர் எல்லாம் சிறியர் அல்லர்.

சிறியோர் செய்த சிறுபிழை பெரியோர் பொறுப்பது கடனே.

சிறுகக் கட்டி பெருக வாழு.

சிறுக விதைத்தவன் சிறுக அறுப்பான்.

சிறு குழந்தை இல்லாத வீடும் வீடு அல்ல, சீரகம் இட்டு ஆக்காத கறியும் கறி அல்ல.

சிறு குழிகள் கொஞ்சத் தண்ணீரால் நிரம்பும்.

சிறுக்கி சின்னப்பணம்; சிறுக்கி கொண்டை மூன்று பணம்.

சிறுக்கி சேதி யறியாமல் செடியைச் செடியை சுற்றுகிறது.

சிறு துரும்பும் பல் லுக் குத்த உதவும்.

சிறுத்திருக்கையில் வளையாதது பருத்திருக்கையில் வளையுமா?

சிறு பிள்ளை இட்ட வேளாண்மை வீடு வந்து சேராது.

சிறுபிள்ளை கட்டின சிற்றுடைபோல.

சிறு பிள்ளையானாலும் ஆடுவோர் மூப்பு.

சிறுபிள்ளை விளையாட்டு அழிந்தது மாங்காடு.

சிறு பெண் கட்டின சிற்றுடையா?

சிறுபோது படியாத கல்வி, அழுக்குச் சேலையில் சாயம் ஏற்றினதுபோல.

சிறு மீன் எல்லாம் பெருமீனுக்கு இரை.

சிறு முள்ளுக் குத்தி பெருமலை நோகுமா?

சிறுமைப் படுகிறதைவிட செத்தால் உத்தமம்.

சிறுமையிற் கல்வி; சிலைமேல் எழுத்து.

சிறுமையும் பெருமையும் தான் தர வரும்.

சிறு ரூபத்தை உடையவரும் அரும்பொருளைச் செய்வார்.

சிறு விதையாகிய ஆலமரம் பெரு நிழலைக்கொடுக்கும்.

சிறைக்குக் கீழ்ச் சிறை, அதன் கீழ் சிங்கையலங்கரிப்போன்.

சிறைச்சாலைக்கு அழகில்லை. விலைமாதுக்கு முறையில்லை.

சிறைப்பட்டாயோ குறைப்பட்டாயோ?

சிற்றப்பன் வீட்டுக்குப்போய் சிற்றுடை வாங்கிவரலாம் என்று போனாளாம், சிற்றப்பன் பெண்சாதி ஈச்சம்பாய் கட்டி எதிரே வந்தாளாம்.

சிற்றாத்தை பிள்ளையும் பிள்ளையோ செத்தபின் பல்லியும் பல்லியோ?

சிற்றாள் எட்டு ஆளுக்குச் சரி.

சிற்றின்பம் எண்ணார் மற்றின்பம் கண்டார்.

சிற்றுணர்வோர் என்றும் சிலு சிலுப்பர்,

சிற்றூண் இனிது.

சிற்றூரிலே பாரிக் கூத்தா?

சிற்றெறும்பை சிற்றெறும்பும் கட்டெறும்பை கட்டெறும்பும் தேடும்.

சினத்தால் அறுத்த மூக்கு சிரித்தால் வருமா?

சினந்திருந்தார் வாசல் வழி தேடவேண்டாம்.

சினத்தைப் பேணின் தவத்திற்கழிவு.

சினந்தாலும் சீர் அழியப் பேசாதே.

சின்னச் சின்னப் பேச்சு, சிங்காரப் பேச்சு; வண்ண வண்ணப் பேச்சு, மெத்த வழக்கமான பேச்சு.

சின்னச் சின்னப் பேச்சும் சிரித்தாற் போல வார்த்தையும்.

சின்னப் பாம்பானாலும் பெரிய தடி கொண்டடி.

சின்ன வீடாம் சிறு கதவாம், அரக்கு முத்திரையாம், வையாபுரியான் கலகமிட வைத்தது வைத்தாற்போல.

சின்ன வீட்டிலே செய்தது ; சீமந்தத்திலே தெரியவரும்.

சின்ன வீட்டுச் சேதி அம்பலத்திலே வரும்.

சின்னரண்ணன் கோயிலிலே சிலை பண்ணி வைத்தாற்போல.



சீ என்ற வீட்டிலே பேயும் நுழையாது.

சீ என்கிற காட்டில் செந்நாய் சேருமா?

சீக்கிரம் புத்தி பலவீனம்.

சீச்சீ என்கிறதும் இந்த வாய்தான், சிவ சிவ என்கிறதும் இந்த வாய்தான்.

சீட்டாளுக்கு ஒரு முட்டாள், செருப்புத் தூக்கிக்கு ஒரு அடைப்பக்காரன்.

சீதேவியுடன் கூட மூதேவி பிறந்தாற்போல.

சீதேவி தன்னுடனே செல்ல திருப்பாற் கடலில் மூதேவி ஏன் பிறந்தாள் முன்?

சீதை பிறக்க இலங்கை அழிய.

சீபுரத்துப் பள்ளி செத்தும் கெட்டான் இருந்தும் கெட்டான்.

சீப்பு எடுத்து ஒளித்தால் கலியாணம் நிற்குமா?

சீயபுரத்துப் பள்ளி செத்தும் கெடுத்தான் இருந்தும் கெடுத்தான்.

சீரங்கத்திலே பிறந்த பிள்ளைக்குத் திருவாய்மொழி கற்பிக்க வேண்டுமா?

சீரங்கத்தில் உலக்கை கொடுத்ததுபோல.

சீரங்கத்து காகமானாலும் கோவிந்தம் பாடுமா?

சீரங்கத்துக்குப் போகிறவன் ஓரியை மாராப்பு போட்டது போல.

சீரங்கத்துக்குப் போகிறவன் வழியிலே பாதியைப் பறி கொடுத்ததுபோல.

சீரங்கத்துக்குப் போயும் சொறிதாசன் காலில் விழுகிறதா?

சீரணி கெட்டால் கோரணி.

சீராளனைப் பெற்ற பிறகு திருச்சீலைத் துணிக்கு வருத்தமாச்சுது.

சீராளன் கலியாணத்தில் மூன்று பேர் பெண்டுகள் மாரோடே மார் தள்ளுது.

சீரியருக்கு அன்பு செய்.

சீரியர் கெட்டாலும் சீரியரே.

சீர் அற்றார் கையிற் செம்பொன் விலை பெறு.

சீர் ஒழுகு சான்றோர் சினம்.

சீர் கேடனுக்கு வாழ்க்கைப் பட்டுத் திரிசீலைத் துணிக்கு வதைப் படாமலிருந்தேன், சீராளனைப் பெற்ற பிறகு திரிச்சீலைத் துணிக்கு வருத்தமாச்சுது.

சீலை இல்லை யென்று சின்னாயி வீட்டுக்குப் போனாள், அவள் ஈச்சம் பாயைக் கட்டிக்கொண்டு எதிரே வந்தாளாம்.

சீலைப்பாய் ஈயும் போய்ச் சீனிச் சர்க்கரை கட்டுமா?

சீவரத்துக் கிராமணி இருந்தும் கெடுத்தான், செத்தும் கெடுத்தான்

சீவனம் செய்ய நாவினை விற்கேல்.

சீவனும் விட்டது, வியாதியும் பொட்டென்று நின்றது.

சீவன் போனால் கீர்த்தியும் போகுமா?

சீறிவரும் வடவாக்கினியைச் சிறு குட்டை தண்ணீர் அவிக்குமா!

சீறும் படையை கண்டு செடிக்குள் நுழைகிறது.

சீனி என்று எழுதி நக்கினால் இனிக்குமா?



சுக சரீரம் கழுதைப் பிறப்பு.

சுக துக்கம் சுழல் சக்கரம்.

சுகத்துக்குப் பின் துக்கம், துக்கத்துக்குப்பின் சுகம்.

சுகத்தைத் தள்ளினாலும் துக்கத்தைத் தள்ளப் போகாது.

சுகத்தைப் பெற்றதும் அல்லி தவத்தைப் பெற்றதும் அல்லி.

சுகத்தையாவது பெறவேண்டும் தவத்தையாவது பெற வேண்டும்.

சுகம் கெட்டால் விரதம் தக்க வேண்டும், விரதம் கெட்டால் சுகம் தக்க வேண்டும்.

சுகம் கெட்டால் விரதம் லாபம், விரதம் கெட்டால் சுகம் லாபம், இரண்டும் கெட்டால் என்ன லாபம்?

சுகம் தக்ககிறதுமில்லை விரதம் தக்குகிறதுமில்லை.

சுகம் வந்தால் சந்தோஷப்பட்டுத் துன்பம் வந்தால் பின் வாங்குவானேன்.

சுகவாசி உடம்பு கழுதைப் பிறப்பு.

சுகுண சுந்தரி இல்லாத வீடு சுடு காடு.

சுக்கிர உதயத்தில் தாலிகட்டிச் சூரிய உதயத்திற்குள் அறுத்தாள்.

சுக்கிரதிசை அவன்...............அடிக்கிறது.

சுக்கிர பகவான் புறப்பட்ட கண்ணிலே முள்ளு குத்தினது போல்.

சுக்கிரவ ஆக்கினையாய் இருக்கிறது.

சுக்ரீவ ஆக்கினை எங்கும் இல்லை.

சுக்கு அறியாத கஷாயம் உண்டா?

சுக்கு கண்ட இடத்திலே முக்கிப் பிள்ளை பெறுவாளா?

சுக்கு கண்ட இடத்தில் பிள்ளை பெற்று சூரிய நாராயணன் என்று பெயர் இடுவாள்.

சுக்கைத்தின்று முக்கிப் பெற்றால்தான் தெரியும் பிள்ளை அருமை.

சுக்கும் பாக்கும் வெட்டித் தாரேன்; சுள் சுள் என்று தலையில் ஏறு.

சுகமும் சுமும் இறுகத் தடிக்கும்.

சுங்கம் மாறினால் சுண்ணாம்பு கிடையாது.

சுங்கா மூஞ்சி காட்டாதே. வந்த விருந்தாளியை ஓட்டாதே

சுடர் விளக்காயினும் தூண்டுகோல் ஒன்று வேண்டும்.

சுடலை ஞானம் திரும்பி வர மட்டும்.

சுடுகாடு போன பிணம் திரும்பாது.

சுடுகாடு போன பிணம் நடு வீடு வந்து சேருமா?

சுடுகாட்டுப் புகையை பார்க்கும் கொம்பேறி மூக்கன்.

சுடுகாட்டு வழி போனாலும் இடு காட்டு வழி போகலாகாது.

சுடுகொண்டைக்காக ஏரியை உடைக்கலாமா?

சுடுநெருப்பை மடியிலே முடியலாமா?

சுட்ட களியை நாய் புரட்டுவது போல

சுட்ட சட்டி அறியுமா கறிச்சுவை?

சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமா?

சுட்ட நண்டுக்கு வேலி கட்டின சுடுகாட்டுப் பள்ளி.

சுட்ட மண்ணும் பச்சை மண்ணும் ஒட்டுமா?

சுண்டினாலும் பால் சுவை குறையுமா?

சுண்டைக்காயிலே கடிப்பது பாதி; வைப்பது பாதியா?

சுண்டைக்காய் காற்பணம், சுமை கூலி முக்காற் பணம்.

சுண்ணாம்பில் இருக்கிறது சூட்சுமம்.

சுத்த சைவம் மரக்கறி எல்லாம் தள்ளுபடி.

சுத்தம் சோறு போடும்.
சுத்தம் சோறு போடும்; எச்சில் இரக்கச் செய்யும்.
சுத்த விலங்கோடு சுத்த விலங்குதான் சேரும்.
சுத்த வீரனுக்கு உயிர் துரும்பு.
சுந்தரியும் வாழ்க்கைப்பட்டாள், பந்தலிலே தீ பட்டது.
சுபஸ்ய சீக்கிரம்.
சுமந்த தலையும் சும்மாடுமாய் திண்டாடுகிறது.
சுமந்தவன் தலையிலே பத்துச் சுமை.
சுமை இழந்தார்க்குச் சுங்கம் இல்லை.
சுமைதாங்கி ஆயம் தீர்க்காது.
சும்மா அறுப்பானா சொத்தை களாக்காயை?
சும்மா இருக்கிற தம்பிரானுக்கு ரெண்டு பட்டை.
சும்மா இருந்த பெண்ணுக்கு அரைப்பணத் தாலி போதாதா?
சும்மா இருக்கிற உடம்பிலே சுண்ணும்பைத் தடவி புண்ணுக்குவானேன்?
சும்மா கல அரிசி சுமக்கமாட்டான்; நனைந்தபின் முக்கலம் சுமப்பானா?
சும்மா கிடக்கிற சங்கை ஊதிக் கெடுத்தானும் ஆண்டி?
சும்மா கிடந்தால் யார் அறிவார்: வாடா திம்மா தாலாட்ட
சும்மா கிடைக்குமா சோணசலன் பதம்?
சும்மா கிடைத்தால் எனக்கொருத்தி; எங்கப்பனுக்கு ஒருத்தி.
சும்மாட்டுக்கும் சும்மாயிருப்பவனுக்கும் தெரியுமா?
சும்மா இருக்கிறவனைப் பிடிப்பானேன்; இரவெல்லாம் கிடந்து பிதற்றுவானேன்?
சும்மா வந்த மாட்டைப் பல்லைப் பிடித்துப் பார்ப்பதா?
சுயக்காரியப் புலி.
சுயபுத்தி போனாலும் சொற்புத்தி கேட்கவேண்டாமா?
சுயபுத்தியுமில்லை; சொற்புத்தியுமில்லை.
சுரணை கெட்டவன் சொந்தக்காரன்.
சுருட்டுப்பாய், முறட்டுப் பெண், குருட்டு மாப்பிள்ளை இருட்டு அறை.

சுருட்டை சோறு இடும், பம்பை பால் வார்க்கும், கோரை குடி கெடுக்கும்.

சுருதி, குரு, சுபானுபவம், மூன்றும் ஒத்தது மெய்ப் பொருளாம்.

சுருதி, சுயானுபவம் இரண்டும் ஒத்தால் முக்தி.

சுரை ஆழ, அம்மி மிதப்பா.

சுரைக்காய் மிதக்கிறது; அம்மி அமிழ்ந்து போகிறது.

சுரைப்பூவுக்கும் பறைப்பாட்டுக்கும் மணம் இல்லை.

சுவரின் மறைவில் யாரடா, சுரக்காரன் பத்தியம் சாப்பிடுகிறேன்.

சுவருக்கும் காதுகள் உண்டு.

சுவரைக் கொண்டல்லவோ சித்திரம் வரையவேண்டும்.

சுவர்க்கத்திலே தோட்டியுஞ் சரி; தொண்டைமானுஞ் சரி.

சுவர்க்கத்திற்கு போகும்போது கக்கத்திலே ராட்டினம் ஏன்?

சுவர்க்கத்துக்கு போகும்போது கக்கத்திலே மூட்டை ஏன்?

சுவர்க்கத்துக்குப் போனாலும் கக்கத்திலே ஒரு பிள்ளை வேண்டுமா?

சுவர்க்கீரையை வழித்துப் போடடா, சுரணைகெட்ட வெள்ளாட்டி.

சுவாமி இல்லையென்றால் சாணியைப் பார்; மருந்தில்லையென்றால் பணத்தைப் பார்; பேதியில்லையென்றால் நேர்வாளத்தைப் பார்.

சுவாமியார்க்குச் சாமியார் வேண்டும்.

சுவாமி வரங்கொடுத்தாலும் பூசாரி இடங்கொடுக்க மாட்டான்.

சுளாப்பு எல்லாம் பொல்லாப்பு.

சுற்றத்தவரைப் பற்றியிரு.

சுற்றத் துணியும் இல்லை; நக்கத் தவிடும் இல்லை.

சுற்றத்திற்கு அழகு: சூழவிருத்தல்.

சுற்றம் பார்க்கில் குற்றமில்லை.

# சூ

சூட்சமத்தில் இருக்கிறது மோட்சம்.

சூடும் உணர்ச்சி வராது; சுணை கெட்ட மாட்டுக்கு.

சூடுகண்ட பூனை அடுப்படிக்கு வராது.

சூடு சுரணை யற்றவனுக்கு நாடு நகர் ஏது?

சூடு மிதிக்கிற மாட்டின் வாயைக் கட்டலாமா?

சூதனுக்கு நீதியில்லை.

சூதன் சொல்லையிலே மாடு மேயும்.

சூதாடித் தோற்றவனுக்கு சுகங் கிட்டாது.

சூதில் வெல்வது எளிது.

சூதுக்காரன் கையும் கோள்காரன் கையும் சும்மா இருக்காது.

சூதுக்காரன் கையை வெட்டிப் போட்டாலும் துடுப்பைக் கட்டிச் சூது ஆடுவான்.

சூதுக்காரன் பணம் சுற்றியிருக்கிற பேரைச் சேரும்.

சூதும் வாதும் வேதனை செய்யும்.

சூது விரும்பேல்.

சூத்திரப்பாவையைப்போல் நடிக்கிறான்.

சூத்திர வேதன் சாஸ்திரம் பார்ப்பான்.

சூத்திலே கட்டத்துணியில்லை; கூத்தியார் இரண்டு.

சூத்தில்லாத குடுவை.

சூத்து எப்படி அலைந்தாலும் சரி; காவடி மட்டும் ராமேசுவரம் போய்ச் சேர்ந்தால்சரி.

சூத்துத் துணியை நம்புவதில்லை.

சூத்துப் புடவையை விட்டால் மாற்றிக் கட்டத் துணியில்லை

சூத்தைப் பார்த்தால்தான் சோழ மண்டலத்து அகவிலை.

சூத்தையும் இன்னித் தொட்டிலையும் ஆட்டுவது.

சூத்தில்லாதக் குடுவை, சுழன்று சுழன்று ஆடுது.

சூத்தை வழித்து மூக்காடு போட்டாற்போல.

சூரனுக்குத் துரைமக்கள் துரும்பு.
சூரியனுக்கு முன் மின்மினிபோல.
சூரியனைக் கண்ட இருளைப் போல.
சூரியனைக் கண்ட தாமரைப்போல.
சூரியனைக் கண்ட பனியைப்போல.
சூரியனைக் கண்டு உலகம் விளங்கும்.
சூரியனைக் கல்லால் அடித்தாற் போல.
சூரியனைக் கிரஹணம் பிடித்ததுபோல, என்னைச் சனியன் பிடித்தது.
சூரியனைக் கையால் மறைக்க முடியுமா?
சூரியனைப் பார்த்து நாய் குரைக்கிறது.
சூரியன் கீழே தோன்றுவதெல்லாம் மாயை.
சூரியன் தந்த அக்கினியைக் கொண்டு சூரியனைப் பணிவது போல.
சூரியன் முன் சூழ்ந்த கருமேகம்.
சூரியன் முன்னே சந்திரன் தோன்றுமா?
சூரியன் விளக்கிருக்கச் சுடர் விளக்கு எதற்கு?
சூலாகும் மீன்கள் ஒன்றை ஒன்று மோந்துக் கொள்ளும்.
சூலி சூலியென்று சோற்றைத் தின்று மலடி வயிற்றில் மண்ணைப் போடுவதா?
சூலிக்குச் சுக்குமேல் ஆசை.
சூல் வித்தை காட்டுகிறேன், பராக்கில்லாமல் பார்.

# செ

செக்கடி முத்தி! எனக்கென்ன புத்தி.
செக்களவு பொன்னிருந்தாலும் செதுக்கியுண்டால் எத்தனை காலம் வரும்?
செக்கில் அரைப்பட்ட எள் திரும்ப முழுசாகுமா?
செக்கிலகப்பட்ட தேங்காய் பிண்ணாக்கு ஆவதுபோல.

செக்கு நக்குகிற தம்பிரானே, உன் திருவடிக்குத் தண்டம் அந்தண்டை நக்கடா; பிள்ளாய், ஐசுவரியம் பெருகி இருப்பாய்.

செக்கு உலக்கையைத் தின்றவனுக்குச் சுக்குக் கஷாயமா?

செக்கு நக்குகிற தம்பிரானே தண்டம்; நீ தென்புறம் நக்கு; நான் வடபுறம் நக்குகிறேன்.

செக்கை வளைய வரும் எருதுகள் போல.

செக்கென்றும் சிவலிங்கமென்றும் தெரியாதா?

செங்கோலுக்கு முன்னே சங்கீதமா?

செங்கோல் கோணினால் எங்கும் கோணும்.

செடியிலிருக்கிற ஓணானை மடியில் விட்டுக் கொண்டு குடைகிறது குடைகிறது என்றால்.

செடி வைத்துக்கொண்டு, விலை கூறலாம்.

செட்டிகள் மாடு மலை ஏறி மேயுமா?

செட்டி கூடிக் கெட்டான்; சேணியன் பிரிந்து கெட்டான்.

செட்டிக்கு தெற்குச் செம்புச் சனியன்.

செட்டிக்கு ஒரு தட்டு; சேவகனுக்கு ஒரு வெட்டு.

செட்டிக்கும் மட்டிக்கும் ஜென்மப் பகை.

செட்டி சிங்காரிப்பதற்குள்ளே பட்டணம் கொள்ளை போய்விடும்.

செட்டி படை வெல்லுமா, சேற்றுத் தவளை கடிக்குமா?

செட்டி பணத்தைக் குறைத்தான்; சேணியன் நூலைக் குறைத்தான்.

செட்டிபோன இடம் எல்லாம் வட்டம் காற்பணம்.

செட்டிப் பிள்ளையோ, கெட்டிப்பிள்ளையோ?

செட்டி மிடுக்கோ, சரக்கு மிடுக்கோ?

செட்டியாரே செட்டியாரே என்றால் சீரகம் எடை மூக்கால் பணம் என்கிறார்.

செட்டியாரே வாரும் ; சந்தடியை ஒப்புக் கொள்ளும்

செட்டியார் வாழ்வு செத்தால் தெரியும்.

செட்டியார் பிள்ளை செல்வப் பிள்ளையானாலும் படைக்குப் போகிற நாயக்கரை பயமுறுத்தலாமா?

செட்டியை நீலி தொடர்ந்ததுபோல.

செட்டி வீட்டில் பணம் இருக்கிறது; ஆலமரத்தில் பேய் இருக்கிறது.

செத்த அன்றைக்கே சொன்னால் பத்தாம் நாள் வருவான்.

செத்த நாய் திரும்பக் கடிக்காது.

செத்தப் பாம்பை ஆட்டுவாளாம்; வித்தைக்காரப் பெண் பிள்ளை.

செத்த பிணத்திற்கு இனிச் சாகும் பிணம் அழுகிறது.

செத்த பிணத்திற்குக் கண் ஏன்? சிவ சிவா ஆண்டிக்குப் பெண் ஏன்?

செத்த பிறகா செய்தவனுக்குச் செய்வது?

செத்த பிறகா செல்வத்தை அனுபவிக்கிறது.

செத்தபின் எப்படிப்போனால் என்ன?

செத்தமாடு புல் தின்னுமா?

செத்த மாட்டை அறுக்காத கத்தி, சொத்தைக் கத்தரிக் காயை அறுக்கும்.

செத்தவன் உடைமை இருந்தவனுக்கு அடைக்கலம்.

செத்தவன் கண் செந்தாமரைக் கண் (கடாக்கண்) இருந்தவன் கண் நொள்ளைக் கண் (இல்லாக்கண்)

செத்தவன் கையில் வெற்றிலைப் பாக்கு கொடுத்ததுபோல.

செத்தவன் தலை கிழக்கே இருந்தால் என்ன? மேற்கே இருந்தால் என்ன?

செத்தவன் பிள்ளை; இருக்கிறவனுக்கு அடைக்கலம்.

செத்தவன் பெண்சாதியை இருந்தவன் கொண்டாற்போல.

செத்தவன் வாயிலே மண், இருந்தவன் வாயிலே சோறு.

செத்தவன் வீட்டிற் கெட்டவன் யார்?

செத்தவிடம் புல் முளைத்துபோம்.

செத்தால் தெரியும்; செட்டியார் வாழ்வு.

செத்துச் சுண்ணாம்பாகிற வரை.

செத்துத் தெய்வமாய் நிற்கிறான்.

செத்தும் சாகாதவன் தியாகம் கொடுப்போன்.

செத்துபோன தாதன்; மொட்டு (முட்டு) போல முளைத்தான்.

செத்துபோன பாட்டன் இருந்தால் தாடியைப் பிடித்துக் கொண்டு தொங்கலாம் (தெரிவிக்கலாம்)

செத்தைக் கூலி காற்பணம் சுமை (சுமை) கூலி முக்காற் பணம்.

செந்தணலை முந்தானையில் முடியலாமா?

செப்படி வித்தை ; எப்படி போவேன்?

செப்பில்லா குடிக்கு அப்பாப் பட்டமா?

செப்பும் பந்தும்போல.

செம்பரப்பாக்கத்தான் பெயர் பெற்றான், மாங்காட்டான் நீர் பெற்றான்.

செம்பாலைக்கு கரும்பாலை வலிது.

செம்பு நடமாட குயவர் குடி போகிறான்.

செம்போத்து வலமானாலும் சம்பத்து உண்டாகும்.

செம்மறியாடு வெளியே ஓட; திருட்டு ஓநாய் உள்ளே.

செயமுள்ள மட்டும் பயமில்லை.

செய்கிறது சிரைக்கிற வேலை; நினைக்கிறது சிரஸ்ததார் வேலை.

செய்த வினை செய்தவர்க்கே.

செய்தார்க்குச் செய்வது செத்தபிறகோ?

செய்யாப்பிள்ளையும் வரப்பிலே செய்வா செய்வா என்றேனே, நீ செய்யேன் செய்யேன் என்றாயே, நீ பார்த்துக்கோ? நீ கேட்டுக்கோ?

செய்யும் தொழிலெல்லாம் சீர்தூக்கி பார்க்கில் நெய்யுந் தொழிலுக்கு நிகர் இல்லை.

செருப்பால் அடித்தாலும் திருட்டுக் கை நிற்காது.

செருப்பால் அடித்துக் குதிரையோடு நீவட்டி கொடுத்தாற் போல.

செருப்பின் அருமை வெயிலில் தெரியும், நெருப்பின் அருமை குளிரில் தெரியும்.

செருப்புக்கு அச்சாரம் துரும்பு

செருப்பு கொள்ளுகிறது தலைக்கோ காலுக்கோ?

செலவில்லா செல்வம் வந்தால் களவில்லாக் களவு வரும்.

செலவிற் குறைந்த வரவானால் சேமபடுகிறது எப்படி?

செலவு அதிகம் வரவு போதாது.

செலவு இல்லாத சிங்காரம் போல.

செலவு உண்டானால் சேவகமுண்டு.

செலவு செலவோடு கந்தப் பொடிக்குக் காற்பணம்.

செல்லச் சக்கிலிப் பிள்ளை செருப்பு செருப்பாய்த் தின்று கழிகிறது.

செல்லச் சிறுக்கி ஆமுடையான் செவ்வாய்க்கிழமைச் செத்தானாம்; வீடு வெறிச்சாய்ப்போகுமென்று வெள்ளிக்கிழமை எடுத்தானாம்.

செல்லத்தில் ஓர் பெண் பிறந்தது ; செட்டித்தெருவெல்லாம் நொட்டிவிட்டு அலைந்துவிட்டு வந்தது.

செல்லப்பிள்ளை சிலை உடாதாம் பிள்ளைபெறுமட்டும்.

செல்லம் சறுக்குதா? வாசற்படி வழுக்குதா?

செல்வம் பரமண்டலத்தில் செல்லாது; எல்லாமண்டலமும் செல்லும்.

செல்லாத பணமென்று எண்ணாதே; செட்டியார் இருக்கிறார் காட்டிக்கொள்.

செல்லிக்குச் சிரங்கு, சிறுக்கிக்கு அரையாப்பு, பார்க்க வந்த பரியாரிக்கு பக்கப்பிளவு.

செல்லும் செல்லாததுக்கு செட்டியார் இருக்கிறார்.

செல்லும்போது செலுத்துவாய் சிந்தையை.

செல்வப் பெண் சிரங்க நாயகிக்கு சீதனம் வந்ததாம் வறையோடு.

செல்வப் பொருள் கொடுத்தால் குறையும், கல்விப் பொருள் குறையுமோ?

செல்வம் உண்டாகும் காலம் செய்கை உண்டு வல்லமை உண்டு.

செல்வச் செருக்கினால் திரட்டுப்பால் குமட்டுகிறது.

செல்வ நிலையில் சேட்டன் கீழ் இரு.

செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்.

செல்வன் சொல்லுக்கு அஞ்சான், வீரன் போருக்கு அஞ்சான்.

செவிடனும் குருடனும் கூத்து பார்த்தாற்போல.

செவிடன் காதில் ஊதின சங்கு போல.

செவிட்டிலே அறைந்தாலும் தேம்பி அழத்தெரியாது.

சென்மக் குருடனுக்கு கண்கிடைத்தாற் போல.

சென்ற இடமெல்லாம் சிறப்பே கல்வி.

சென்ற இடம் சிறப்பும், கொண்ட இடம் காணியும்

சென்ற காரியத்தைப் பார்த்து வருங் காரியத்தையறி

சென்றும் செலவழிந்தும் சீரழிந்த குடித்தனம்.

# சே

சேடனுக்கு ஏன் குரங்கு புத்தி, சேற்றில் கிடப்பவனுக்கு ஏன் சோமக்கட்டு.

சேணியனைக் கெடுக்க சாண்குரங்கு போதாதா?

சேத நினைவிற்கு பூதஞ்சிரிக்கும்.

சேம்பு கொய்ய சிற்றறிவாள் ஏன்?

சேயின் முகம்பார்க்கும் தாயின் முகம்போல.

சேர இருந்தால் சேடியும் பகை; தூர இருந்தால் தோட்டியும் உறவு.

சேரச் சேரச் சேடியும் பகை.

சேராத இடத்திலே சேர்ந்தால் வாராத துன்பம் வரும்.

சேரிடம் அறிந்து சேர்

சேரியும் ஊரும், செல்வமும் கல்வியும்.

சேர்க்கைக்குத் தக்கபழக்கம்.

சேர்க்கை வாசனையா? இயற்கைவாசனையா?

சேர்ந்தவர் என்பது கூர்ந்து அறிந்தான்.

சேர்த்து வைத்து பசு கறக்கலாமா;

சேலைமேற் சேலைகட்டும் தேவரம்பையானாலும் ஓலைமேல் எழுத்தாணி ஊன்றும் பெண் ஆகாது

சேகன் - இடத்திலே மிதித்து செலம் (ஓலம்) கண்ட இடத்திலே கழுவுவார்கள்.

சேற்றிலே கல்லைவிட்டெறிந்தால் மேலே தெறிக்கும்.

சேற்றிலே கிடக்கிற எருமையைத் தூக்குவானேன்.

சேற்றிலே செங்கழுநீர் பூத்தாற் போல.

சேற்றிலே நட்ட கம்பம்போல.

சேற்றிலே புதைந்த ஆனையை காகமும் குட்டும்.

சேற்றிலே முளைத்த செந்தாமரைப்போல.

சேனைக்குப் பட்டமோ? சேனாபதிக்குப் பட்டமோ?

# சை

சைகை அறியாதவர் சற்றும் அறியார்.

சையெனத் திரியேல்.

சைவத்திற்கு ஆசைப்பட்டு; மரக்கறி தள்ளிவிட்டேன்.

சைவப் பழம் வில்வக்கிளை.

சைவ முத்தையா முதலியாருக்கு சமைத்துப் [illegible] வள்ளுவப் பண்டாரம்

# சொ

சொக்கட்டானும், சோழியும் சதுரங்கம் இம்மூன்றும் துக்க மற்றூர் ஆடுமதொழில்.

சொக்கட்டான் விளையாட்டு பொல்லாத சூது.

சொக்கநாதர்கோவிலுக்கு புல்லுக்கட்டு கட்டினாற்போல.

சொக்கனுக்குச் சட்டி அளவு.

சொட்டை வாளைக்குட்டி துள்ளி விழுகிறது.

சொப்பனம் கண்ட அரிசி சோற்றுக்காகுமா?

சொருகிக் கிடந்த அகப்பையும் சோறு அள்ளப் புறப்பட்டது.

சொல் அம்போ வில்அம்போ?

சொல்லச் சொல்ல மண்டி மண்ணைத் தின்கிறான்.

சொல்லாததை மனையாளுக்குச் சொன்னவன் பட்டபாடு போல.

சொல்லாது பிறவாது; அள்ளாது குறையாது.

சொல்லாமல் இருக்கிறவனே பண்டிதன்.

சொல்லாமற் செய்வோர் பெரியோர்; சொல்லியும் செய்யார் கசடர்.

சொல்லிக் கொடுத்த சொல்லும், கட்டிக்கொடுத்த சோறும் எதுவரையில் நிற்கும்.

சொல்லிப்போகவேணும் சுகத்துக்கு, சொல்லாமற்போகவேணும் துக்கத்துக்கு.

சொல்லின் உறுதி நல்லநெறியே.

சொல்கிறது ஒன்று செய்கிறது ஒன்று.

சொல்கிறவனுக்கு வாய்ச் சொல்; செய்கிறவனுக்குத் தலைச்சுமை

சொல்லுக்கும் பொருளுக்கும் எட்டாதான், சோதிக்கும் சாதிக்கும் நடுவானான்.

சொல்லும் சொல் ஆக்கமும் கேடும் தரும்.

சொல்லும் பொருளும் தோன்றுங் கல்வி.

சொல்லுவார் எல்லாம் துணிவாரா இப்பாய.

சொல்லுவார் சொன்னால் கேட்பாருக்கு மதி எங்கே போச்சு?

சொல்லுவது யார்க்கும் எளிது; அரிதாம் சொல்லியவண்ணம் செயல்.

சொல் வல்லவனை வெல்வது அரிது.

சொல்வளம் இல்லா நற்கதை சொல்லில் அதுவே துர்க்கதை.

சொரிந்து தேய்க்காத எண்ணெயும், பரிந்து இடாத சோறும் பாழ்.

சொரியக் கொடுத்த பசுபோல.

சொற்கேளாப் பிள்ளையால் குலத்துக் கீனம்.

சொற் பேச்சும் கேளான் சுயபுத்தியும் இல்லை.

சொற்றிறம் கூறல் கற்றவர்க்கழகு.

சொன்னது இருக்கச் சுரை பிடுங் நடுறாய்.

சொன்னதைச் சொல்லடி கிளை கெட்ட ஞானி.

சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை.

சொன்னால் வெட்கக்கேடு, அழுதால் துக்கக் கேடு.

# சோ

சோசியம் சொல்லப் பாலியம் போதும்.

சோடி பிரிந்த அன்றிற் போல.

சோட்டாலடித்து வெகுமானம் கொடுப்பது.

சோம்பல் என்பவர் தேம்பித்திரிவர்.

சோம்பலுக்குத் தொடர்ச்சி இளைப்பு. சும்மா இருந்தவருக்குத் தொடர்ச்சி முடத்தனம்.

சோம்பலே சோறு இன்மைக்குப் பிதா

சோம்பல் இல்லாதத்தொழில் சோதனை இல்லாத ஆணை

சோம்பேறிக்கு வாழைப் பழம் தோலோடே!

சோழ புரத்தானே சூது பெருத்தானே?

சோழியன் குடுமி சும்மா ஆடாது.

சோளியைப் பிடுங்கிக் கொண்டா பிச்சை கேட்பது.

சோறு அகப்பட்ட இடம் சொர்க்கம்.

சோறு எங்கே விக்கும்; தொண்டையிலே விக்கும்

சோறு என்ன செய்யும்? சொன்ன வண்ணம் செய்யும்.

சோறு சிந்தினால் பொறுக்கலா, மானம் சிந்தினால் பொறுக்கலாமா?

சோறும் சீலையும் கேளாமலிருந்தால் பெற்ற பிள்ளையைப் போலப் பார்த்துக்கொள்கிறேன்.

சோற்றிலே கிடக்கும் கல்லை எடுக்கமாட்டாதவன் சிவன் கோயில் விரிக்கல்லை எடுப்பானா?

சோற்றிலே கிடந்த கல் எடாதவன் சேற்றிற் கிடக்கும் எருமையைத் தூக்குவானா?

சோற்றின் மறைவில் பைத்தியம் பிடிக்கிறது.

சோற்றுக்கு இல்லாதப் பூசணிக்காய் பந்தலிலே கட்டி ஆட்டவோ?

சோற்றுக்குக் காற்றாய்ப் பறக்கிறது.

சோற்றுக்குக்கேடு; பூமிக்குப் பாரம்.

சோற்றுக்குத் தாளம் போடுகிறான்.
சோற்றுக்கும் கருப்புண்டு, சொல்லுக்கும் பழுதுண்டு.
சோற்றுக்கு விக்கிய நாயே; மாட்டுப் பொங்கலிலே வாயேன்.
சோற்றுச் சுவையோடு தொத்தி வந்த தொன்னோ.
சோற்றைப் போட்டுத் தொண்டையை நெரித்தாற்போல.
சோற்றுப்பானை உடைந்தால் மாற்றுப்பானையில்லை.

# சௌ

சௌரியம் பேசேல்.

# ஞா

ஞாபகம் இல்லையென்று எவனும் சொல்வான், ஞானம் இல்லை என்று எவனும் சொல்லான்.
ஞாயப் பிரமாணம் இல்லாத குருக்கள் வீண்.
ஞாயிற்றுக்கிழமை ஒருபொழுது நன்று வேண்டாம் சாறுவிடு.
ஞானமும் கல்வியும் நாழி அரிசியிலே.
ஞாயம் இல்லாத சேயர்கள் ஆயிரங்கள் இருந்தும் அதிகமல்ல.
ஞானம் எல்லாம் ஒரு முட்டை உலகம் எல்லாம் ஒரு கோட்டை.
ஞானம் நரைத்தையும் கனத்தையும் கொடுக்கும்.
ஞானிக்கு இன்பமும் துன்பமும்.
ஞானிக்கு நார் துரும்பு.
ஞானிக்குப் பெண்டுகள் சகாயமும் இல்லை.
ஞானிக்கில்லை ஞாயமும் நிலைகளும்.

# ட

டக்குடமாரம்.
டம்பாச்சாரியாய்த் திரியாதே
டம்மாரக் காளையைப் போல் அலையாதே.

# டா

டாம்பீகனை நம்பாதே
டால்டம்மாரம் போட்டுக்கொண்டு போகாதே.

# டி

டில்லிக்குப் பாச்சா (ராஜா) என்றாலும், தல்லிக்கு பிட்ட (பிள்ளை) தானே.

தகப்பனுக்கு இட்டது தலைச்சனுக்கு.
தகப்பனுக்கு ஒட்டுக் கோவணமாம், மகன் எழுத்துப் போட்டது வேண்டுமென்கிறான்.

தகப்பனுக்குக் காய்ச்சுகிற பாலில் அடையை நனைக்கிற பிள்ளை

தகப்பனைக் கொன்றபாவம் மாமியார் வீட்டில் ஆறுமாதம் இருந்தால் போகும்.

தகப்பன் தேடக் காத்தான். பிள்ளை அழிக்கக் காத்தான்

தகப்பன் பட்டத்தைப் பிள்ளைக்குக் கட்டினால், தகப்பன் சரித்திரங்க ளெல்லாம் பண்ண வேண்டும் அல்லாவோ?

தகப்பன் வெட்டின கிணறென்று தலைகீழாய் விழலாமா?

தக்கோன் எனத் திரி.

தங்கச்சூரிக் கத்தியென்று கழுத்தை அறுத்துக்கொள்ளலாமா?

தங்கச் செருப்பானாலும் தலைக்கேறாது.

தங்கத்தூள் அகப்பட்டாலும் செங்கற்றூள் அகப்படாது.

தங்கத்தைக் குவிக்கிறேன் என்றாலும் தன்புத்தி விடுகிற தில்லை என்றான்.

தங்கப் பெண்ணே தாராவே, தட்டான் கண்டால் பொன் என்பான், தராசில் வைத்து நிறு என்பான் எங்கும் போகாமல் இங்கேயே இரு.

தங்கமுடி சூட்டினாலும் தங்கள் குணம் விடார் கயவர்

தங்கமும் பொன்னும் தரையிலே, ஒருகாசு நாரத்தங்காய் உறியிலே

தங்கமெல்லாம் தவிட்டுக்கு மாறுகிறது.

தங்கம் புடத்திலே வைத்தாலும் தன்னிறம் மாறாது

தங்கினை வியாழன் தன்னோடு மூன்று (மூன்றுபேர்)

தங்கச்சிப் பிள்ளை தன் பிள்ளையானால் தத்துப் போவான் ஏன்?

தசைகண்டு கத்தியை நாட்டவேண்டும்.

தச்சு வாசல் இருக்க தாளித்த வாசலிலே நுழைகிறது.

தச்சன் அடித்த வாசலில் எல்லாம் தாழக் குனிகிறது.

தச்சன் அடிக்கக் கடா இழுக்கிறது.

தச்சன் அடித்தத் தலைவாசல் எல்லாம் உச்சியிடிக்க உலாவித் திரிந்தேன்

தச்சன், கருமான் தன்னூபடி. மற்றதெல்லாம் ஏறும்படி

தச்சன் பெண்சாதி அறுத்தால் என்ன? கொல்லன் பெண் சாதி கூலிக்கு அறுத்தால் என்ன?

தச்சன் வீட்டிலே தயிரும், எச்சன் வீட்டிலே சோறும் எப்படிச் சேரும்.

தச்சன் வீட்டுப்பால்சோற்றை நத்தாதே, வெள்ளாளா!

தஞ்சம் என்று வந்தவனை வஞ்சித்தல் ஆகாது

தஞ்சாவூர் எத்தனும், திருவாரூர் எத்தனும் கூடினாற் போல

தடி பிடிக்கக் கையில்லை அவன் பெயர் சௌரியப்பெருமாள்

தடி எடுத்தவன் தண்டல் காரனா?

தடிக்கு அஞ்சிக் குரங்கு ஆடினது போல.

தடிக்கு மிஞ்சின மிடாவானால் என்ன செய்யலாம்

தடிக்கின் கீழே நுழைந்தால் கோலத்தின் கீழே நுழைகிறது

தட்டாரச்சித்து தரையிலே, வண்ணாரச் சித்துக்கு வகையில்லை.

தட்டானிடத்தில் இருக்கிறது; கும்பிடு சட்டியில் இருக்கிறது

தட்டானுக்குப் பயந்தல்லவோ; அணிந்தான் சிவன் சர்ப்பத்தை.

தட்டானும் செட்டியும் ஒன்றானால் தங்கம் கொடுத்தவன் வாயிலே மண்

தட்டானும் செட்டியும் கண், சட்டியும் பானையும் மண்

தட்டானைத் தலையில் அடித்து வண்ணானை வழிப் பறித்து.

தட்டான் கொசு தடுமாறுகிறதுபோல

தட்டான் தாய் பொன்னிலும் மாப் பொன் திருடுவான்.

தட்டான் தாழப் பறந்தால் தப்பாமல் மழை வரும்

தட்டிப் பேச ஆளில்லா விட்டால் தம்பி சண்டப் பிரசண்டன்

தட்டிப் போட்ட வரட்டியைப் புரட்டிப்போடக் ஆளில்லை.

தணிந்த வில்லுதான் தைக்கும்.

தண்டச் சோற்றுக்கார (ராமா) குண்டு போட்டுவாடா

தண்டாந் தமுக்கு தலையிலே இரண்டு அமக்கு

தண்டிலே போனால் இரண்டிலே ஒன்று

தண்ணீரிலே தடம் பிடிப்பான்.

தண்ணீரில் வளர்ந்த உப்பு தண்ணீரில்தான் கரைய வேண்டும்

தண்ணீரின் கீழே குசுவிட்டால் தலைக்குமேலே.

தண்ணீரில் அழுங்கின முட்டை உப்பு போடக் கிளம்பும்

தண்ணீரில் இருக்கிற தவளையைத் தரையில் எடுத்துவிட்டதை போல்

தண்ணீரில் இறந்தவரைவிடச், சாராயத்தில் இறந்தவர் அதிகம்.

தண்ணீரும் கோபமும் தாழ்ந்த இடத்திலே.

தண்ணீரும் மூன்று பிழை பொறுக்கும்.

தண்ணீரையும் தாயையும் பழிக்கலாமா ?

தண்ணீர் குடித்த வயிறும், தென்னோலையிட்ட காதும் சரி

தண்ணீர்க் குடம் உடைந்தாலும் அய்யோ! தயிர்க் குடம் உடைந்தாலும் அய்யோ !

தண்ணீர் வெந்நீரானாலும் நெருப்பை அவிக்கும்.

தத்திக்குதித்துத் தலைகீழே விழுகிறது.

தத்தி விழுந்தால் தரையும் பொறுக்காது

தத்துவம் அறிந்தவன் தவசி.

தந்தவன் இல்லையென்றால் வந்தவன் வழியைப் பார்.

தந்தன என்கிறது பாட்டுக்கு அடையாளம்.

தந்தை எவ்வழி அவ்வழி புதல்வன்.

தந்தை சொல்மிக்க மந்திரம் இல்லை.

தப்பில் ஆனவனை உப்பில் போடு.

தப்பு அடித்தவன் தாதன், சங்கு ஊதினவன் ஆண்டி.

தமக்கு மூக்கு போனாலும் எதிரிக்குச் சகுனப்பிழை வேண்டும்.

தமிழுக்கு இருவர் ; தத்துவத்துக்கு ஒருவர் ஆகும்.

தம்மினம் தம்மைக் காக்கும் ; வேலி பயிரைக் காக்கும்

தம்பி உடையான் படைக்கஞ்சான்.

தம்பி கால்நடை ; பேச்சு பல்லக்கில்

தம்பி சோற்றுக்குச் சூறாவளி. வேலைக்கு வாரா வழி

தம்பி பிடித்த முயலுக்குச் மூன்றே கால்.

தம்பி பிள்ளையாண்டான் அலுவல், தலைசொறிய நேரமில்லை.

தம்பி பேச்சைத் தண்ணீரில்தான் எழுதவேண்டும்.

தயிருக்குச் சட்டி ஆதரவு, சட்டிக்குத் தயிர் ஆதரவு

தயிர்ப் பானையை உடைத்துக் காகத்திற்கு அழுதிட்டாற் போல

தயை தாக்ஷண்யம் சத்ருவிலும் இல்லை,

தரத்தர வாங்கிக் கொள்ளுகிறாயா, தலையை முழுகிப் போட்டு போகட்டுமா?

தரித்திரப்பட்டாலும் தைரியம் விடாதே.

தரித்திரம் பிடித்தவள் தலை முழுகப் போனாளாம், அப்போதே பிடித்ததாம் மழையும் தூற்றலும்.

தரித்திரனுக்கு விஷம் கோஷ்டி.

தருமத்திற்கு அழிவு சற்றும் வராது.

தருமத்திற்குத் தானம் பண்ணுகிற மாட்டைப் பல்லைப் பிடித்துப் பதம் பார்த்தாற்போல.

தருமத்தைப் பாபம் வெல்லாது,

தருமமே ஜெயம்.

தருமம் தலை காக்கும்.

தலை அளவும் வேண்டாம், அடி அளவும் வேண்டாம், குறுக்கே அள அடா படியை.

தலையிடியும் காய்ச்சலும் தனக்கு வந்தால்தான் தெரியும்

தலையிருக்க வால் ஆடுமா?

தலை எழுத்திற்குத் தலையைச் சிரைத்தாற் போகுமா?

தலைகீழாக தவம் செய்தாலும் கூடுகிற காலம் வந்தால்தான் கூடும்.

தலைக்குத் தலை நாட்டாண்மையாய் இருக்கிறது.

தலைக்குத்தலை பெரிய தனம், உலைக்கு அரிசியில்லை.

தலைக்கு மேலே கை காட்டுகிறது.

தலை சுழன்றவனுக்கு உலகமெல்லாம் சுற்றும்.

தலை சொரியக் கொள்ளியைத் தானே வைத்துக் கொண்டாற் போல

தலைச்சன் பிள்ளைக்காரி இடைச்சன் பிள்ளைக்காரிக்கு மருத்துவம் பார்த்தாற்போல

தலைச்சன் பிள்ளைக்கு இல்லாத தண்டையும் சதங்கையும் இடைச்சன் பிள்ளைக்கு வந்ததா?

தலைச்சன் பிள்ளை பெற்றவளுக்கு தாலாட்டும் ஆம்படையான் செத்தவளுக்கு அழுகையும் தானே வரும்.

தலைச்சுமை தந்தானென்று தாழ்வாக எண்ணாதே

தலைப்பிள்ளை ஆண், தப்பினால் பெண்.

தலைப்புறத்தைத் தந்தால், தருவேன் மருந்துப்பையை

தலைமாட்டிற்குக் கொள்ளியைத் தானே தேடிக்கொண்டாள்

தலைமுறை தலைமுறையாய் மொட்டை, அவள் பெயர் கூந்தலழகி.

தலைமேல் அம்பு பறந்தாலும் நிலையிற் பிரியல் ஆகாது.

தலைமேல் ஓடிய வெள்ளம் சாண் ஓடி என்ன முழம் ஓடி என்ன?

தலையாரியும், அதிகாரியும் ஒன்றானால் சம்மதித்தப்படி திருடலாம்.

தலையிலே இடித்த பிறகா தாழக் குனிகிறது.

தலையிலே எழுந்திருக்கத் தந்திரத்தால் வெல்லலாமா?

தலையும் தலையும் மோதினால் மலையும் வந்து பொறுக்கும்.

தலையைத் தடவி மூளையை உறிஞ்சவேண்டும்.

தலையைத் திருகி உரலிலே போட்டு இடிக்கச்சே, சங்குச் சக்கரக் கடுக்கன் உடைந்துபோகும் என்றானாம்.

தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று.

தலைவன் சொற் கேள். நன்னெறி தவறேல்

தலைவன் நிற்கத் தண்டு நிற்கும், தலைவன் மயங்கச் சர்வமும் மயங்கும்.

தவசிப்பிள்ளை நமசிவாயம் கையாச்சாரம்

தவசிக்குத் தயிருஞ்சாதமும், விகவாசிக்கு வெந்நீரும் படுக்கையும்

தவசிக்குத் தனிமையும். தமிழுக்குத் துணையும்.

தவத்தளவேயாகும் தான்பெற்ற செல்வம்.

தவளை தன் வாயாற் கெடும்.

தவளை தாமரைக்கு அருகிருந்தும் அதன் தேனை உண்ணாது.

தவிடு தின்பவளை எக்காளம் ஊதச் சொன்னாற்போல.

தவிட்டுக்கு வந்த கைதான் தனத்துக்கும் வரும்.

தவிட்டை நம்பிப்போக சம்பா அரிசியைக் காகம் கொண்டு போயிற்று.

தழைத்த மரத்துக்கு நிழல் உண்டு, பிள்ளை பெற்றவளுக்குப் பால் உண்டு.

தள்ளத் தள்ளத் தாழ்ப்பாளைப் பிடிப்பானேன்.

தன்னறிய தார்வந்து தாய் வாழையைக் கெடுத்தாற் போல.

தள்ளிப் பேசினாலும் தழுவிக் குழைகிறது.

தறுதலைக்கு ராஜா ! சவுக்கடி.

தனக்கு அழகு மொட்டை, பிறர்க்கு அழகு கொண்டை
தனக்குகந்த ஊனும் பிறர்க்குரிய கோலமும்
தனக்கு என்றால் பிள்ளையும் களைகட்டும்.
தனக்கு என்று அடுப்புமூட்டி, தான் வாழும் காலத்தில் வயிறும் சிறுக்கும், மதியும் பெருக்கும்.
தனக்கு என்று இருந்தால் சமயத்துக்கு உதவும்.
தனக்கென்று ஒருத்தியிருந்தால் தலைமாட்டில் இருந்தழுவாள்.
தனக்குக் கண்டு தானம் வழங்கு.
தனக்குச் சந்தேகம் அடைப்பக்காரனுக்கு இரட்டைப்படியா?
தனக்குத் தவிடு இடிக்கத்தள்ளாது, ஊருக்கு இரும்பு இடிக்கத் தள்ளும்.
தனக்குத் தனக்கென்றால்..............களைவெட்டும்
தனக்குத் தானே கனியாத பழத்தைத் தடிகொண்டடித்தாற் கனியுமா ?
தனக்குப் பிறந்த பிள்ளை தவிட்டுக் கழுகிறதாம், ஊரார் பிள்ளைக்குக் கூட்டுக் கல்யாணம் செய்தாளும்
தனக்கென்று சொல்ல நாய் வெடுக்கென்று பாயும்
தனி வழியே போனவளைத் தாரமென்று எண்ணாதே.
தன் இச்சையை அடக்காவிட்டால் அது தன்னையே ஆளும்,
தன் ஊருக்கு அன்னம் பிற ஊருக்குக் காகம்.
தன் ஊருக்கு யானை அசல் ஊருக்குப் பூனை.
தன் ஊர் சுடுகாட்டுக்கும் அயல் ஊர் ஆற்றுக்கும் அஞ்ச வேண்டும்.
தன் காரியம் பாராதவன் சதையால் ஒரு புழுபுழுப்பான்
தன் காற்பெருவிரலைப் பார்த்து நடக்கவேண்டும்.
தன் குஞ்சென்று வளர்க்குமாம் குயிற்குஞ்சைக் காகம்.
தன்குற்றம் இருக்க பிறர் குற்றம் பார்ப்பதா?
தன் குற்றம் கண்ணுக்குத் தெரியாது.
தன் கொல்லையில் கீரை வைத்துக்கொண்டு அசல் வீட்டுக்குப் போவானேன்.
தன் சோறு தின்று, தன் புடவை கட்டி; வீண் சொல் கேட்க விதியா?
தன் தார தார பரதார புத்திரன்.
தன் நிலத்தில் குறுமுயல் தந்தியினும் வலிது.

தன் நிழல் தன்னைக் காக்கும்.

தன் பணம் செல்லாவிட்டால் தாதனைக் காட்டி அடிக்கிறது.

தன் பலம் கொண்டு அம்பலம் ஏறவேண்டும்

தன் பல்லைக் குத்தி பிறர் மூக்கில் வாசம் காட்டுவது போல.

தன் பாவம் தன்னோடே.

தன் பிள்ளைக்குப் பதைக்காதவள், சக்களத்திப் பிள்ளைக்கு பதைப்பாளா?

தன் பிள்ளையைத் தான் அடிக்க தலையாரியை சீட்டுக் கேட்கிறது போல.

தன் மனம் பொன் மனம்

தன் முதுகு ஒரு போதும் தனக்குத் தெரியாது.

தன் வாயாலே தான் கெட்டான்.

தன் வாயிலே சீதேவி மூன் வாயிலே

தன் வினை தன்னைச் சுடும் ஒட்டப்பம் வீட்டைச் சுடும்

தன் வீட்டு ஆமுடையான் தலைமாட்டிலும், அசல் வீட்டு ஆமுடையான் கால்மாட்டிலும்.

தன் வீட்டுக்குக் கதவைப் பிடுங்கி அயல் வீட்டுக்கு வைத்து விட்டு விடிகிறமட்டும் நாய் ஓட்டினதைப்போல.

தன் வீட்டு விளக்கென்று முத்தமிடலாமா?

தன்னவன் தனக்கானவனானால் தலைப்பந்தியில் இருந்தால் என்ன? கடைப்பந்தியில் இருந்தால் என்ன?

தன்னாலே தான் கெட்டால் அண்ணாவியார் என் செய்வார்?

தன்னை அறியாத சன்னதமுண்டா?

தன்னை ஒளித்தொரு வஞ்சனையில்லை.

தன்னைக் காக்கிற் கோபத்தைக் காக்க வேண்டும்

தன்னைப் பணிவாரைத் தான் பணியக் காலம் வந்தது

தன்னைப் புகழாத கம்மாளன் இல்லை

தன்னைப் புகழுதல் தகும் புலவர்க்கே.

தன்னைப் புகழ்வானும், சாணேறி நிற்பானும், பொன்னைப் புதைத்து வைத்துப் போவானும் பேய்

தன்னைப் பெற்ற தாய் இன்னிப் பிச்சை வாங்கச்சே தங்கத் தாலே சரப்பணி தொங்கர் ஆடுதாம்.

தன்னைப் பெற்றவள் கொடும்பாவி, தன் பெண்ணை பெற்றவள் மகராசி.

# தா

தாகமிருக்கிறது இரக்கமில்லை

தாக்ஷண்யம் தன நாசனம்

தாங்கித் தாங்கிப் பார்த்தால் தலைமேல் ஏறுகிறான்

தாங்குகிற ஆள் உண்டு தளர்ச்சி உண்டு

தாசரி தப்பு தண்டவாளத்துக்குச் சரி

தாசிக்குப் பணையம் கொடுத்தால் தகப்பனும் போகலாம் பிள்ளையும் போகலாம்.

தாடிக்குப் பூச்சூடலாமா?

தாடி பற்றிக்கொண்டு எரியச்சே, சுருட்டுக்கு நெருப்புக் கேட்டானும்.

தாட்டோட்டக்காரனுடன் கூடுவதிலும் தனியே இருப்பது நலம்.

தாதன் ஆட்டம் திருப்பதியிலே.

தாதனும் பறையனும் போல

தாது அறியாத பேதை வைத்தியன்.

தாதும் இல்லை பிராதும் இல்லை.

தாபரம் இல்லா இளங்கொடி போல.

தாமதம் தாழ்வுக்கு ஏது?

தாமரையிலைத் தண்ணீர்போல் தவிக்கிறான்.

தாம்பும் அறுதல்; தோண்டியும் பொத்தல்

தாயில்லாப்பிள்ளை ஊருக்காகுமோ?

தாயில்லாதபோது தகப்பன் தாயாதி

தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை.

தாயும் தகப்பனும் தள்ளிவிட்ட காலத்தில் வா என்றழைத்த வங்கார வசி

தாயும் தகப்பனும் தவிர சகலமும் வாங்கலாம்.

தாயும், பிள்ளையும் ஆனாலும் வாயும் வயிறும் வேறு.

தாயைக் கொன்றவனுக்கு ஊரிலே பாதிப்பேர்.

தாயைச் சேர்ந்த உறவானாலும் அறுத்துத்தான் உறவாட வேண்டும்.

தாயைத் தண்ணீர்த்துறையில் பார்த்தால், பிள்ளையை வீட்டில் பார்க்க வேண்டியதில்லை.

தாயைப் பழித்து மகள் விபசாரி ஆடுகிறாள்

தாயைப் பார்த்துப் பெண்ணைக் கொள்ளு, பாலைப் பார்த்து பசுவைக் கொள்ளு.

தாயை மறக்கடிக்கும் தயிரும் பழஞ்சோறும்

தாய் அறியாத சூல் உண்டா?

தாய் உறவோ நாய் உறவோ?

தாய் ஏழடிப் பாய்ந்தால், மகள் எட்டடிப் பாய்வாள்

தாய் ஒரு பாக்கு தாவீ கமுகந்தோப்பு என்கிறாள்

தாய்கூடப் பிறந்த மாமனிடத்தில் குலமும் கோத்திரமும் சொன்னதுபோல்

தாய் கைப்பசும்பொன்னிலும், தன் கை தவிடேமேல்

தாய்க் கிழவி எப்போ சாவாளோ? தாழ்வாரம் எப்போ ஒழியுமோ?

தாய்க்கு அடங்காதவன் ஊருக்கு அடங்கான், ஊருக்கு அடங்காதவன் ஒருவருக்கும் அடங்கான்

தாய்க்குச் சோறு இடுகிறது ஊருக்குப் புகழ்ச்சி

தாய்க்குத் தவிடியான் தம்பிரானுக்கு இரும்பிடிப்பான்.

தாய்க்குப்பின் தாரம்.

தாய்க்கு மூத்துத் தகப்பனுக்கு விளக்குப் பிடிக்கிறான்

தாய்க்கு விளைந்தாலும், தனக்கு விளைய வேண்டும்

தாய் சீலைக்கு சாண் துணியில்லை தலைக்கு மேலே சரிகை மேற்கட்டி

தாய் செத்தால் மணம், மகள் செத்தால் பிணம்

தாய் தவிட்டுக்கு அழுகிறாள்; மகள் இஞ்சிப் பச்சடி கேட்கிறாள்.

தாய் தூற்றினால், ஊர் தூற்றும்: கொண்டவன் தூற்றினால் கண்டவன் தூற்றுவான்

தாய் பொறுக்காததை ஊர் பொறுக்குமா?

தாய் மனம் பித்து; தகப்பன் மனம் கல்லு

தாய் மனைக்கு வந்தது ; பிள்ளை மனைக்கும்

தாய் முகம் காணாத பிள்ளையும், மழை முகம் காணாத பயிரும் போல

தாய் முலை குடித்துத் தாகம் தணியவேணும்

தாய் வசவு பிள்ளைக்குப் பலிக்குமா?

தாய் வார்த்தை கேளாத பிள்ளை நாய் வாய்ச் சீலை

தாய் விட்டோடிய பெண்ணும் பேயோட்டாடிய கூத்தும்

தாரத்தை ரக்ஷியாதான் வீரம் என்னத்துக்கு உதவும்

தாரமும் குருவும் தலைவிதிப்படி

தாராளந் தண்ணீர்ப்பந்தல், நீர் சோற்றுத் தண்ணீர் நெய் பட்டபாடு

தாலியறுத்தவளுக்கு மருத்துவச்சி உதவி ஏன்?

தாலியறுத்தவள் ஏன் இருக்கிறாள்: தூரந் தப்பினவனுக்குப் பொங்கியிட.

தாலியறுத்தவள் வீட்டிலே தலைக்குத் தலை பெரிய தனம்

தாவிப்பறி சேலைப்பறியா?

தாவமஞ்சம் இல்லா இளங்கொடிபோல் தவிக்கிறாள்

தாழி போல் வயிறும் ஊசிபோல் மிடறும்

தாழ் குலத்திற் பிறந்தாலும் புத்தியினால் அகரிப்பூவைப் போல் பிரயோசனப்படுவார்.

தாழ்ந்த இடத்திலே தண்ணீர் தங்கும்.

தாழ்ந்தது தங்கம்; உயர்ந்தது பித்தளை

தாழ்ந்து நின்றால் வாழ்ந்து நிற்பாய்

தாழ்வதும் வாழ்வதும் சகடக்கால் போல

தாழ்விலே பெருமையும், வாழ்விலே தாழ்மையும் வேண்டும்

தான் உண்ட நீரைத் தலையாலே தான் தரும் தென்னை

தானதர்மமில்லாத உடைமைக்குத் தம்பி தாண்டவராயன் புறப்பட்டான்.

தானதனத்தான் சகல சம்பத்தன்

தானமது விரும்பு

தானாகக் கெடுத்தது பாதி, தம்பிரான் கெடுத்தது பாதி

தானாக வந்த சீதேவியை காலால் உதைத்துத் தள்ளலாமா.

தானும் இடான் இட்டவர்களைப் பார்த்தறியான்.

தானே கவர்னர்: புத்தி பட்லர்

தானே தான் குருக்கள் என்பார், தானங்கள் வாங்கச் சதாசிவன்பேர் பூசை செய்வார்.

தானே வளர்ந்து நவத்தால் கொடியெடுந்தான்

தான் அடங்கத் தன் குலம் அடங்கும்

தான் அறியாச் சிங்கம் தன் பிடரிக்குச் சேதம்

தான் அறியாத ஆவேசம் உண்டா?

தான் அறியாதது நஞ்சோ டொக்கும்

தான் ஆடாவிட்டாலும் தன் சதை ஆடும்

தான் ஆண்ட உலக்கையும் தங்கப் பூச்சரடும் தலை மருமகளுக்கு.

தான் ஒன்று நினைக்க தெய்வம் ஒன்று நினைக்கிறது

தான் கள்வன் பிறரை நம்பான்

தான் கற்ற ஒன்றை தரிக்க உரை

தான் குடிக்கக் கூழ் இல்லை; வாரத்துக்கு இரண்டு பன்றி வளர்க்கிறான்.

தான் கும்பிடுந் தெய்வமானாலும் பொய்ச் சத்தியம் செய்தாற் பொறுக்குமா?

தான் சாக மருந்து தின்பார்களா?

தான் தளம்பல் பிறருக்கு ஊன்றுகோல்

தான் திருடி அயல்வீடு நம்பான், கூத்திக் கள்ளன் பெண்சாதி நம்பான்.

தான் நின்ற நஞ்சு தன்னை எரிக்கும் (கொல்லும்)

தான் தின்னத் தவிடு இல்லை தங்கத்தாலே தாலி தொங்கப் போடச் சொன்னாளாம்

தான் தின்னத் தம்பிரானாய் இருக்கிறான்.

தான் தேடாப் பொன்னுக்கு மாற்றும் இல்லை உரையுமில்லை.

தான் தோன்றிப் பெருமாள்.

தான் பத்தினியானால், தேவடியாள் தெருவிலும் குடியிருக்கலாம்.

தான் போக வழி தெரியாத மூஞ்சூறு விளக்குமாற்றையும் கவ்விப் போனதாம்.

தான் போகிற காரியத்துக்கு அடைப்பைக்காரன் ஒரு சொட்டு.

தான் போனால் தாகத்துக்குத் தண்ணீர் கிடையாது; எழுநடா ஓலை நூறு குடம் தயிருக்கு என்றானாம்.
தான்றிக் காயில் சனியன் புகுந்தது போலே.

# தி

திகம்பர சன்னியாசிக்கு வண்ணான் உறவு ஏன்?
திகைப்பூடு மிதித்தவன்போல் அலைகிறான்.
திக்கற்ற ஊருக்குத் திருடன்...கருடகம்பம்.
திக்கற்றவனுக்கு தெய்வமே துணை.
திக்குக்கெட்டு திசைமாறி போகிறது.
திக்கு விஜயம்செய்பவனுக்கு ஜெயாபஜயம் காலம் தெரியாது.
திங்களும் சனியும் தெற்கே நோக்க வேண்டும்.
திசைப் புரட்டனுக்குப் புளுகுக்குத் தாழ்ச்சியில்லை
திட மனப்படு திம்பர்க்கருகில்.
திடுக்கென்று வாழ்க்கைப் பட்டு வெடுக்கென்று அறுத் தாளாம்
திட்டிக் கெட்டாரும் இல்லை வாழ்த்தி வாழ்ந்தாரும் இல்லை.
திண்டிக்கு அவசரம் ; வேலைக்கு ஒளிப்பு.
திண்ணைக்குத் தேன் கொட்ட, தண்ணீர் மிடாவுக்கு நெறி கட்ட.
திண்ணைக்கு விடிந்தால் வீட்டுக்கும் விடியும்.
திண்ணையிற் பெண்ணைத் திருப்பி வைக்கிறது, மனையிற் பெண்ணை மாற்றி வைக்கிறது.
திண்ணை வீணன் திருவாசல் வீணன்.
திரட்சிக்கு திகட்சி, புளிப்புக்கு அவள் அப்பன்.
திரவியத்தில் அழுந்தமானவன் ; செத்தாலும் கெடான்.
திரிசங்கு சுவர்க்கம்.
திரித்த வரையிற் கயிறு, திரியாதவரையிற் பழுதை.
திருமூர்த்தி தேவரும் காணார்

திரு உண்டானால் திறமையும் உண்டாகும்.
திருகாணிக்கு வலுவும், பழஞ்சாணிக்கு புழுவும் உண்டு.
திருக்காவணப் பந்தலுக்கு நிழலுதவி வேண்டாமோ?
திருடத் தெரிந்தால் தெற்றுமாற்று தெரியவேண்டும்
திருடனுக்குத் தெய்வமே சாக்ஷி.
திருடனைத் தேள் கொட்டினதுபோல.
திருடன் பெண்சாதி என்றைக்கும் கைம்பெண்சாதி.
திருடன் வீட்டு விளக்குப்போல் எரிகிறது.
திருடிக்குத் தெய்வமில்லை, சம்சாரிக்கு ஆணையில்லை.
திருடிக் கொடுத்ததுமல்லாமல் பைத்தியக்காரப் பட்டமும் கிடைத்தது.
திருடியும் குங்கிலியம் தேவருக்கே.
திருட்டு நாய்க்கு சலங்கை கட்டினாற்போல்.
திருட்டு நெல்லுக்கு மத்தளம் மரக்கால்.
திருட்டுப் பயலுக்குப் புரட்டுக் குருக்கள்.
திருட்டுப் பையன் வருகிறான் தவலைச் சொம்பை வெளியில் வையும்.
திருப்தியில்லாத எஜமான் வீண்.
திருநாளுக்குப் போகிறாயா என்றால் ஆம் ஆம்; திரும்பி வருகிறாயா என்றால் உம் உம்.
திருநாளும் முடிந்தது எடுபிடியும் கழிந்தது.
திருநாளைக் கண் கொண்டு பார்க்க முடியவில்லை.
திருநீற்றிலே ஒட்டாதது கழற்சிக்காய்.
திருந்த ஒத திரு உண்டாமே.
திருப்பணி செய்யக் காத்திருந்தால், கருப்படியின் பேரிலே விருப்பமிருக்கும்.
திருப்பதிக்குப் போனாலும் துடுப்பு ஒருகாசு.
திருப்பதிச் சொட்டுப் படிப்படியாக எரிந்தது.
திருப்பதி அம்பட்டன் தலைசிரைத்தது போல.
திருப்பதியில் மொட்டை யடித்ததும் பற்றாதா? ஸ்ரீரங்கத்தில் சிரிப்பாய் சிரித்ததும் பற்றாதா?
திருவண்ணாமலைக் குடாவுக்கு நிழல் உண்டுபண்ணுகிறதா?
திருவாக்குக்கு எதிர்வாக்குண்டோ?

திருவாசகத்திற்கு உருகாதார், ஒரு வாசகத்திற்கும் உருகார்.

திருவாசல் ஆண்டியும் ஒருவேளை உதவுவான்.

திருவாதரப்பட்ட குருக்களே தெண்டம், கரியாய்ப் போகிற சிஷனை கொண்டேன்.

திருவாழத்தான் இருந்தும் கெடுத்தான், செத்தும் கெடுத்தான்.

திருவாய்தாதன் குதிரை வளர்த்தாற்போல.

திருவிளக்கு இட்டாரைத் தெய்வம் அறியும், நெய் வார்த்து உண்டாரை நெஞ்சு அறியும்.

திருவிளக்கு இல்லா வீடுபோல,

திரைகடல் ஓடியும் திரவியம் தேடு.

திறந்தவீடு செல்லாத்தாள் கோயில் போல் இருக்கிறது,

திறந்த வீட்டிலே நாய் நுழைந்தாற்போல.

தினம் தவநிலையில் மனதை நிறுத்து.

தினவு எடுத்தவன்தான் சொரிந்து கொள்ள வேண்டும்.

தினைப்பயிறும் பாலும் தின்றிருந்தும், வினைப்பயனை வெல்லுவது அரிது.

தினைவிதைத்தவன் தினை அறுப்பான், வினை விதைத்தவன் வினை அறுப்பான்.

தின்கிறதைத் தின்றும் தேவாங்கைப்போல் இருக்கிறான்.

தின்பது கொஞ்சம் சிவனும் நிலையில் இல்லை.

தின்றசோறு உடம்பில் ஒட்டவில்லை.

தின்ற மண்ணுக்குத் தக்க சோகை.

தின்று உமிழ்ந்த தாம்பூலத்தைத் திரும்பத் தின்ன நினைப் பார்களா ?

தின்று கொடுத்தால் சும்மா இருக்க ஒட்டாது.

தின்னத் தின்னக் கேட்குமாம் பிள்ளைபெற்ற வயிறு.

தின்னவேண்டாம், உண்ணவேண்டாம் மகளே, மூஞ்சியாவது கழுவிப் பொட்டு வைத்துக் கொண்டுபோ,

தின்னத்தெரியாமல் தின்பானேன்.

# தீ

தீ இல்லாமல் புகை எழும்பாது.
தீக் காய்ந்தாற்போல் இருக்கவேண்டும்.
தீக்குக் காற்று உதவினதுபோல.
தீங்கடும்பனுக்கு மாங்குயிற் கிளவி.
தீட்டின மரத்திலே கூர் பார்க்கிறது.
தீட்டுத் துடைக்கப்பண்ணும்.
தீண்டாவிளக்கைத் தீண்டவரும் பூச்சி மாண்டாற்போல் மாளுகிறது.
தீதுறும் பாவச்செய்கை அற்றவன் தேவன்.
தீபத்தில் ஏற்றும் தீவட்டி.
தீப்பட்ட வீட்டில் கரிக் கட்டைக்குப் பஞ்சமா ?
தீப்புண் ஆறும், வாய்ப்புண் ஆறாது.
தீயை மிஞ்ச வைத்தாலும் பகையை மிஞ்ச வைக்கலாகாது.
தீமையை மெச்சுகிறவன் தீமையாளிதான்.
தீயாரைச் சேர்ந்து ஒழுகல் தீது, தீயார் வரை செய்வனவும் தீது.
தீயிலிட்ட நெய் திரும்பி வருமா ?
தீயும் பயிருக்குப் பெய்யும் மழைபோல.
தீர்க்கத் திறனற்றவன் தேசிகனாவான்.
தீராக்கோபம் பாடாய் (போராய்) முடியும்.
தீராச்செய்கை சீராகாது.
தீராவழக்குக்கு தெய்வமே சாட்சி.
தீராதவழக்கு நேராகாது.
தீர்க்கதரிசி பீங்கான் திருடி.
தீவட்டிக்காரனுக்குக் கண்தெரியாது.
தீவான் இடுக்கிடுவான், இன்னைக்கு மண்ணிடுவான், வருகிற கிழமை வாசலுக்கு மண்ணிடுவான்.
தீவினை செய்யில் பேய்வினை முடியும்.
தீவினை முற்றிப் பாழ்வினை ஆச்சு.

# து

துக்கமுள்ள மனதில் துன்பம் ஏன் ?

துக்கத்தைச் சொல்லி ஆற்றவேண்டும், கட்டியைக் கீறி ஆற்ற வேண்டும்.

துக்கத்தை யெல்லாம் விட்டுவிட்டு தோட்டிச்சியைக் குத்த கையாளாக வைத்துக் கொண்டானும்.

துக்கனூரில் கல்யாணம், துடியனூரில் கல்யாணம், நாய் அங்கே ஓடியும் கெட்டது, இங்கே ஓடியும் கெட்டது.

துக்குணிச் சிறுக்கிக்கு முக்கலக் கந்தை.

துஞ்சி நின்றால் மிஞ்சி உண்ணான்.

துடியாப் பெண்டிர் மடியில் நெருப்பு.

துடுப்பு இருக்க கைநோவானேன் ?

துடைப்பக்கட்டைக்கு பட்டுக்குஞ்சம் கட்டினாற்போல.

துடையிற் புண்ணை நடையிற் காட்டுகிறதா ?

துடையும்கிள்ளி தொட்டிலையும் ஆட்டுகிறதா ?

துட்டுக்கு இரண்டு துக்காணிக்கு மூன்று.

துட்டுக்கு எட்டு சட்டி வாங்கி, சட்டி ஒன்று எட்டு துட்டுக்கு விற்றாலும் வட்டிக்கு ஈடல்ல.

துட்டுக்கு ஒருசேலை.

துஷ்ட நிக்ரகம் சிஷ்ட பரிபாலனம்.

துஷ்டப்பிள்ளைக்கு ஊரார் புத்தி சொல்லுவார்கள்.

துஷ்டர் நேசம் பிராண நஷ்டம்.

துஷ்டனைக் கண்டால் தூர ஓடு.

துணிந்தவனுக்கு வெட்கமில்லை, அழுதவனுக்கு துக்கமில்லை,

துணிந்தார்க்குத் துக்கமுண்டா, பணிந்தார்க்குப் பாடு உண்டா ?

துணிந்தார்க்கு சமுத்திரம் முழங்கால் ஆழம்.

துணைபோயிடு பொங்கினத்தைத்தேடு.

துணைபோனாலும் பிணைபோகாதே.
துணையோடல்லாது நெடுவழி போகேல்.
துண்டுப் பாளையக்காரன் இடை நடுவில் துடிக்கிறதுபோல.
துப்பற்ற நாய்க்குக் கொப்பழைகைப்பார்.
துப்பாக்கி வயிற்றில் பீரங்கி பிறந்ததுபோல.
துப்புக்கெட்டவனுக்கு இரட்டைப்பரியம்.
தும்மலிலே போனாலும், தூற்றலிலே போகக் கூடாது.
தும்பைவிட்டு வாலைப் பிடிக்கிறது.
துரியோதனன் குடிக்கு சகுனிபோல.
துருசுக்கல்வி அரிப்பது பழக்கம்.
துரும்பு கிள்ளுவது துர்க்குறி பழக்கம்.
துரும்பு தூண் ஆனால் தூண் என்ன ஆகாது ?
துரும்பு நுழைய இடம் இருந்தால் யானையைக் கட்டுவான்.
துரும்பு முற்றினக் கோபம் விசும்பு முட்டத் திரும்,
துரும்பும் கலத் தண்ணீரைத் தேக்கும்.
துரும்பைத் தூணாக்குகிறதா ?
துரைகளோட சொக்காட்டான் போட்டால் தோற்றாலும் குட்டு வென்றாலும் குட்டு.
துரையின் கையில் எலும்பில்லை.
துரைசித்தம் கனசித்தம்.
துரை நல்லவர் பிரம்பு பொல்லாதது.
துரைவீட்டு நாய் நாற்காலியில் ஏறினதுபோல்.
துரோகத்தால் கொண்ட துரைத்தனம் குடிகளை வருத்துங் கொடுங்கோல்.
துரோபதையைத் துகில் உறிந்ததுபோல.
துர்ப்பலத்தில் கர்ப்பிணி ஆனால் எப்படிப் பிள்ளையை முக்கிப் பெறுவது ?
துர்ப்புத்தி மந்திரியால் அரசுக்கீனம், சொற்கேளாப் பிள்ளைகளால் குலத்துக்கீனம்.
துலக்காத ஆயுதம் துருப்பிடிக்கும்.
துலாத்தில் வெள்ளி உலாத்தில் பெய்யும் மழை.
துலுக்கக் குடியில் ஏது பேயாட்டம்.
துலுக்கத் தெருவிலே தேவாரம் ஓதினதுபோல்.

துழாவிக் காய்ச்சாதது கஞ்சியுமல்ல, விளைவிக் கட்டாதது கல்யாணமல்ல.

துளசிக்கு வாசமும், முள்ளுக்குக் கூர்மையும் முளைக்கிறபோதே தெரியும்.

துள்ளாதே துள்ளாதே ஆட்டுக்குட்டி; என் கையில் இருக்கிறது சூரிக்கத்தி.

துள்ளித் துள்ளிக் குதித்தாலும் வெள்ளிப் பணமும் கிடையாக் காலத்தில் கிடையாது.

துள்ளுகிற மாடு பொதி சுமக்குமா ?

துள்ளுமான் துறவில் விழுந்தது.

துறக்கத் துறக்க ஆனந்தம்; துறந்தபின் பேரின்பம்.

துறட்டுக்கு எட்டாதது வாய்க்கு எட்டுமா ?

துறவிக்கு வேந்தன் துரும்பு.

துற்றிசமுத்திரம் பொங்கினால் கொள்ளுமாங் கிணறு அநேகம்,

துன்பத்திற்கு இடங்கொடேல்.

துன்பம் முந்தி; இன்பம் பிந்தி.

# தூ

தூக்கணாங்குருவி குரங்கிற்கு புத்தி சொன்னதுபோல.

தூக்கி ஏறவிட்டு ஏணியை எடுக்கும் தூர்த்தர் சொல் கேளாதே.

தூக்கி நினைத்து நோக்கிப் பேசு.

தூக்கிப்போட்டது மல்லாமல் குதிரை, தோண்டிக் குழியைப் பறித்ததாம்.

தூக்கி வளர்த்த பிள்ளையும், துடையில் வைத்துத் தைத்த இலையும் உருப்படாது.

தூக்கி வினைசெய்,

தூக்கினால் சென்னி துடிக்கத் துணித்துவிடு, மாக்கினால் சக்கரம் போலவே.

தூங்காதவனுக்குச் சுகமில்லை.

தூங்கினவனது கடாக்குட்டி, விழித்திருந்தவனது வெட்டுக் குட்டி.

தூங்கினவன் கண் கடாக்கண்.

தூங்கினவன் சாகிறதில்லை, விழித்தவன் பிழைக்கிறதில்லை.

தூங்குகிற புலியைத் தட்டி எழுப்பினதுபோல.

தூங்குகிற வழிக்காரனை எழுப்பிவிட்டால் போன வருஷத் தீர்வையையும் கொடுத்துவிட்டு போவென்பான்.

தூங்குகிறவனைத் தட்டி எழுப்பி அத்தானம் இல்லையென்று சொன்னாற்போல்.

தூணிலும் இருப்பான் துரும்பிலும் இருப்பான்.

தூங்குகிறவன் தொடையிலே கப்பலெடுத்துக் குத்தினாற்போல்.

தூண்டிலில் அகப்பட்டமீன் துள்ளி நத்தினால் விடுவார்களா ?

தூண்டிலைப் போட்டு வராலை இழுக்கிறது.

தூண்டில்நுனி மச்சத்திற்கு ஆசைப்பட்டு மீன் உயிரை இழப்பதுபோல.

தூண்டிற்காரனுக்கு மிதப்புமேலேயே கண்.

தூத்துக்குடிச் சந்தையிலே துட்டுக்கொரு பெண்டாட்டி,

தூமத்தியைப் பார்க்கிலும் காமத்தி கொடியது.

தூர இருந்தால் சேர உறவு.

தூரத்துப் பச்சை கண்ணுக்குக் குளிர்ச்சி.

தூரத்துப் பார்வைக்கு மலை மழ மழப்பு, கிட்டப்போனால் கல்லும் காடும்.

தூரப்போக வேண்டுமா கீரைப்பாத்தியிற் கைவைக்க.

தூர்த்தர் என்போர் கையெழுத்துணரார்.

தூர்த்தர் சொல் கேட்டால் வாய்த்திடுங் கேடு.

தூரான குடி நீராகும்.

தூற்றித் திரியேல்.

தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும்.

# தெ

தெட்டிப் பறிப்பாரை எட்டிடத்தில் (எத்தில்) பறிக்கிறது.

தெண்டத்துக்கு அகப்படும் பிண்டத்துக்கு அகப்படாது.

தெண்டத்துக்குப் பணமும் திவசத்திற்குக் கறியும் அகப்படும்.

தெய்வச்செயல் இருந்தால் செத்தவனும் உயிர்பிழைப்பான்.

தெய்வப் புலவனுக்கு நாஉணரும் சித்திரக்காரனுக்கு கை உணரும்.

தெய்வமே துணை.

தெய்வ வணக்கமே நரக வாசலை அடைக்கும் தாழ்.

தெய்வம் காட்டுமே தவிர ஊட்டாது.

தெய்வமே துணைக்கொள், தேகம் அநித்தியம்.

தெய்வம் பண்ணின திருக்கூத்து.

தெரியாத்துணையே பிரியாத் துணை.

தெருச்சண்டை கண்ணுக்கு இன்பம்.

தெருளாமனதுக்கு இருளே இல்லை.

தெவிட்டாக் கனி பிள்ளை, தெவிட்டா பானம் தண்ணீர்.

தெளிவுறும் பரதேசு தேசிகன்.

தென்னிய திருமணி திருட்டுக்கு நவமணி.

தெறிக்க அடித்த தட்டானைப் போல.

தெற்கே அடித்த காற்று திரும்ப அடிக்காதா?

தென்காசி ஆசாரம்; திருநெல்வேலி உபசாரம்.

தென்றலடிக்கிற காற்றே, என் இறுக்கத்தை ஆற்றே!

தென்றல் முற்றப் பெருங்காற்றாகும்.

தென்னைமரத்தில் தேள் கொட்ட பனைமரத்தில் நெறிகட்டியது போல.

தென்னைமரத்தில் ஏண்டா ஏறினாய்? 'கன்றுக்குட்டிக்குப்புல் பிடுங்க' 'தென்னமரத்தில் புல் ஏதடா?' 'அதுதான் கீழே இறங்குகிறேன்'

தென்னைமரத்திற் பாதி என்னை வளர்த்தான் பாவி.

தென்னைமரத்திற்குத் தண்ணீர் ஊற்றினால் தலையாலே தரும்!

தென்னாலிராமன் பூனை (குதிரை) வளர்த்ததுபோல!

# தே

தேங்காய் உடைத்தாற்போல் பேசுகிறான்.

தேங்காய்க்கு மூன்று கண்: எனக்கு ஒருகண்

தேசங்கள் தோறும் பாஷைகள் வேறு.

தேசத்து நன்மை தீமை அரசர்க்கில்லையா ?

தேடக்கிடையாது. தேடவென்றால் கிட்டாது, திருப்பிக் கொடப்பா திருப்பிக்கொடு.

தேடப்போன மருந்து காலில் அகப்பட்டதுபோல்.

தேடா தழிக்கிற் பாடாய் முடியும்.

தேடித் திருவிளக்கு வை.

தேடித்தின்றவர் தெய்வத்தோ டொத்தவர்.

தேடிப் புதைத்துத் தெருவில் இருக்கிறதா ?

தேடுவார் அற்ற பிணம் தெருவோடே.

தேம்படு பனையின் திரள் பழத்தொருவிதை.

தேய்ந்த அம்மான் தெய்வயானை தெய்வத்துக்கிட்டாலும் ஏறாது.

தேராச்செய்கை தீராச்சஞ்சலம்.

தேரைகள் பாம்பைத் திரண்டு வளைத்தாற் போல.

தேரை முகர்ந்த தேங்காய் போல.

தேரோடு நின்று தெருவோடு அலைகிறான்.

தேரோடுபோச்சு திருநாள், தாயோடு போச்சுபிறந்தகம்.

தேர் தெருத் தெருவாக ஓடினாலும் தன் நிலையில்தான் நிற்கும்.

தேர்ந்தவன் என்பது கூர்ந்து அறிவதனால்.

தேவரீர் சித்தம் என் பாக்கியம்.

தேளுக்குக் கொடுக்கிலே விஷம், உனக்கு உடம்பிலே விஷம்.

தேளுக்கு மணியம் கொடுத்தால் ஜாமத்திற்கு பத்து தரம் கொட்டும்.

தேள் நெருப்பில் விழுந்தால் எடுத்துவிட்டவனையே கொட்டும்.

தேனில் விழுந்த ஈ போல தத்தளிக்கிறான்.

தேனுக்கு ஈயைப் பிடித்துவிட வேண்டுமா ?

தேனும் தினைமாவும் தேவர்க்கு அற்புதம்.

தேனும் பாலும் போல் இருந்து கழுத்தை அறுத்தான்.

தேனைப்போலும் செந்தமிழ்க் கல்வி.

தேனைத் தொட்டையோ, நீரைத் தொட்டையோ ?

தேனைவழித்தவன் புறங்கையை நக்காமல் விடுவானா ?

தேனை எடுத்தவரைத் தண்டிக்குமாந் தேனீ.

தேனொழுகப் பேசுவான்.

தேனொழுகப் பேசித் தெரு கடக்க வழிவிடுவான்.

தேன் கூட்டிலே கல்லை விட்டெறியலாமா ?

தேனை வார்த்து வளர்த்தாலும் காஞ்சிரங்காய் தேங்கா யாகாது.

# தை

தை பிறந்தால் வழி பிறக்கும்.

தையில் வளராத புல்லுமில்லை, மாசியில் முளையாத மரமு மில்லை.

தை மழை நெய் மழை.

தையலுமில்லான் மையலுமில்லான்,

தையற் சொற் கேட்டால் எய்திடும் கேடு.

தையும் மாசியும் வைகைத்துறங்கு.

தைரிய லக்ஷிமி தனலக்ஷிமி.

# தொ

தொடங்குகிறது குட்டிச் சுவர், நினைப்பது மச்சு மாளிகை.
தொட்டவன்பேரில் பழி, அப்பனைப் போட்டுவலி.
தொட்டால் பிடித்துக் கொள்ள வேண்டியதுதான்.
தொட்டியப் பேய் சுடுகாடுமட்டும்.
தொட்டிற் பிள்ளைக்கு நடக்கிற பிள்ளை நமன்.
தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும்.
தொட்டுக்கோ துடைத்துக்கோ என்றிருக்கிறது.
தொட்டுப்பார்த்தால் தோட்டியும் உறவு.
தொண்டையில் கண்ட மாலை புறப்பட.
தொண்ணூறு பணம் கடனோடே, துவரம் பருப்பு காற்பணம்.
தொப்புள் அறுத்த கத்தி என்னிடம் இருக்கிறது.
தொழுதூண் சுவையிலும் உழுதூண் இனிது.
தொழுவம் புகுந்த ஆடு, புழுக்கை இடாமற் போகுமா ?
தொன்மை மறவேல்.
தொன்னகம் முழுவதும் தோன்றியது கல்வி

# தோ

தோகை யழகைத் தொட்டுப் பொட்டிட்டுக் கொள்ளலாம்.
தோட்டக்காரன் வாழ்வு; காற்றடித்தால் போச்சு.
தோட்டத்தில் பழமிருக்கத் தூரப் போவானேன் ?
தோட்டத்து நரி கூட்டத்தில் வருமா ?
தோட்டம் நிலைத்த பிறகல்லவோ தென்னம் பிள்ளை வைக்க வேண்டும் ?

தோட்டிபோல உழுது; துரைபோலச் சாப்பிட வேண்டும்.
தோண்டிக் கள்ளைத் தொடர்ந்து குடித்தால் பாண்டியன் மகனும் பறையனாவான்.
தோல் இருக்கச் சுளை விழுங்கி
தோழனோடும் ஏழைமை பேசேல்
தோளில் இருந்து காதைக் கடிப்பதா ?
தோளின் பேரில் தொண்ணூறு அடி அடித்தாலும் துடைத்துப் போடுவான்.
தோன்றிய யாவும் அழியும்.

# தௌ

தௌவித் திரியேல்
தௌவையின் மனதுக்கு ஒவ்வுவது இல்லை

# ந

நகமும் சதையும் போல வாழ்கிறார்கள்.
நகத்தால் கிள்ளுவதை கோடாலி கொண்டு வெட்ட நேரிடும்.
நகரத்து இரண்டாமவனாக இருப்பதைவிட நாட்டுப்புறத்துக்குத் தலைவனாக இருப்பதே மேல்.
நகைக்கும் மகிழ்ச்சி நட்புக்கு நஞ்சு.
நகைத்து இகழ்வோனை நாய் என நினை.
நகை போட்டதுமில்லை, போட்டவர்களைப் பார்த்ததும் இல்லை.
நக்கத் தவிடுமில்லை, குடிக்கத் தண்ணீருமில்லை.

நக்குகிற நாய்க்குச் செக்கு என்றும் சிவலிங்கம் என்றும் தெரியாது.

நக்குகிறபோது நாவு எழும்புமா ?

நச்சுவாயன் வீட்டிலே, நாறவாயன் பெண் கொண்டதைப் போல.

நஞ்சுக்குள் இருந்தாலும் நாகமணி; குப்பையில் இருந்தாலும் கோமேதகம்.

நடக்க அறியாதவனுக்கு நடுவீதி காதவழி.

நடக்கிறது நடக்கட்டும்; தெய்வம் இருக்கிறது.

நடக்கிற பிள்ளை தவழ்வது தாய் செய்த தர்மம்.

நடந்தகாலே சீதேவி: இருந்தக் காலே மூதேவி.

நடந்தால் நாடெல்லாம் உறவு; படுத்தால் பாய்கூட உற வல்ல.

நடபடி உண்டானால் மிதியடி பொன்னாலே.

நடுஊரில் நச்சு மரம் பழுக்கலாமா?

நடுக்கடல் போனாலும் வடுப்படாமல் வரக்கடவீர்!

நடுத்தெரு நாராயணன்.

நடுத்தெருப் பிச்சைக்கு நாணயம் பார்க்கலாமா?

நடுப்படையில் சென்றாலும் வடுப்படாமல் மீளுவான்.

நடை சிறிதாகில் நாள் ஏறும்; படை சிறிதாகில் பயம் ஏறும்.

நட்டாற்றிலே கைவிட்டாற் போல.

நட்டாற்றுக் கோரையைப் போல.

நட்டுவன் பிள்ளைக்குக் கொட்டிக் காட்ட வேண்டுமா?

நட்டுவன் பிள்ளைக்கு கொட்டடிக்கத் தெரியாதா?

நண்டுகால் விரித்தாற் போல.

நண்டு கொழுத்தால் வளையில் இருக்காது; தண்டு கொழுத் தால் தரையில் இருக்காது.

நண்டுக்குச் சிவன் போவது; நரிக்குக் கொண்டாட்டம்.

நண்டைச் சுட்டு நரியைக் காவல் வைத்தது போல.

நண்டை நாழி கொண்டு அளக்கலாமா?

நன்பொருள் கொடுத்து நன்றாக ஓது.

நதிமூலத்தையும் ரிஷிமூலத்தையும் விசாரிக்கக் கூடாது.

நத்தை வயிற்றிலே முத்துப் பிறக்கிறது,

நபுஞ்சகன் கையில் அரம்பை அகப்பட்டது போல.

நமக்காகாதது நஞ்சோடு ஒக்கும்.

நமனுக்கு நாலு பிள்ளையைக் கொடுத்தாலும் உற்றாருக்கு ஒரு பிள்ளை கொடுக்க மாட்டான்.

நமன் அறியாத உயிரும், நாரை அறியாத குளமும் உண்டோ?

நமன் எடுத்துக் கொண்டு போகும் போது, நழுவி விழுந்தவன்.

நமன் வாயிலே மண்ணைப் போட்டாயா?

நம்பவைத்துக் கழுத்தை அறுக்கலாமா?

நம்பினோர் கெடார், நாடினோர் வாடார்.

நம்மைச் செருப்பாலடித்தாலும் நமதண்ணன் வீட்டுப் பயலை வாடா போடா என்னலாமா?

நம் வீட்டு விளக்கென்று முத்தமிட்டுக் கொள்ளுவதா?

நயமொழியால் ஜயமுண்டு.

நரா போகம்; கரா போகம்.

நரியின் கலியாணத்தில் வெயிலோடு மழை.

நரி கொழுத்தால் வளையில் இராது

நரிக்கு இடம் கொடுத்தால் கிடைக்கு இரண்டு ஆடு கேட்கும்.

நரிக்குக் கொண்டாட்டம் நண்டுக்குத் திண்டாட்டம்.

நரிக்குட்டிக்கு ஊளையிடப் பழக்க வேண்டுமா?

நரி நாலுகால் திருடன்; இடையன் இரண்டு கால் திருடன்.

நரி முன்பு நண்டு கரணம் போட்டது போல.

நரி இடமானால் என்ன, வலம் போனால் என்ன; மேலே விழுந்து கடிக்காமல் போனால் சரி.

நரிவாயில் மண்ணைப் போட்டாயா?

நரிவாலைக் கொண்டு கடல் ஆழம் பார்ப்பதுபோல.

நரை திரையில்லை, நமனும் அவசியமில்லை,

நரை மயிர் கறுத்தால்தான் நங்கை நாச்சியாள் குழல் முடிப்பாளாம்.

நல் இனத்தில நட்பு வலிது.

நல்ல அமைச்சு இல்லாத அரசு, வழியின்றி வழிச்செல்வான் போலாகும்.

நல்ல உயிர் நாற்பது நாள் இருக்கும்.

நல்ல எழுத்து நடுவே இருக்கக் கோணல் எழுத்துக் குறுக்கே போட்டது ஏன்?

நல்ல கதை; நீளமில்லை.

நல்ல குடிக்கு நாலிலொரு பங்காளி.

நல்லதுக்கு ஒரு பொல்லாதது; பொல்லாததற்கு ஒரு நல்லது.

நல்லது நாய்க்குத் தெரியுமா?

நல்லதும் பொல்லாததும் நாக்கிலே.

நல்ல நாளிலே நாழிப்பால் கறக்காத மாடா, ஆகாத நாளிலே அரைப்படி கறக்கும்?

நல்லபாம்பு ஆடியதைக் கண்டு, நாக்குப் பூச்சி ஆடியது போல!

நல்ல பெண்டுக்கு ஒரு சொல், நல்ல மாட்டுக்கு ஒரு சூடு.

நல்ல மரத்திலே புல்லுருவி பாய்ந்தது போல.

நல்ல மரத்திலே நச்சுக் கனி பழுக்காது.

நல்ல மனைவி நல்லதைக் கண்டால் நமது புருஷனுக்கு என்று எடுத்து வைப்பாள்.

நல்ல மாடானால் உள்ளூரில் விலைபோகாதோ ?

நல்லவர் கண்ணிலே நாகம் அகப்பட்டாலும் கொல்லார்கள்.,

நல்லவர்கள் ஒரு நாள் செய்த உபகாரத்தை மறவார்.

நல்லவனுக்கு அடையாளம் சொல்லாமல் போகிறது.

நல்லவன் உறவை நாலுபணம் கொடுத்து சம்பாதிக்கவேணும்; கெட்டவன் உறவை பத்துப் பணம் கொடுத்து நீக்கணும்.

நல்லவன் என்று பெயர் எடுக்க நாள் செல்லும்.

நல்ல வார்த்தையைச் சொல்லி நாடியைத் தாக்கினான்.

நல்ல வீடென்று பிச்சைக்கு வந்தேன் கரியை வழித்து கன்னத்தைத் தடவினார்கள்.

நல்லறம் உள்ளது இல்லறம்.

நல்லாரை நாவிலுரை, பொன்னைக் கல்லிலுரை.

நல்லோர்க்குப் பொறுமையே துணை.

நற்குணமே நல்ல ஆஸ்தி.

நற்சிங்கத்துக்கு நரி முடி சூட்டுகிறது !

நனைந்த கிழவன் வந்தால் உலர்ந்த விறகுக்குச் சேதம்.

நன்மையைக் கடைப்பிடி.

நன்மை செய்ய கர்மம் விளையாது.

நன்மையும் தீமையும் இம்மையிலே.

நன்றி மறந்தாரை நடுங்கக் கேட்குமே தெய்வம்.

நன்றி மறவேல்.
நன்றாய் இருந்தாலும் பார்க்க மாட்டார்கள், கெட்டாலும் தாங்க மாட்டார்கள்.

# நா

நா அசைய நாடு அசையும்.
நா (ந) என்னும் அக்ஷரம் நாதன் இருப்பிடம்.
நாகூர் உபசாரமாய் இருக்கிறது.
நாக்காலே போட்டமுடி பல்லால் இழுத்தால் வருமா?
நாக்கிலே இருக்கிறது நன்மையும் தீமையும்.
நாக்குக்கு நரம்பில்லை எப்படிப் புரட்டினாலும் அப்படிப் புரளும்.
நாக்குப் புரட்டர் போக்குப் புகல்வர்.
நாடிக் கெடுப்பாரை கூடிக் கொடுக்கிறது.
நாடிய பொருள் கை கூடும்.
நாடு ஏற்பன செய்.
நாடு கடந்தாலும் நாய்க்குணம் போகுமா?
நாடு காடாயிற்று காடு கழனியாயிற்று.
நாடெங்கும் வாழ்ந்தால் கேடொன்றும் இல்லை.
நாட் சென்ற கொடைநடைக் கூலியாகும்.
நாட்டானுக்கு ஒரு சிட்டாள் வெற்றிலை மடிக்க ஒரு வேற்றாள்.
நாடறிந்த பார்ப்பானுக்குப் பூணூல் வேணுமா?
நாட்டன் பெண்சாதி என்றால் ஏன் என்பாள் நாலுபேருக்கு சோறு என்றால் ஊம் என்பாள்.
நாட்டுக்கு நல்ல துரை வந்தாலும் தோட்டிக்குப் புல் சுமை போகாது.
நாட்டை ஆளப் பெண்பிறந்தாலும் போட்ட புள்ளி தப்பாது.
நாணமும் இல்லை மானமும் இல்லை.

நாணம் இல்லாத சிறுக்கிக்கு நாலுபக்கமும் வாசல்.
நாணம் இல்லாத வாத்திக்கு நாலு திக்கும் கூத்தி.
நாணும் கால் கோணும், நடக்கும் கால் இடறும்.
நாமம் போட்டவனெல்லாம் தாதனா? விபூதி பூசினவன் எல்லாம் ஆண்டியா?
நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கும்.
நாயடித்த துட்டு குலைத்தா காண்பிக்கிறது?
நாயும் சரி நாவியும் சரி உனக்கு?
நாயேன் சொல் அம்பலம் ஏறுமா?
நாயை அடிப்பானேன்; காலைப் பிடிப்பானேன்?
நாயை ஏவ, நாய் வாலை ஏவுகிறது.
நாயைக் கண்டால் கல்லைக்காணோம், கல்லைக்கண்டால் நாயைக் காணோம்.
நாயைக் கொஞ்சினால் வாயை (மூஞ்சியை) நக்கும்.
நாயை அடிக்கக் குறுந்தடி வேணுமா?
நாய் கடித்ததற்கும் செருப்பால் அடித்ததற்கும் சரி.
நாய் குலைத்து நத்தம் பாழாகுமா?
நாய் வாயிலே கோலையிட்டதைப்போல
நாய் வாயை வைத்ததுபோல, வேலையைச் செய்கிறது.
நாய் வேஷம் போட்டால் குலைக்கத்தான் வேண்டும்.
நாய்க்கு முழுத் தேங்காய் தகுமா?
நாய்க்கு வேலையும் இல்லை; நிற்க நேரமும் இல்லை.
நாய் நக்கிச் சமுத்திரம் குறையுமா?
நாய் வாசலைக் காத்தென்ன, கையில்லாதவன் பணக்காரனைக் காத்தென்ன?
நாய் வாழ்த்தென்ன பூனை தாலி யறுத்தென்ன?
நாராசம் காய்ச்சி நடுச்செவியில் விட்டாற்போல.
நார் அறுந்தால் முடியலாம், நரம்பு அறுந்தால் முடியலாம், மனம் அறுந்தால் முடியலாமா?
நாலாம் தலைமுறையைப் பார்; நாவிதனும் சிற்றப்பனுவான்.
நாலாம் பேற்றுப் பெண்; நாதாங்கியை விற்றுண்ணும்.
நாலாறு கூடினால் பாலாறு.
நாலு காரை கூடினால் ஒரு பழுதை.

நாலுகால் கோமாரியும் இரண்டுகாலிலே இறங்கினாற்போல்.

நாலுபிள்ளை பெற்றவளுக்கு நடுத்தெருவிலே சோறு.

நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி, ஆலும் வேலும் பல்லுக் குறுதி.

நாவைப் பிடிக்கிற தாகத்துக்கு நாள் பார்த்தானும் கிணறு வெட்ட.

நாழிவரச் சீதேவி, மரக்கால் வரச்சீதேவி

நாளுக்கு நாள் நரியாய்ப் போகிறது.

நாளைக்குக் கல்யாணம்; பிடியடா பாக்கு வெற்றிலை;

நாளைக்குத் தின்கிற பலாப்பழத்திலும், இன்றைக்குத் தின்கிற களாப்பழம் நல்லது.

நாளைக்குத் தெரியும் நாச்சியாத்தாள் மாரடி.

நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்கிறான்.

நாள்செய்வது நல்லார் செய்யார்.

நாறச் சடலம் நலமில்லா மட்பாண்டம்.

நாற்பதுக்கு மேற் சென்றால் நாய்க்குணம்

நானிலம் தன்னில் நாயகம் கல்வி.

நானும் பூசாரி; எனக்கும் சுவாமி ஆட்ட முண்டு.

நான் இட்டமருந்துன்னைப்போக ஒட்டுமோ நன்னாரிவேருன்னை சாக ஒட்டுமோ?

நான் கண்டதே காட்சி ; கொண்டதே கொள்கை.

நான் தேடிப் பச்சைபோட்ட நாரிகள் எல்லாம் வந்தார்கள் தெய்வம் ஆட.

நான் நட்டேன் நாதன் பயிராக்கினான்.

நான் வாழ்ந்த வாழ்வைச் சொல்லுகிறேன்; அண்டைவீட்டுக் காரன் இருக்கிறானே பார்.

# நி

நிசங்களுக்குக் கோட்டை முற்றுகை கண்டதுண்டா?

நிசம் ஒன்று பல நிங்கு நீக்கும்.

நிஷ்டூரன் கண்ணைத் தெய்வம் கெடுக்கும், நீதிமான் கண்ணை பரிதானம் கெடுக்கும்.

நித்தம் சாவார்க்கு அழுவாருண்டோ?

நித்தம் போனால் முத்தம் (முற்றம்) சலிக்கும்.

நித்திய கண்டம் பூரணாயுசு.

நித்தியம் கிடைக்குமா அமாவாசைச் சோறு.

நித்திய தரித்திரனுக்கு ஆசை அதிகம்.

நித்திரை சத்துரு

நித்திரை சுகம் அறியாது

நிந்தனை சொல்லேல்; நீதியைக் கடைப்பிடி.

நிமிஷநேரம் நிற்கும் இன்பம் சிற்றின்பம்.

நிமைப் பொழுதேனும் இல்லை; நீச உடல்.

நியாயத்தைக் கண்டால் நெடுந்தூரம் ஓடி நிற்கும்.

நிர்வாணதேசத்தில் சேலைக்கட்டினவள் பைத்தியக்காரி

நிலத்திற்குத் தகுந்த கனியும், குலத்துக்குத் தகுந்த குணமும்.

நிலவுக்கு ஒளிந்து பரதேசம் போனதுபோல்.

நிலையில்லான் வார்த்தை நீர்மேல் எழுத்து.

நிலையிற் பிரியேல்.

நில்லாத காலடி நெடுந்தூரம் போகும்.

நிழலின் அருமை வெயிலில் போனால் தெரியும்.

நிறைகுடம் ததும்பாது.

நிறைந்த ஆற்றிலே பெருங்காயம் கரைத்தாற்போல.

நினைக்குமுன் வருவான்; நினைத்ததும் தருவான்.

நின்ற இடத்தில் நெடுநேரம் போமானால் நின்றமரமே நெடுமரம்

நின்ற வரையில் நெடுஞ்சுவர் விழுந்த அன்றே குட்டிச்சுவர்.
நின்ற வெள்ளத்தையும் வந்த வெள்ளம் கொண்டுபோயிற்று.
நின்றால் நெடுமரம் விழுந்தால் பனைமரம்.
நின்று தின்றால் குன்றும் மாளும்.
நின்று போட்டதுமில்லை; குனிந்து எடுத்தது மில்லை.

# நீ

நீ உளராதே; நான் குழறுகிறேன்.
நீக்குப் போக்குத் தெரியாமல் நேர்ந்தபடி.
நீசரானவர் நிலைபெறக் கல்லார்.
நீச்சு நிலையில்லை; ஆற்றிலே நின்றபடி முழுக்குகிறது.
நீட்டவும் மாட்டார் மடக்கவும் மாட்டார்.
நீட்டி நீட்டிப் பேசுகிற வெள்ளாளப் பையா; உங்கள் துரைசாணி எங்கள் சிறையில் இருக்கிறாள்.
நீண்ட கை நெருப்பு அள்ளும்.
நீண்ட தச்சும் குறுகிய கொல்லும்.
நீண்ட புல் நிற்க நிழலாகுமா?
நீதியைக் கேளாமற் தலையை வெட்டுவார்களா?
நீதிமான் தீவினை செய்யிற் பிழைப்பானா, பீதியில்லாதவன் நீதி புரிந்தால்மறுப்பானா?
நீந்தமாட்டாதவனை ஆறு கொண்டு போகிறது.
நீ படித்த பள்ளியிலேதான் நானும் படித்தேன்.
நீ பிறர்க்கு உதவி செய்தால் தெய்வம் உனக்கு உதவி செய்யும்.
நீரகம் பொருந்திய ஊரகத்து இரு.
நீரளவே யாகுமாம் நீராம்பல்.
நீராலே விலகினாய் நான் நெருப்பிலே விலகினேன்.
நீரில் எழுத்தாகும் யாக்கை (உடல்)
நீரில்லா நாடு நிலவில்லா முற்றம்.

நீர்த்தமிழ் இளமை.
நீரும் கொல்லும் நெருப்பும் கொல்லும்.
நீரைச் சிந்தினுயோ, சீரைச் சிந்தினுயோ.
நீர் ஆழம் கண்டாலும் நெஞ்சு ஆழம் காணமுடியாது.
நீர் உயர நெல் உயரும்.
நீர் உள்ள மட்டும் மீன் குஞ்சு துள்ளும்.
நீர் என்று சொன்னுல் நெருப்பு அவியுமா?
நீர்க்குள் பாசிபோல் வேர்க்கொள்ளாது.
நீர்ச்சோறு தின்று நிழலில் இருந்தால் மலடிக்கும் மசக்கை வரும்.
நீர்பாண்டு மெய்யானுல் கௌபீனந் தாங்குமோ?
நீர் மோருக்கும் கதியற்ற வீட்டில் ஓமத்திற்கு கப நெய் கேட்டாற் போல.
நீர் விளையாடேல்.
நீலிக்குக் கண்ணீர் இமையிலே.
நீள நீளத் தெரியும் மெய்யும் பொய்யும்
நீறில்லா நெற்றிபாழ், நெய்யில்லா உண்டிப் பாழ்.
நீறுபூத்த நெருப்புப்போல.

# நு

நுட்பப் புத்திமான் திட்ப சித்தனுவான்.
நுண்ணிய கருமமும் எண்ணித்துணி.
நுண்ணிய ஞானம் உரைப்பார்கள், சொன்னபடி ஒன்றும் நடவார்கள்.
நுண்பொருள் கொடுத்து நுண்ணியராவார்.
நுன்மை நுகரேல்.
நுரையைத்தின்றுல் பசி போகாது.
நுழை விட்டுச்செய் நூல் கற்று அடங்கு.
நுளையன் அறிவானு ரத்தினத்தின் பெருமையை ?

நுளையன் பேச்சு அம்பலத்தில் ஏறுமா ?
நுளையிலே ஆச்சாரமா ?
நுனிக்கொம்பில் ஏறி அடிக்கொம்பைல் வெட்டுவார்களா ?
நுனிப்புல் மேய்ந்தாற்போல.
நுனியில் மேய்கிறது.

# நூ

நூலளவே ஆகுமாம் நுண்ணறிவு.
நூலுக்கு ஏற்ற சரடு.
நூல் இல்லாமல் மாலை கோர்த்ததுபோல.
நூல் கற்றவனே மேலவன் ஆவான்.
நூறு குற்றம் ஆறுபிழை கொண்டு பொறுக்க வேண்டும்.
நூறுநாள் ஓதி ஆறுநாள் விடத்திரும்.
நூற்கவேண்டுமானல்; வெண்ணைக்கட்டிப் போல் நூற்கலாம்.
நூற்றுக்கு இருந்தாலும் கூற்றுக்கு இரை (அரைக்கீரைதான்)
நூற்றுக்கு இருப்பார் ஐம்பதில் சாகார்.
நூற்றுக்கு ஒருபேச்சு ஆயிரத்துக்கு ஒரு தலையசைப்பு.
நூற்றுக்குத் துணிந்த கூற்றுக் கூடை.
நூற்றுக்கு மேல் ஊற்று.
நூற்றைக் கெடுத்தது குறுணி.
நூன்முறை தெரிந்து சிலத்தொழுகு.

# நெ

நெசவாண்டிக்கேன் கோத்திபில்லா ?
நெஞ்சறியப் பொய் சொல்லலாமோ ?

நெஞ்சிலக்கிணந் தெரியாதவனுக்கு பஞ்ச இலக்கணம் தெரிந்தென்ன பலன் ?

நெஞ்சை ஒளித்தொரு வஞ்சகமில்லை,

நெடியார் குறியாரை ஆற்றிலே தெரியலாம்.

நெடுங்கடல் ஓடியும் நிலையே கல்வி.

நெடுங்காலம் நின்றாலும் நெல்முத்தி பணம்ரெட்டி.

நெடும்பகலுக்கும் அஸ்தமனம் உண்டு.

நெய்கிறதைவிட்டு நினைத்துக் கொண்டாலும் கைக்கோளன்.

நெய்க்குடத்தில் எறும்பு மொய்க்கிறதுபோல.

நெய் முந்தியோ ; திரி முந்தியோ ?

நெய்வார்த்த கடன் நின்று வாங்கினாற்போல.

நெஞ்சில் முள் தைத்தாலும் குனிந்துதான் பிடுங்கவேணும்.

நெருப்பிருக்கிற காட்டை நம்பினாலும் நீரிருக்கிற காட்டை நம்பக்கூடாது.

நெருப்பிலே நெய்விட்டது போல்.

நெருப்பிலே போட்டாலும் நெஞ்சு வேகாது.

நெருப்பினிலும் பொல்லாது கருப்பின் வாதை.

நெருப்பு இல்லாமல் நீள் புகை எழும்புமா ?

நெருப்பை மடியிலே கட்டிக் கொண்டிருக்கிறான்.

நெல் இருக்கப் பொன், எள் இருக்க மண்.

நெல்லு குத்துகிறவனுக்கு கல்லுப்பரீட்சை தெரியுமா ?

நெல்லுக்குப் பாய்கிற தண்ணீர் புல்லுக்கும் பாயும்.

நெல்லுவகை எண்ணினாலும் பன்னுவகை எண்ணக்கூடாது.

நெல் விளைகிற நிலமும் தெரியாது, நிலா காய்கிற இடமும் தெரியாது.

நெறி தப்புவார்க்கு அறிவிப்பது வீண்.

நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றம்தான்.

நெற்றியிலே மூன்றுகண் படைத்தவன் வரவேண்டும்.

# நே

நேத்திர மணியே சூத்திர அணியே.

நேயமே நிற்கும்.

நேரா நோன்பு சீராகாது.

நேருத்திரம் சென்மப் பழி.

நேரும் சீருமாய்ப் போகவேண்டும்.

நேர்ந்து நேர்ந்து சொன்னாலும் நீசக் கசடர் வசமாகார்.

நேர்ப்பட ஒழுகு.

நேற்று உளார் இன்று மாண்டனர்.

நேற்றுவந்த மொட்டைச்சி நெய்வார்த்துண்ணச் சிணுங்குகிறாள்.

நேற்று வந்தாளாம் குடி, அவள் தலையில் விழுந்ததாம் இடி

நேற்று வெட்டின கிணற்றிலே முந்தாநாள் வந்த முதலை.

# நை

நைடதம் புலவர்க்கு ஔடதம்.

நைபவர் எனினும் நொய்ய உரையேல்.

நையக் கற்றினும் நொய்ய நன்குரை.

நைவினை நணுகேல்.

# நொ

நொடிப் போதும் பிணிபடேல்.

நொண்டி ஆயக்காரன் கண்டு மிரட்டுகிறதுபோல.

நொண்டிக் குதிரைக்குச் சறுக்கினது சாக்கு.

நொண்டி நொண்டி நடப்பானேன்; கண்டதற்கெல்லாம் படைப்பானேன்.

நொந்த கண் இருக்க நோகாத கண்ணுக்கு மருந்து.

நொந்து அறியார் செந்தமிழ் கற்றோர்.

நொய்யரிசி கொதி பொறுக்குமா ?

நொய்யரென்பவர் வெய்யராவார்.

நொறுங்கத் தின்றால் நூறுவயது.

நொருக்குண்டவனை புறங்கொண்டுரைப்பாய்.

# நோ

நோகாது உணர்வோர் கல்வியை நோற்பர்.

நோகாமல் அடித்தேன் ஓயாமல் அழுதாள்.

நோக்கத்துக்கு ஒதுங்கு.

நோக்க நோக்குவ நோக்காமுன் நோக்குவன்.

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்.

நோயாளிக்கு ஆசை வார்த்தை சொன்னாற் போல.

நோவு ஒன்று இருக்க மருந்து ஒன்று கொடுத்தாற்போல.

நோயாளி தலைமாட்டில் பரிகாரி இருந்து அழுதது போல

நோயாளி விழியாளி ஆனால் பரிகாரி பேராளி ஆவான்.

நோய் கொண்டார் பேய் கொண்டார்.
நோய்க்கிடங் கொடேல்.
நோஞ்சற் பூனை மத்தை நக்குகிறதுபோல.
நோய்த்த புலியாகிலும் மாட்டுக்கு வலிது.
நோவு ஒருபக்கம் இருக்க சூடு ஒருபக்கம் போட்டாற்போல.
நோயாளிக்குத் தெரியும் நோயின் வருத்தம்.
நோன்பு என்பது கொன்று தின்னாமை.

# நௌ

நௌவித் தொழில் நலம்.
நௌவியிற்றானே கல்வியறிவைக்கல்.
நெவவியும் முதுமையும் நடுவுமற்றவன்.
நௌவியும் வாழ்க்கையும் அழகல்ல, நற்குணம் ஒன்றே அழகு.

# ப

பகலில் பக்கம் பார்த்துப் பேசு; இரவில் அதுகூடப் பேசாதே!
பகலில் பசுவும் தெரியவில்லை என்றால், இரவில் எருமை தெரியுமா?
பகிடியைப் பாம்பு கடித்தது போல.
பகுத்தறியாமல் துணியாதே; படபடப்பாகப் பேசாதே.
பகையாளிக் குடியை உறவாடிக் கெடு.
பகையர் உறவு புகை எழா நெருப்பு.
பக்கச் சொல் பதினாயிரம்.
பக்தியோடே பாகற்காய் சட்டியோடே தீயுது.
பங்கரை சாவானுக்கு பல் அழகைப்பார்.

பங்காளத்து நாய் சிங்காசனம் ஏறிய தென்று, வண்ணான் கழுதை வெள்ளாவிப் பானையில் ஏறிக் கொண்டதாம்.

பங்காளியையும் பனங்காயையும் பதம் பார்த்துக் கொள்ள வேண்டும்.

பங்கில்லாப் பங்கை விழுந்து அள்ளலாமா?

பங்குனி மாதம் பகல் வழி நடந்தால் படுபாவி.

பங்குனி யென்று பருப்பதும் இல்லை, சித்திரை யென்று சிறுப்பதும் இல்லை.

பசிக்குக் கறிவேண்டாம்; தூக்கத்திற்குப் பாய்வேண்டாம்.

பசிக்குப் பனம்பழம் தின்றால் பித்தம் பட்டதைப் படட்டும்.

பசிதீர்ந்தால் பாட்டும் இன்பமயம்.

பசித்தவன் பழங்கணக்குப் பார்த்தது போல.

பசித்த செட்டி பாக்கைத் தின்று னும்.

பசித்தவனுக்கு பால் அன்னம் இட்டாற் போல.

பசித்தவன் தின்னாததும் இல்லை; பகைத்தவன் கொல்லாததும் இல்லை.

பசித்தார் பொழுதும் போம், பாலுடன் அன்னம் புசித்தார் பொழுதும் போம்.

பசியாமல் இருக்க மருந்து கொடுக்கிறேன்; 'பழையது இருந் தால் போடு' என்றுனும்.

பசியாவரம் படைத்த தேவர் போல.

பசியாலும் ஏழையில்லை; பார்ப்பாரிலும் ஏழை யில்லை.

பசியுற்ற நேரத்தில் கிடைக்காத பாலும் பழமும் பசியற்ற நேரத்தில் ஏன்?

பசியுடையான்; ருசி யறியான்.

பசியேப்பக் காரனுக்கும் ருசி(புளி)யேப்பகாரனுக்கும் வித்தியாசமில்லையா?

பசி ருசியறியாது; நித்திரை சுகம் அறியாது.

பசி வந்தால் பக்தி பறக்கும்.

பசி வந்திடப் பத்தும் பறந்து போம்.

பசு கறுப்பானல் பாலும் கறுப்பா?

பசு கிழமானல் பாலின் சுவை போகுமா?

பசுவிலே சாதுவையும் பார்ப்பானிலே ஏழையையும் நம்பக் கூடாது.

பசு தின்னுவிடில் பார்ப்பானுக்கு.
பசுத்தோல் போர்த்திப் புலிப்பாய்ச்சல் பாய்கிறது.
பசுமரத்தில் தைத்த ஆணிபோல.
பசும் புல் தேய நடவாத பாக்கியவான்.
பசுவுக்கு பிரசவ வேதனை; காளைக்குக் காமவேதனை.
பசுவும் புலியும் பரிந்து ஒரு துறையில் நீர் உண்கிறது.
பசுவைக் கொன்றால் கன்று பிழைக்குமா?
பச்சையைக் கண்டால் ஓட்டடா மகளே!
பச்சை கொடுத்தால் பாபம் தீரும், வெள்ளை கொடுத்தால் வினையும் தீரும்.
பச்சைப் பாண்டத்தில் பாலைவைத்தால், பாலும் உதவாது, பாண்டமும் உதவாது.
பச்சைப் புண்ணில் ஊசியெடுத்துக் குத்தியது போல.
பச்சை மண்ணும் சுட்ட மண்ணும் ஒட்டுமா?
பச்சைமரத்துக்கு இத்தனை யென்றால்: படாத மரத்துக்கு எத்தனை?
பஞ்சத்திலே பிள்ளையை விற்றது போல.
பஞ்சாங்கம் கெட்டுப் போனாலும் நவக்கிரகம் கெட்டுப்போமா?
பஞ்சாங்கம் பல சாத்திரம், கஞ்சி குடித்தால் கல மூத்திரம்.
பஞ்சு படிந்த பழஞ்சித்திரம் போல.
பஞ்சு படிந்தாலும் படியும் ஒரு தேசம்; நெஞ்சு பறப்பதற்கு நிலைகாணேம் லவலேசம்.
பஞ்சுப் பொதியில் நெருப்புப் பட்டாற் போல.
பஞ்சுப் பொதியில் அம்பு தைத்தாற் போல.
பஞ்சும் நெருப்பும் ஒன்றாய்க் கிடக்குமோ?
பஞ்சை நாரி பலகாரம் சுட்டாள்; வீங்கிநாரி விசாரப் பட்டாளாம்.
படி ஆள்வார் நீதி தப்பின்; குடியார் இருப்பார் குவலயத்தில்.
படிக்கம் உடைந்து திருவுருக் கொண்டால், பணிந்து பணிந்து தான் கும்பிடவேண்டும்.
படிக்கிறது திருவாசகம், இடிப்பது சிவன் கோயில்.
படிப்பது திருவாய் மொழி; இடிப்பது பெருமாள் கோயில்.
படிக்கு அரசன் இருந்தால், குடிக்குச் சேதம் இல்லை.
படிக்குப் பாதி தேருதா?

படித்தவனுக்கும் படியாதவனுக்கும் கொக்குக்கும் அன்னத்துக்கும் உள்ள வித்தியாசம்.

படித்த முட்டாளாக இருக்கிறான்.

படுகளத்தில் ஒப்பாரியா?

படுகுழி வெட்டியவன் அதிலேயே விழுவான்.

படுக்கப் படுக்கப் பாயும் பகை.

படுக்கப் பாயும் கொடான்; நிற்க நிழலும் கொடான்.

படுக்கை சுகம் மெத்தை அறியுமா?

படுதீப்பட்டு எரிகிற வீட்டிலே படுத்துக் கொள்ள இடங் கேட்டானாம்.

படுத்தால் பசி பாயோடு போய்விடும்.

படை கெட்டு ஓடுகையில் நரைமயிர் பிடுங்குவதோ?

படைக்கும் ஒருவன்; கொடைக்கும் ஒருவன்.

படை மிகுந்தால் அரண் இல்லை.

படை முகத்திலும் அறிமுகம் வேண்டும்.

பட்சிச் சிறகு பறி கொடுத்தது போல.

பட்சித்தாலும் அவர் சித்தம் ; ரட்சித்தாலும் அவர் சித்தம்.

பட்சி பசித்தாலும் எட்டிக் கனியைத் தின்னாது.

பட்ட இடம் பொழுது; விட்ட இடம் விடுதி.

பட்ட காலிலே படும்; கெட்ட குடியே கெடும்.

பட்டாடை வாய்த்தால்; பணியும் வாய்க்கும்.

பட்டணத்தான் பெற்ற குட்டி, பணம் பறிக்க வல்ல குட்டி.

பட்டணத்து வாசலைப் படலாலே மூடுவதோ?

பட்டப்பகலிலே போகிறவனுக்கு தட்டுக்கூடை மறைப்பு ஏன்?

பட்டதும் கெட்டதும் பாய் முடைந்து விற்றதும் ஓலை கிடைக்காமல் உட்கார்ந்திருந்ததும்.

பட்டப் பகலிலே நட்சத்திரங் கண்டதைப் போல,

பட்டப்பகல் போல நிலவு எரிக்கக் குட்டிச் சுவரிலே முட்டிக் கொள்ள என்ன வெள்ளெழுத்தா?

பட்டப் பகல் விளக்கு பழுதடைந்தாற் போல.

பட்டவர்க்குப்பலன் உண்டு; பதவியுமுண்டு.

பட்டா உன் பேரில், சாகுபடி என்பேரில்.

பட்டால் அறிவான் சண்டாளன்; மழை பெய்தால் அறிவான் வேளாளன்.

பட்டால் தெரியும் பார்ப்பானுக்கு, கெட்டால் தெரியும் கோமுட்டிக்கு.

பட்டிக் காட்டானுக்குச் சிவப்புத் துப்பட்டி பீதாம்பரம்.

பட்டி மாட்டுக்குக் கட்டை கட்டியது போல.

பட்டிணத்து நரியை பனங்காட்டு நரி ஏய்த்ததாம்.

பட்டு அறி; கெட்டு அறி; பத்தும் இட்டும் அறி.

பட்டுக் குலைந்தால் பொட்டு

பட்டுக் கத்தரித்தது போலப் பேச வேண்டும்.

பட்டுக்கு அழுவார்; பணிக்கு அழுவார் வையகத்தில், பாக்குக்கு அழுத பாரதத்தைக் கண்டதில்லை.

பட்டுக் கோட்டைக்கு வழி கேட்டால்; கொட்டைப் பாக்கு விலை என்ன என்கிறான்.

பட்டு நூலுக்குள்ள சிக்கெல்லாம் இருக்குது.

பட்டுப் புடவையை இரவல் கொடுத்தது மல்லாமல் பாவைத் தூக்கிக் கொண்டு திரிந்தது போல.

பட்டும் பட்டாடையும் பெட்டியிலிருக்கும் காற்காசுக் கந்தை ஓடி உலாவும்.

பட்டும் பாழ்; நட்டும் சாவி.

பணக்கள்ளி பாயில் படாள்.

பணக்காரனுடன் பந்தயம் போடலாமா?

பணக்காரன் பின்னும் பத்துப்பேர்; பைத்தியக்காரன் பின்னும் பத்துப்பேர்.

பணத்துக்குப் பெயர் ஆட்கொல்லி.

பணத்தைக் கொடுக்கச் சொல்லி உயிரை வாங்குகிறது.

பணமும் பத்தாயிருக்க வேண்டும்; பெண்ணும் முத்தாய் இருக்கவேண்டும்.

பணம் இருந்தால் பாதுஷா, பணம் இல்லாவிட்டால் பக்கிரி.

பணம் இல்லாதவன் பிணம்.

பணம் உண்டானால் படையையும் வெல்லுவான்.

பணம் என்றால் பிணமும் வாயைத் திறக்கும்.

பணம் என்றால் பேயாய்ப் பறக்கிறான்.

பணம் என்ன செய்யும்? பத்து விதம் செய்யும்!

பணம் என்ன பாஷணம்; குணம் ஒன்றே போதும்.

பணம் பந்தியிலே குலம் குப்பையிலே.

பணம் பார்த்துப்பண்டங்கொள்; குணம் பார்த்துப்பெண்ணைக் கொள்.

பண்டம் ஓரிடம்; பழி ஓரிடம்.

பண்டாரம் பிண்டத்துக்கு அழுகிறான்; லிங்கம் பஞ்சாமிருதம் கேட்டதாம்.

பண்ணப் பண்ணப் பலவிதம் ஆகும்.

பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்.

பண்ணிய பாவத்தைப் பட்டுத் தொலைக்க வேண்டும்.

பண்ணைப் பூப்போல் நரைத்தும் புத்தியில்லை.

பதமாய் சிநேகம் செய்யவேண்டும்.

பதறாத காரியம் சிதறாது.

பதறிய காரியம் பாழ்.

பதிவிரதா பத்தினி கதை கேட்டுவந்தேன்; பட்டுக்கிடப்பானே காலை மடக்கு!"

பதிவிரதைக்குப் பர்த்தாவே தெய்வம்.

படிதாண்டாப் பத்தினி.

பதினாயிரங் கொடுத்தாலும் பதைபதைப்பு ஆகாது.

"பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்!"

பதுங்குவது எல்லாம் பாய்ச்சலுக்கு அடையாளம்,

பதியில்லாத பூனை பரதேசம் போயிற்றாம்; நெத்திலி மீனை வாயிலே கவ்விக்கொண்டு

பத்தினி பட பட, பானைச் சட்டி லொட லொட.

பத்தியத்துக்கு முருங்கைக்காய் கொண்டுவா என்றால் பால் தெளிக்க அகத்திக்கீரை கொண்டு வருவான்.

பத்திரம்; என் வாசலில் கால் வையாதே.

பத்திலே பசலை; இருபதிலே இரும்பு.

பத்தினியைத் தொட்டதும், துரியோதனன் பட்டதும்.

பத்து அரிசியும் வேகவில்லை; பாவி என் பிராணனும் போக வில்லை.

பத்து ஏர் வைத்து படைமரமும் தோற்றேன்; எத்தனை ஏர் வைத்துக் கோவணமும் தோற்றாய்.

பத்துக் காதம் போனாலும் பழக்கம் வேண்டும்.

பத்துப் பேரோடு பதினொராவது பேராக இருக்கவேண்டும்.

பத்துப் பேருக்கு பல் குச்சி ஒருவனுக்குத் தலைச்சுமை.

பத்துப் பேர் மெச்சப் படிக்கிறதிலேயும் ஆயிரம் பேரை அடிக்கிறதிலேயும் நாலு பேர் மெச்ச நடிக்கிறதிலேயும், மிடா மிடாவாகக் குடிப்பதே கெட்டிக்காரத் தனம்.

பத்தோடு பதினொன்று, அத்தோடு இதொன்று.

பந்தமும் கூத்தும் விடிந்தால் தெரியும்.

பந்திக்கு முந்த வேண்டும்; படைக்குப் பிந்த வேண்டும்.

பந்தியில் வேண்டாம் என்றால் இலை பொத்தல் என்கிறாயே?

பயித்தியம் தெளிகிறது உலக்கை எடுத்துவா காது குத்த.

பயித்தியம் பிடித்துப் பாயைப் பிராண்டுகிறது.

பாணி அடுப்புப் பாழ் போகாது.

பாதம் எப்படி ; பக்தர் அப்படி.

பரபோகம் தேடி, இகபோகம் நாடி ; வாழ்க்கையைப் பெற வேண்டும்.

பாப்பான் பயிரிழந்தான்; இறப்பான் சுகமிழந்தான்.

பரப்பிரம்மத்தைத் தியானஞ் செய்வதனால், பிரகாசிக்காமல் இருந்த விஞ்ஞானம் பிரகாசிக்கின்றது.

பரம்பரை ஆண்டியோ, பஞ்சத்துக்கு ஆண்டியோ?

பரிகாசப்பட்டவனைப் பாம்பு கடித்தது போல

பரிகாரி உறவு தெருவாசல் மட்டும்.

பரிவு இல்லாத போசனத்துக்குப் பட்டினி நன்று; பிரியம் இல்லாப் பெண்டிர்க்குப் பேய் நனறு

பருத்திக் காட்டை உழுவதற்கு முன்னம் பொம்மனுக்கு ஏழு முழம்; திம்மனுக்கு ஏழு முழம்.

பருத்திபட்ட பாடெல்லாம் படுகிறது.

பருத்தி புடவையாய்க் காய்த்தது போல.

பருப்பிலே நெய் வார்த்தது போல.

பருப்பில்லாத கலியாணம் உண்டா?

பருப்புச் சோற்றுக்குப் பதின்காதம் போவான்.

பருப்பும் பச்சரிசியும்.

பருமரத்தை அண்டிய பல்லியும் சாகாது.

பருவத்தே பயிர் செய்.

பல சரக்குக்காரனைப் பைத்தியம் பிடித்ததுபோல்
பல திட்டுக்கு ஒரு முழுக்கு.
பல துளி பெருவெள்ளம்.
பல தொல்லைக்காரன்
பலத்தவன் கைக்கு இளைத்தவன் துரும்பு.
பல நாளைய திருடன் ஒரு நாளைக்கு அகப்படுவான்.
பலன் தேடப் போய், பழி வந்து நேர்ந்தது போல.
பல மரங்கண்ட தச்சன் ஒரு மரமும் வெட்டான்.
பல முயற்சி செய்யினும் பகைவன்மேல் சிந்தை வை.
பலன் இல்லாப் பல நாளிலும் அறம் செய்யும் ஒருநாள்பெரிது.
பலா உத்தமம், மா மத்திமம், பாதிரி அதமம்.
பலாப்பழத்தை ஈக்கள் மொய்ப்பது போல.
பலாப்பழத்துக்கு ஈயைப் பிடித்தா விடவேண்டும்?
பல் ஆடப் பசியாறும்.
பல்லக்கு ஏற யோகமுண்டு, உன்னி ஏறச் சக்தியில்லை.
பல்லிலே பச்சரிசி வைக்க.
பல்லுப் போனால் சொல்லுப் போச்சு.
பல்லைக் காட்டிச் சிரிக்காதே!
பல்லைப் பிடுங்கிய பாம்பு போல.
பழகப் பழகப் பாலும் புளிக்கும்.
பழக்கம் கொடியது.
பழங்கால் தூர்க்கவும் வேண்டாம், புதுக்கால் வெட்டவும் வேண்டாம்.
பழந்தேங்காயிலேதான் எண்ணெய்.
பழம் நழுவிப் பாலில் விழுந்தது; அதுவும் நழுவி வாயில் விழுந்தது.
பழம் பழுத்தால் கொம்பில் தங்காது.
பழி ஓரிடம் பாவம் ஓரிடம்.
பழிக்கு அஞ்சாதவன் கொலைக்கு அஞ்சுவானா?
பழித்தார் தலையில் பாடு வரும்
பழி போட்டுத் தலையை வாங்குகிற ஜாதி.
பழிப்பன பகரேல்.
பழிப்பான கல்வி பாவத்தின் ஊற்று.

பழுதை என்று கிடக்கப்படவுமில்லை; பாம்பு என்று நினைக்கப் படவுமில்லை.

பழுதை பாம்பாய்த் தோன்றியது.

பழுத்த ஓலையைக் கண்டு குருத்து ஓலை சிரித்ததாம்.

பழுத்த பழம் கொம்பிலே நிற்குமா?

பழைய குருடி கதவைத் திறடி.

பழைய கறுப்பனே, கறுப்பன்.

பழையனூர் நீலி பரிதவித்து அழுதது போல.

பள்ளத்தில் இருக்கிறவன்; பள்ளத்திலேயே இருப்பானா?

பள்ளத்திலே இருந்தால் பெண்டாட்டி; மேட்டிலே இருந்தால் அக்காள்.

பள்ளத்தில் இறங்கினால் பெண்டாட்டி; மேட்டில் ஏறினால் தாயா?

பள்ளம் இறைத்தவன் பங்கு கொண்டு போகிறான்.

பள்ளம் மேடில்லாமல் பருத்தி விளைக்கிறது.

பள்ளி கையில் பணமிருந்தால் பாதி ராத்திரியிலே பாடுவான்.

பள்ளிக் கணக்குப் புள்ளிக்கு உதவாது.

பள்ளியையும் இரும்பையும் பதம் பார்த்து அடி.

பள்ளி பாக்குத் தின்றால் பத்து விரலும் சுண்ணாம்பு.

பள்ளிப்பிள்ளையென்றால் செல்லம் குறையுமா?

பள்ளியை நினைத்துப் பாயில் படுத்தால் பரமசிவன் போல சனவு வரும்.

பறக்கிற பட்சிக்கு எது தூரம்?

பறக்கும் குருவிக்குக் கொம்பு இருக்கும் இடம் தெரியாது; பரதேசிக்குத் தங்குமிடம் தெரியாது.

பறங்கி நல்லவன்; பிரம்பு பொல்லாதது.

பறந்துபோகிற எச்சிற்கலைமேல் பாராங்கல்லைத் தூக்கி வைத்தாற்போல.

பறப்பான் பயிரை இழந்தான்: அறக்காஞ்சி பெண்டிழந்தான்.

பறிகொடுத்த காட்டில் பயமில்லை,

பறைச்சி பிள்ளையைப் பள்ளியில் வைத்தாலும் பேச்சிலே 'ஐயே' என்னுமாம்.

பறை தட்டினாற் போல.

பறையன் பொங்கலிட்டால் பகவானுக்கு ஏறாதோ.

பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சுமா?

பனிக்கண் திறந்தால் மழைக்கண் திறக்கும்.

பனி பெய்தால் மழை இல்லை; பழம் இருந்தால் பூ இல்லை.

பனி பெய்து கடல் நிறையுமா?

பனிப் பெருக்கிலே கப்பல் ஓடுமா?

பனை ஏறி விழுந்தவனைக் கடா ஏறி மிதித்தது போல.

பனை நிழலும் நிழலோ, பகைவன் உறவும் உறவாமோ?

பனை மரத்தின் கீழிருந்து பாலைக் குடித்தாலும், கள்ளைக் குடித்தான், என்பார்கள்.

பன்றிக்குப் பல குட்டி; சிங்கம் ஒரு குட்டி.

பன்னிச் சொன்னால் பலிதமாகும்.

பன்னிப் பன்னிப் பழங்கதை படியாதே.

# பா

பாகற் கொட்டை விதைக்கச் சுரைக் கொட்டை முளைக்குமா?

பாகை சொந்தம் மற்றதெல்லாம் இரவல்.

பாக்குக் கொடுத்தால் பந்தலிலே என்ன அலுவல்?

பாக்கு வெட்டியில் அகப்பட்ட பாக்கைப் போல.

பாக்கை மடியிலே கட்டலாம்; தோப்பை மடியிலே கட்டலாமா?

பாசம் அற்றவன் பரதேசி.

பாடகக் காரியிடம் பாரதம் சொன்னால் பாடகத்தைப் பார்ப்பாளா, பாரதத்தைக் கேட்பாளா?

பாடம் ஏறினும் ஏடு கைவிடேல்.

பாடிப்பாடிக் குத்தினாலும் பதரில் அரிசி இல்லை.

பாடுபடாமற் போனால் பலன் இல்லாமற் போகும்.

பாணம் தொடுத்தாற் போலப் பேசுகிறான்.

பாண்டவர் தெரியாதா கட்டில் காலு போல, மூன்று பேர் சொல்லி, இரண்டுவிரலைக் காட்டி, நிலத்தில் ஒரு கோடு எழுதி, அதையும் அழித்தானாம்.

பாதகர் பழக்கம் பாம்பொடு பழகுதல் போல்.

பாதிப்பாக்கைக் கப்பலிலே போட்டுப் பங்குக்கு நின்றானாம்.

பாத்திரம் அறிந்து பிச்சை இடு; கோத்திரம் அறிந்து பெண்ணைக் கொடு.

பாமணி ஆற்றிலே பல்லைக் கழுவு, முல்லைக் காற்றிலே முகம் கழுவு.

பாம்பறியும் பாம்பின் கால்.

பாம்பாட்டிக்குப் பாம்பிலே சாவு; கள்ளனுக்குக் களவிலே சாவு.

பாம்பினும் பாம்புக் குட்டிக்கு விஷமும், வீரியமும் அதிகம்.

பாம்பில் குட்டி பாம்பு, அதன் குட்டி நட்டுவாக்கலி.

பாம்பின் வாய்த் தேரையைப் போல.

பாம்பு என்றால் படையும் நடுங்கும்.

பாம்புக்கு சத்துருக்கள் கொஞ்சமா?

பாம்புக்குப் பால் வார்த்தால்—அது விஷத்தையே கொடுக்கும்.

பாம்புக்குட்டிக்கு விஷத்தைப் பாலடை வைத்துப் புகட்ட வேண்டுமா?

பாம்புக் குட்டியைக் கண்டவிடத்திலே தலையை நசுக்கு.

பாம்புக்குத் தலையைக் காட்டி, மீனுக்கு வாலைக் காட்டுகிறது.

பாம்புக்குப் பகை கருடன்.

பாம்புக்குப் பாம்பு விஷமுண்டோ?

பாம்புக்குப் பால் வார்த்தாற் போல.

பாம்பறியும் பாம்பின் கால்.

பாம்புக்கு மூப்பு இல்லை.

பாம்புக்கு ராஜா மூங்கில் தடி.

பாம்பு தன் பசியை நினைக்கும், தேரை தன் விதியை நினைக்கும்.

பாம்பு பகையும்; தோல் உறவுமா?

பாம்பும் கீரியும் போல.

பாம்பும் கீரியும் போல பலகாலம் வாழ்ந்தேன்.

பாம்பும் நோவாமல் பாம்படித்த கோலும் நோவாமல் இருக்க வேண்டும்.

பாம்பை முட்டையிலே, புலியைக் குட்டியிலே கொல்ல வேண்டும்.

பாம்போடு பழகேல்.

பாயைச் சுருட்டடி, பிள்ளையை எடுக்கடி, பரதேசம் போக.

பாய்மர மில்லாத கப்பலைப் போல.

பாய்மரம் சேர்ந்த காகம் போலானேன்,

பாரபுத்தி யுள்ள பறவை, பலரால் பிடிக்கப்பட்டது.

பாராத உடைமை பாழ்.

பாராத காரியம் பாழ்.

பாறைக்கு ஊடாடாத பாறை;பசுமரத்தின் வேருக்கு ஊடாடி விடும்.

பார்! கேள்! மௌனமாயிரு,

பார்க்கப் பதினாயிரம் கண் வேண்டும்.

பார்க்கக் கொடுத்த பயணத்துக்கு வெள்ளிக் கிழமையா ?

பார்க்கிற பார்வையையும் தேய்க்கிற தேய்ப்பையும் நான் அறிவேன் பார், பார்! தேய், தேய்!!

பார்த்த கண்ணும் பூத்துப் பகலும் இரவாச்சு.

பார்த்த முகம் எல்லாம் வேற்று முகம்.

பார்த்தவர்க்கு இன்பம், படுபவர்க்குத் துன்பம்

பார்த்தால் தெரியுமா, பட்டால் தெரியுமா வருந்தம்.

பார்த்தால் பூனை; பாய்ந்தால் புலி.

பார்த்திருக்கத் தின்று, விழித்திருக்க கைகழுவுவான்.

பார்த்திருந்தவள் பச்சை குத்தினள்: கேட்டிருந்தவள் வற்புறுத்தினன்,

பார்த்திருந்தும் பாழுங் கிணற்றிலே விழுந்தாற் போல.

பார்ப்பது அறியும் பரப்பிரம்மம்,

பார்த்துப் பார்த்துக் கண்ணும் பூத்துப் போச்சு

பாப்பாத்தியம்மா மாடு வந்தது.

பார்ப்பாரைப் பார்த்து பரதேசம் போனாற் போல.

பார்ப்பார் சேவகமும் வெள்ளைக் குதிரைச் சேவகமும் ஆகாது.

பார்ப்பானுக்குப் பிறப்பு; கோவிலிலேயும் சிறப்பு.

பார்ப்பானுக்கு மூத்த பறையன் கேட்பாரின்றிக் கீழ்ச்சாதி யானான்,

பார்ப்பான் கறுப்பும் பறையன் சிவப்பும் ஆகாது.

பால ஜோசியம் விருத்த வைத்தியம்.

பாலருக்குப் பலம் அழுகை; மச்சத்துக்குப் பலம் உதகம்.

பாலர் மொழி கேளாதார்; குழல் இனிது யாழ் இனிது என்பார்கள்.

பாலாவுடையான் விருந்துக்கு அஞ்சான்.

பாலான நெஞ்செல்லாம் பகையாக்கினான்,

பாலுக்குங் காவல் பூனைக்கும் தோழன்,

பாலுக்குச் சீனியில்லை யென்பாருக்கும் கூழுக்கு உப்பில்லை என்பாருக்கும் 'இல்லை' என்பது ஒன்றுதான் விசாரம்.

பாலுக்கு மிஞ்சிய சுவையுமில்லை, பல்லக்குக்கு மிஞ்சிய சொகுசும் இல்லை.

பாலுக்கு வந்த பூனை மோரைக் குடிக்குமா?

பாலுடன் கூடிய நீரைப் போல.

பாலுமாம் மருந்தாம்.

பாலுஞ் சோறுமாய்த் தின்கிற பாளையக்காரன் மோட்டு வளையை எண்ணுவது போல.

பாலுந்தேனுஞ் சேர்ந்தாற் போல.

பாலும் பதக்கு? மோரும் பதக்கோ?

பாலும் வெள்ளை; மோரும் வெள்ளை.

பாலைப்பார்த்துப் பசுவைக் கொள்ளு; தாயைப் பார்த்து மகளைக் கொள்ளு.

பாலையும் சோற்றையும் குழந்தைகள் 'பாச்சி; சோச்சி' என்பது போல.

பாலைவார்த்துத் தலைமுழுகி விடு.

பாலோடு கலந்த நீரும் பாலாகும்.

பாலோடாயினும் காலத்தே உண்.

பால் இருக்கிறது; பாக்கியம் இருக்கிறது; பாலிலே போட்டுக் குடிக்கப் பத்துப் பறுக்கை இல்லை.

பால்குடிக்கப் பாக்கிய மில்லாதவன் விலைக்குப் பால் வாங்கினாலும், அதையும் பூனை குடித்ததாம்.

பாவட்டம் பூப்போல நரைத்தும் புத்தியில்லை.

பாவத்திற்கு இடங்கொடாதவன் ; பாபத்தை ஜெயங் கொள்வான்.

பாவம் உள்ள இடத்திலே பழி போகும்.
பாவம் ஒரு பக்கம்; பழி ஒரு பக்கம்
பாவலர் அருமை ; நாவலர் அறிவார்.
பாவி கொடுமை பாலும் புளிக்கிறது.
பாவி பாவம் பதராய் விளைகிறது
பாவியார் போன இடமெல்லாம் பள்ளமும் திட்டியும்.
பாவியைப் பிடித்துப் பாம்பாட்டுகிறது.
பாழடைந்த பழங் குட்டிச் சுவரைப் போல.
பாழாய்ப் போகிறது பசுவின் வாயிலே.
பாழூருக்கு நரி ராஜா.
பாற் கடலைக் குடிக்கப் பார்த்திடும் பூனை.
பாற்சுவைக் கன்றிலே தெரியும், பாக்கியவான் பிள்ளை முகத்திலே தெரியும்.
பாற் சட்டிக்குப் பூனையைக் காவல் வைத்தது போல
பானுவைக் கண்ட பனியைப் போல.
பானை ஒட்டினாலும் ஒட்டும்; மாமியார் ஒட்டாள்.
பானையில் இருந்தாலல்லவோ அகப்பையில் வரும்.

# பி

பிச்சன் தோட்டத்திலே புகுந்தது போல
பிக்ஷாதிபதியோ லக்ஷாதிபதியோ?
பிச்சை எடுத்ததாம் பெருமாள்; அதைப் பிடுங்கியதாம் அனுமார்.
பிச்சை எடுப்பதிலும் பிருவலி.
பிச்சைக் காரனுக்குப் பயந்து அடுப்பு மூட்டாததைப் போல.
பிச்சைக்காரனைப் பேய் பிடித்ததாம்; உச்சி ஜாமத்தில்.
பிச்சைக்காரன் சோற்றிலே சனீஸ்வரன் புகுந்தாற் போல.
பிச்சைக்குப் பெரிய குடி
பிச்சைக்கு வந்த ஆண்டி இல்லை என்றால் போவானா?

பிச்சைக்கு வந்தவன்; பெண்ணுக்கு மாப்பிள்ளையா ?
பிச்சைச் சோற்றிலும் எச்சிற் சோறு?
பிச்சை புகினும் கற்கை நன்றே.
பிச்சையிட்டுக் கெட்டவனும், பிள்ளை பெற்றுக் கெட்டவனும் இல்லை.
பிஞ்சிலே பழுத்தவன்.
பிடரியைப் பிடித்துத் தள்ள; பெண்ணுடைய சிற்றப்பன் என்று நுழைந்தானும்.
பிடாரம் பெரிதென்று புற்றிலே கை வைக்கலாமா?
பிடாரனுக்கு அஞ்சிய பாம்பு எலியை உறவு கொள்ளும்.
பிடாரன் கைப் பாம்பு போல.
பிடியில் அழகு புகுந்தால்; பெண் அழகி ஆவாள்.
பிடிக்குப் பிடி நமஸ்காரம்.
பிடித்த காரியம் கடித்தவாய் துடைத்தாற்போல் வரும்.
பிடித்த கொம்பு ஒடிந்தது; மிதித்த கொம்பும் முறிந்தது.
பிடித்தவர்க் கெல்லாம் பெண்டாவாள் .
பிடித்த துன்பத்தைக் கரைத்துக் குடிக்கலாம்
பிடிப்பிடியாய் நட்டால் பொதி பொதியாய் விளையுமா?
பிட்டு எங்கே விக்கும் தொண்டையிலே விக்கும்.
பிட்டுக் கூடை முண்டத்திலே பொறுக்கி எடுத்த முண்டம்.
பிணத்தை மூடி மணத்தைச் செய்.
பிணம் போகிற இடத்துக்குத் துக்கமும் போகிறது.
பிணைப் பட்டாயோ; துணைப் பட்டாயோ?
பிணைப் பட்டுந் துணை போகாதே!
பிண்டத்துக்குக் கிடையாது; தண்டத்துக்கு அகப்படும்.
பிண்டம் பெருங்காயம்; அன்னம் கஸ்தூரி.
பிண்ணுக்குத் தின்பாரைச் சுண்ணும்பு கேட்டால் வருமா?
பிதாவைப் போலிருப்பான் புத்திரன்.
பித்தளைத் துலக்கினுலும் பொன் குணம் வருமா?
பித்தளை நாற்றம் அறியாது.
பித்தளை மணியற்றவனுக்கு பொன்மணி என்று பெயர்.
பித்தனுக்குத் தன் குணம் நூலினும் செவ்வை.
பித்தனுக்குப் புத்தி சொன்னால் கேட்பானு?

பிய்த்து விட்டாலும் போச்சுது. பிடுங்கி விட்டாலும் போச்சுது.

பிய்ந்த சீலேயும் பேச்சுக் கற்ற வாயும் சும்மா இராது.

பிய்ப்பானேன்? கடிப்பானேன்?

பிரசவ வைராக்கியம் புராண வைராக்கியம் ஸ்மசான வைராக்கியம்.

பிரமச்சாரி ஓடம் கவிழ்ந்தது போல்.

பிரமதேவன் போட்ட புள்ளிக்கு இரண்டாமோ?

பிரம்மா நினைத்தால் ஆயுசுக்கு என்ன பஞ்சம்?

பிராமணு! உன் வாக்குப் பலித்தது,

பிரிந்த கன்றைத் தேடி திரும்ப வரும் பசுவைப் போல,

பிரியமில்லாத சோறு பிண்டச் சோறு.

பிள்ளை அருமை பெற்றவளுக்குத்தான் தெரியும்.

பிள்ளை அருமையை மலடி அறிவாளா?

பிள்ளை என்றால் எல்லோருக்கும் பிள்ளை.

பிள்ளைக்காரன் பிள்ளைக்கு அழுகிறன்; பணி செய்வோன் காசுக்கு அழுகிறன்.

பிள்ளைக்குப் பிள்ளையாயிருந்து; பெட்டைப் பிள்ளையை வேலையாக்கினன்.

பிள்ளைச் சீர்; கொள்ளக் கிடைக்குமா?

பிள்ளை நல்லதுதான்; பொழுது போனால் கண் தெரியாது.

பிள்ளை பதினறு பெறுவாள் என்று எழுதி யிருந்தாலும் புருஷன் இல்லாமல் பிள்ளை எப்படிப் பெறுவாள்?

பிள்ளை பிறப்பதற்கு முன்னே தின்று பார், மக்கள் வருவதற்கு முன்னே கட்டிப் பார்.

பிள்ளை பிறந்த ஊருக்குப் புடவை வேண்டுமா?

பிள்ளை பெறப் பெற ஆசை; பணம் சேரச் சேர ஆசை.

பிள்ளை பெற்ற வயிறு, நெல் எடுத்த குழியோ?

பிள்ளை பெற்றவளைப் பார்த்து; பெருமூச்சு விட்டு ஆவதென்ன?

பிள்ளை பெற்றவனுக்கும் மாடு படைத்தவனுக்கும் வெட்கமில்லை.

பிள்ளையைப் பெற்ற பின்தான் பெயரிட வேண்டும்.

பிள்ளைப்பேறு பார்த்ததும் போதும், என் அகமுடையானைக் கட்டி யணைத்ததும் போதும்.

பிள்ளையாருக்குப் பெண் கொள்வது போல.

பிள்ளையாரைக் கண்டால் தேங்காயைக் காணோம், தேங்காயைக் கண்டால் பிள்ளையாரைக் காணோம்.

பிள்ளையாரைப் பிடித்த சனியன், அரச மரத்தையும் பிடித்தது போல.

பிள்ளையார் கோவிலில் இருக்கிறான் கள்ளன், சொன்னாலும் கோள் போலிருக்கும்.

பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது

பிள்ளையில்லாச் சோறு புழு.

பிள்ளையில்லாத பாக்கியம் பெற்றிருந்தென்ன சிலாக்கியம்.

பிள்ளையில்லா வீட்டில் கிழவன் துள்ளி விளையாடுகிறானாம்.

பிள்ளையின் மடியிலே ; பெற்றவன் உயிர் விட்டால் பெருங் கதியுண்டு.

பிள்ளையையும் கிள்ளித் தொட்டிலையும் ஆட்டி விடுகிறான்.

பிள்ளையைச் சாக்கிட்டுப் பூதம் விழுங்குகிறது.

பிள்ளை வரத்துக்குப் போன இடத்தில் புருஷனைப் பறி கொடுத்தது போல,

பிள்ளை வருத்தம் பெற்றவளுக்குத்தான் தெரியும்; மற்றவளுக்குத் தெரியுமா?

பிள்ளை வீட்டுக்காரர் சம்மதித்தால் பாதி விவாகம்முடிந்தது.

பிறக்கிற போதே முடமானால், பேய்க்குப் படைத்தால் தீருமா?

பிறந்த அன்றே இறக்க வேண்டும்.

பிறந்த இடத்து வன்மையை உடன் பிறந்தானிடம் சொல்வதா?

பிறந்த ஊருக்குச் சேலையும் வேண்டாம்; பெண்டு இருந்த ஊருக்குத் தாலியும் வேண்டாம்.

பிறந்தபிள்ளை பிடி சோற்றுக்கு அழுகிறது,

பிறக்கப் போகிற பிள்ளைக்குத் தண்டைச் சதங்கை தேடுகிறார்களாம்.

பிறந்தவன் இறப்பது உறுதி.

பிறர் குற்றம் அறியப் பிடரியிலே கண்

பிறர் பொருளை இச்சிப்பான்; தன் பொருளை இழப்பான்.

பிறர் மனைத் துரும்பு கொள்ளான்; பிராமணன் தன்னை கொண்டான்.

பிறவிக் குருடனுக்குக் கண் கொடுத்தது போல

பிறர் மனை புகாமை அறம் எனப்படும்.

பின் குடுமி புறங்காலில் தட்டுகிறது.

பின் புத்திக்காரன் பிராமணன்.

பின்னாலே யிருந்து ஊன்றி நடக்கிறான்.

பின்னால் வரும் பலாக்காயை விட; முன்னே கிடைக்கும் களாக்காயே மேலாகும்.

பின்னேயானால் உதைக்கும்; முன்னேயானால் முட்டும்.

# பீ

...தின்கிறதிலேயும் ஒய்யாரமா?

...தின்கிறது போலக் கனவு கண்டாய், பொழுது விடிந்தால் யாரிடம் சொல்லுவது ?

...தின்னும் வாயைத் துடைத்தது போல.

...மேலே நிற்கிறாற் போல.

...யைப் பெரிதாக எண்ணி ஈ மொய்க்காமல் வேலி கட்டுவானேன்?

பீறின புடவை பெருநாள் வராது

பீற்றற் பட்டைக்கு அறுதற் கொடி!

# பு

புகழ்ந்தாரைப் போற்றி வாழ்.

புகைக்கினும் கார் அகில் பொல்லாங்கு கமழாது.

புகை நுழையாத இடத்திலும் புகுந்திடும் தரித்திரம்

புகை நுழையாத இடத்திலும் அவன் நுழைவான்.

புகை வீட்டைச் சுற்றும்.
புங்கப் புகழே; தங்கத் திகழே.
புடம் போட்டால் பொன் வேறு; களிம்பு வேறு
புண்ணியத்துக்கு உழுத மாட்டைப் பல்லைப் பிடித்துப் பார்த்தானாம்.
புண்ணியத்துக்குக் கிணறுவெட்டப் புறப்பட்டது போல.
புண்ணியம் ஒருவர் பங்கல்ல
புண்ணியம் பார்க்கப் போகப் பாவம் பின்னே வந்ததாம்.
புண்ணிலே கோல் இட்டது போலத் தூண்டிக் காட்டுகிறான்.
புண்ணிலே புளி பட்டது போல
புதிதாய் வந்த மணியக்காரன் நெருப்பாய் இருக்கிறான்.
புதிய காரியங்களில் புதிய யோசனை வேண்டும்.
புதிய வண்ணானையும் பழைய அம்பட்டனையும் தேட வேண்டும்.
புதிய வெள்ளம் பழைய வெள்ளத்தை அடித்துக் கொண்டு போனது போல.
புதுக் குடத்திலே வார்த்த தண்ணீரைப் போல.
புதுப் பானைக்கு ஈ சேராது.
புதுப் புடவையிலே பொறி பட்டாற் போல.
புதுப் பெண்ணே, புதுப் பெண்ணே நெருப்பெடுத்து வா, உனக்குப் பின்னாலே இருக்குது செருப்படி.
புதுப் பெண்ணைப் போல நாணிக் கோணுதல்.
புதுமைக்கு வண்ணான் பனி கட்டி வெளுத்தான்.
புதுமையான காரியந்தான் இந்தக் கலியுகத்தில்.
புதையல் எடுத்தவனைப் போல.
புத்தியோ கட்டை ; பெயரோ முத்துமாணிக்கம்.
புத்திகெட்ட ராஜாவுக்கு மதி கெட்ட மந்திரி.
புத்திமான் பலவானாவான்.
புத்தி முற்றினவருக்கு சித்தியாகாதது ஒன்றுமில்லை.
புத்தியீனர்கள் குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொள்வார்கள்.
புத்தியுரம் புகழ்.

புரட்டிப் புரட்டி உதைக்கிற போதும் மீசையில் மண் ஒட்டவில்லை என்கிறான்.

புரண்டும் பத்துநாள், மருண்டும் பத்து நாள், பின்னையும் பத்துநாள்.

புருஷனுக்கு ஏற்ற மாராப்பு

புருஷன் அடிக்கக் கொழுந்தனைக் கோபிப்பது போல.

புருவத்துக்கு மையிட்டால் கண்ணுக்கு அழகு

புருவத்தில் பட்டால் கரிக்குமோ, கண்ணில் பட்டால் கரிக்குமா?

புலவர்க்கு வெண்பா புலி

புலி அடிக்குமுன் கிலி அடிக்கும்

புலி குத்திய சூரி என்று கையிலெடுத்தாலும் பெருமை; பூனை குத்தின சூரி என்று கையில் எடுத்தால் பெருமையா?

புலிக் குகையிலே புகுந்த மானைப் போலே!

புலிக்குரிய உணவைப் பூனை புசிக்குமா?

புலிக்குத் தன்காடு என்றும் பிறர் காடு என்றும் கிடையாது

புலிக்குப் பயந்தவர்கள் எல்லாம் என் மேல் படுங்கள்.

புலிக்குப் பிறந்தது நகமில்லாமல் போகுமா?

புலிக்குப் பிறந்தது பூனையாகுமா?

புலிக் கூட்டத்திலே அகப்பட்ட மானைப் போல!

புலி செவி திருகிய மதக் களிறு!

புலி நகம் படா விட்டாலும் அதன் மீசை குத்தினால்; அதுவே விஷம்.

புலி பசித்தால் புல்லைத் தின்னுமா?

புலிப்பால் குடித்தவன் போலிருக்கிறான்.

புலிமேல் எடுத்த கத்தியைப் பூனைமேல் வீசுவதா?

புலியும் பசுவும் பொருந்தி வாழ்ந்தாற் போல

புலியூருக்குப் பயந்து; நரியூருக்கு வந்தேன்; நரியூரும் புலியூராய் போயிற்று.

புலையனுக்குப் பூமுடி பொறுக்குமா?

புலையனுக்கு வாக்குச் சுத்தமும் ஆணையும் இல்லை.

புலையும் கொலையும் களவும் தவிர்

புல்லோர்க்கு நல்லோர் சொன்ன பொருள் ஆகிவிட்டது.
புல்லாளைச் செய்து கொல்லையிற் வைத்தது போல.
புல்லும் பூமியும் உள்ள மட்டும்; கல்லும் காவிரியும் உள்ள மட்டும்.
புல்லு விற்கிற கடையிலே பூ விற்கிறது.
புல்லைத் தின்னும் மாடுபோல, புலியைத் தின்னும் செந்நாய் உதவுமா?
புழுக்கை ஒழுக்கம் அறியாது: பித்தனை நாற்றம் அறியாது.
புழுக்கை கலம் கழுவி உண்ணுது.
புழுக்கைக் குணம் போகாது ஒருகாலும்.
புழுங்கிப் புழுங்கி மாவிடித்தாலும் புழுக்கைச்சிக்கு ஒரு கொழுக்கட்டை.
புழுத்த சரக்கு கொழுத்த பணம்.
புழைக்கடை மருந்து சுவைக்கு உதவாது.
புளித்த காய்க்குப் புளி புகுத்துவியோ?
புளியங் கூடும் பழமும் போல.
புளியமரத்தில் ஏறியவன், நாக்கூசிய பின்தான் இறங்குவான்.
புளியம்பழமும் தோடும் போல.
புளுகினாலும் பொருந்தப் புளுக வேண்டும்.
புள்ளிக் கணக்கன் பள்ளிக்கு ஆவானு?
புள்ளிப் பொறி பாய்ந்த மூங்கில், கொள்ளிச்சாம்பல் ஆனாற் போல.
புறக்குற்றம் அறிய பிடரியிலே கண்;
புற்றிலே ஈசல் புறப்பட்டது போல
புற்றிலே ஈசல் புறப்பட்டாலும் மண்ணிலே கறையான் கூடினாலும் மழைவரவே வரும்.

# பூ

பூசணிக்காய் அத்தனையும் சதை.

பூசணிக்காய் அத்தனை முத்தைப் போட்டுக் கொள்ளுவது எங்கே?

பூசணிக்காய் அழுகுகிறது போல

பூசணிக்காய் எடுத்தவனைத் தோளிலே காணலாம்.

பூசணிக்கும் புடலைக்கும் வித்தியாசம் தெரியாமல பேசுகிறான்.

பூசப்பூசப் பொன்நிறம்; தின்னத் தின்னத் தன்நிறம்.

பூசாரி பூமுடிக்கப் போனானும், பூவாலங்காடு பனாக்காடாய் போச்சாம்.

பூசையில் கரடி புகுந்தது போல.

பூச்சி பூச்சி என்றால் புழுக்கை தலைமேலேறும்

பூட்டிப் புழக்காமல் புழைப்பார் சயைப் போல், கட்டி இழப்பார்.

பூட்டும் திறப்பும் போல.

பூதலம் யாவும் போற்றும் முச்சுடர்.

பூ மலர்ந்து கெட்டது; வாய் விரிந்து கெட்டது.

பூமியாளலாம் என்று மனப்பால் குடிக்கிறது போல.

பூமியைத் திருத்தி உண்.

பூமியைப் போலப் பொறுமை வேண்டும்.

பூராடக்காரனோடு போராட முடியாது.

பூராயமாய் வேலையைக் கற்றுக் கொள்ள வேண்டும்.

பூரியோர்க்கில்லை சீரிய ஒழுக்கம்.

பூலோக முதலியார் பட்டம், புகுந்து பார்த்தால் பொட்டல்.

பூவாசிருக்கப் பொன்னுக்கு அழுவானேன்.

பூவிற்கும் கடையில் புல்விற்றது போல.

பூ விற்றகடையிலே புல் விற்கவும், புலி இருந்த காட்டில் பூனை இருக்கவும், சிங்கம் இருந்த குகையில் நரி இருக்கவும், யானைமேலேறியவன் ஆடு மேய்க்கவும் ஆச்சுது.

பூ விற்ற காசு மணக்குமா, புலால் விற்றகாசு நாறுமா?
பூ விற்றவனைப் பொன் விற்கப் பண்ணுவேன்,
பூவுடன் கூடிய நாரும் மணம் பெற்றது போல.
பூவுள்ள மங்கையாம், பொற்கொடியாம்; போன இடமெல்லாம் செருப்படியாம்.
பூனை குட்டி போட்டாற்போல தூக்கிக் கொண்டலைகிறான்.
பூனை, குண்டுச்சட்டியில் தலையை விட்டுக்கொண்டு, பூலோகம் எல்லாம் இருண்டு போச்சுது என்று நினைக்குமாம.
பூனைக்கு இல்லை தானமும் தவமும்.
பூனைக்குக் கொண்டாட்டம்; எலிக்குத் திண்டாட்டாம்.
பூனைக்குக் கும்மாளம் வந்தால் பீத்தற் பாயைச் சுறண்டுமாம்
பூனைக்கும் தன் குட்டி பொன்குட்டி.
பூனைக்கு மீனிருக்க அது புளியங்காயைத் தின்னுமா?
பூனை சிரித்ததும் எலி பெண்டுக்கு அழைத்ததும்.
பூனை பால் குடிப்பது போல.
பூனைபோல் ஒடுங்கிப் புலிப் போலப் பாய்வான்.
பூனை முன் கிளிபோலப் புலம்பித் தவிக்கிறது.
பூனையைக் கண்டு புலி அஞ்சுமா?

# பெ

பெட்டி பீற்றல், வாய்க்கட்டு திறம்.
பெட்டிப் பாம்புபோல் அடங்கியிருக்கிறான்.
பெட்டியும் மூடியும் பிளந்தாற் போல.
பெட்டைக் கோழி கூவியா பொழுது விடியப் போகிறது?
பெண் என்றால் பேயும் இரங்கும்.
பெண்சாதி யிறந்தால் புதுமாப்பிள்ளை.
பெண்சாதி யில்லாதவன் பேயைக் கட்டித்தழுவியது போல.
பெண்சாதி காற்கட்டு, பிள்ளை வாய்க்கட்டு.

பெண்சாதி கால்விலங்கு; பிள்ளையோ சுள்ளாணி.
பெண்சாதி சொந்தம், போக்கு வரத்துப் புறம்பே
பெண்சாதி பேச்சைக் கேட்டவன் பேய்போல அலைவான்.
பெண்சாதி முகத்தைப் பார்க்கா விட்டாலும் பிள்ளை முகத்தைப் பார்க்க வேண்டும்

பெண்சாதியைக் குதிரைமேலேற்றிப் பெற்றதாயை புல்லுக்கட்டைத் தலைமேலேற்றி அடிக்கும் காலம்.

பெண்டாட்டி ஆசை தின்டாட்டத்தில் விட்டது
பெண்டாட்டியைத் தாய் வீட்டில் விட்டவனும், பூவைக் குரங்கு கையில் கொடுத்தவனும் போல.

பெண்டாட்டி கொண்டதும் போதும், திண்டாட்டம் பட்டதும் போதும்

பெண்டாட்டியுடன் கோபித்துப் பரதேசம் போவாருண்டோ?
பெண்டிர்க்கு அழகு எதிர் பேசாதிருத்தல்.
பெண்டுகள் இருந்த இடம் சண்டைகள் பெருத்த இடம்.
பெண்டுகள் இருந்திடின் பெரிய சண்டையாம்
பெண்டுகள் சமர்த்து; சமையற் கட்டிலிலும் படுக்கை கட்டிலிலும்தான்

பெண்டுகள் சோற்றுக்குத் தண்டமில்லை.
பெண்டு வாய்க்கும் புண்ணியவானுக்கு; பண்டம் வாய்க்கும் பாக்கியவானுக்கு.

பெண் மூளை ஒருபக்கம், மண் மூளை ஒருபக்கம்.
பெண்ணானையைத் தொடரும் போரானையைப் போல
பெண்ணின் நயமும் அறிவேன், சம்பந்தி வாயும் அறிவேன்.
பெண்ணின் கோணல், பொன்னிலே நிமிரும்.
பெண்ணுக்குக் குணம் ஸ்ரீதனம்தான்.
பெண்ணுக்குப் பெண்தான் ஸ்ரீதனம்.
பெண்ணுக்குப் பொன்னிட்டுப் பார், சுவருக்கு மண்ணிட்டுப் பார்.

பெண்ணுக்குப் பெண் ஆசைகொள்ளும் பேரணங்கு.
பெண்ணுக்குப் பேய்; பொன்னுக்குப் பின்வாங்கலாமா?
பெண்ணுக்கும் மாமியாரும், பிள்ளைக்கு வாத்தியாரும்.

பெண்ணுக்கும் பொன்னுக்கும் தோற்பும் தேய்ப்பும் உண்டோ?

பெண்ணைக் கட்டிக் கொடுப்பவர்கள், பிள்ளை பெறுவதற்கும் பிணைப்படுவார்களா?

பெண்ணைக் கொடுத்தவனே, கண்ணைக் கொடுத்தவனே.

பெண்ணைத் திருத்தும் பொன்.

பெண்ணைப் பிழை பொறுக்கத் தாய் வேண்டும்.

பெண் என்று பிறந்தபோதே புருஷனும் பிறந்திருப்பான்.

பெண்ணோடு ஆணோடு பிறக்காத பெரும்பாவி.

பெண் புத்தி; பின்புத்தி.

பெண் மூப்பான வீடு; பாழ்ந்து போம்.

பெண் வளர்த்தி பீர்க்கங் கொடி.

பெய்த மழையும் காய்ந்த வெய்யிலும் சரி

பெரிய இடம் என்று பிச்சைக்குப் போனாளாம் அவள் சீலையை உரித்து முகத்திலே தேய்த்தாளாம்

பெரியாரைத் துணைக் கொள்.

பெரியார் பெருந்தலை, பேய்த் தலைக்கு நாய்த்தலை.

பெரியோரெல்லாம் பெரியருமல்லர்

பெரியோரைக் கண்டு எழாதவன் பிணம்.

பெரியோர் உள்ளம் பேதிக்கலாகாது.

பெரியோர் முன் எதிர்த்தால், வெள்ளத்தின் முன் மரங்கள் வீழ்வது போல வீழ்வார்கள்,

பெரியோர் முன் தாழ்ந்து பேசில், நாணலைப் போல நிமிர்ந்து கொள்வார்கள்.

பெருங்கயிறு; முடி அழுந்தாது.

பெருங்காயம் இருந்த பெட்டகம் போல்.

பெருங் காற்றில் பூளைப் பஞ்சு பறக்கிறது போல.

பெருங்குலத்தில் பிறந்தவன் புத்தியற்றால், கரும்புப் பூப் போல இருப்பான்.

பெருங் கொடை; பிச்சைக்காரனுக்குத் துணிவு.

பெருத்த மரங்களை வைத்தவன்; உருக்கமாய்த் தண்ணீர் வார்ப்பான்.

பெரு நெருப்பிலே புழு மேயுமா?

பெரு நெருப்புக்கு ஈரம் உண்டோ?

பெரு மரத்தைச் சுற்றிய வள்ளிக் கொடிப் போல.

பெருமழை விழுந்தாற் குளிராது.

பெருமாளைச் சேர்ந்தோர்க்குப் பிறவியில்லை

பெருமாள் இருக்கிற வரையில், கருடன் உண்டு.

பெருமாள் என்கிற பெயரை மாற்றப் பெரிய பெருமாள் என்று ஆச்சு.

பெருமாள் செல்லும் வழியிலே; புல்லாய் முளைத்தாலும் போதும்!

பெருமாள் புளிச்ச தண்ணிக்கு அழுகிறான், அனுமன் ததியோதனம் கேட்கிறான்.

பெருமாள் நினைத்தால் வாழ்வு குறைவா, பிரமன் நினைத்தால் ஆயுசு குறைவா?

பெருமை ஒரு முறம்; புடைத்து எடுத்தால் ஒன்று மில்லை.

பெருமைக்கு ஆட்டை அடித்து, பிள்ளையின் கையில் அதன் காதைச் சுட்டுக் கொடுத்தான்.

பெருமையும் சிறுமையும் வாயால் வரும்.

பெருவயிறு கொண்டது அறியாமல், சீமந்தத்திற்கு வளையல் போட்டுக் கொண்டாளாம்.

பெருவழிக் கழிச்சலில் தப்பிப் பிழைத்தவன், நாட்டாண்மைக் காரன்.

பெருவெள்ளம் பாயும் கடலிலே, வாய்க்காலும் பாயத் தானே செய்யும்.

பெற்ற தாயானாலும் குற்றம் எவ்வளவு பொறுப்பாள்?

பெற்ற தாயிடத்திலா கற்ற வித்தையைக் காட்டுவது?

பெற்ற தாயைப் பெண்டுகொண்டு இழுக்கிறதா?

பெற்ற தாய்க்கும் வளர்த்த தாய்க்கும் உதவாத குயிலைப் போல

பெற்ற தாய் செத்தால்; பெற்ற அப்பன் சிற்றப்பன்

பெற்றதாய் பசித்திருக்க, பிராமண போஜனம் செய்வித்தது போல.

பெற்ற தாய் மூதேவியா, புகுந்த மனைவி சீதேவியா?

பெற்றதெல்லாம் பிள்ளையாமோ?* இட்டதெல்லாம் பயிராமோ?

பெற்றபிள்ளை துடையிற் பேண்டால் என்ன செய்யலாம்?

பெற்ற மனம் பித்து; பிள்ளை மனம் கல்லு.

பெற்றவளுக்குத் தெரியாதா, பேயரிடை.
பெற்றவளுக்குத் தெரியும் பிள்ளை அருமை.
பெற்றவள் வயிற்றைப் பார்ப்பாள்; பெண்சாதி மடியைப் பார்ப்பாள்.
பெற்றோரை நினையாத தறுதலை.
பெற்றாலும் பிள்ளை நாயகம்; நட்டாலும் தில்லை நாயகம்.
பெற்றோர்க்கு இல்லை; சுற்றமும் சினமும்.

# பே

பேசப்பேச எந்த மொழியும் வரும்
பேசப் போகிறாயோ; சாகப் போகிறாயோ?
பேசாதிருந்தால் பிழையொன்றும் இல்லை.
பேசினால் அவலம்; பேசாவிட்டால் ஊமை.
பேசினால் வாயாடி; பேசாவிட்டால் ஊமைப்பயல்.
பேச்சுக் கற்றநாய்; வேட்டைக்கு உதவாது.
பேச்சுக்கு இராவணன், பிண்டத்துக்குக் கும்பகர்ணன்.
பேச்சுக்குப் பேச்சு சிங்காரமா?
பேச்சைக் கொடுத்துப் பேச்சை வாங்கு.
பேச்சுப் பல்லாக்கு; தம்பி கால் நடை.
பேச்சுப் பேசும்போதே, பிச்சிப் புடவையில் கட்டிக் கொள்ளுகிறான்.
பேச்சைக் கொடுத்து ஏச்சை வாங்கிக் கொள்ளுகிறான்.
பேச்சை விற்றுக் காய்ச்சிக் குடிக்கிறான்.
பேடி கையில் ஆயுதம் பிரகாசிக்குமா?
பேடி கையில் அரம்பை அகப்பட்டது போல.
பேதம் அற்றவர் நீதம் உற்றவர்.
பேழைகள் வெள்ளத்திலே நின்றும் தாகத்துக்கு அலைவார்கள்.
பேதைமை என்பது மாதர்க்கு அணிகலம்.

பேயானாலும் தாய், நீரானாலும் மோர்.
பேயும் அறியும் பெண் சாதி பிள்ளையை.
பேயும் ஆவது நியாயம் பகரும்.
பேயை நம்பினாலும் பெண்ணை நம்பவொட்டாது.
பேய் அடிக்கப் பிள்ளை பிழைக்குமா?
பேய் ஆடிய கம்பம் போல
பேய்க்கு வேப்பிலை போல.
பேய்க்கு வேலையிட்டது போல.
பேய்க் கூத்தும் ஆமணக்கும் ஆள் போனால் ஆள் தெரியாது.
பேய் சிரித்தாலும் ஆகாது; அழுதாலும் ஆகாது.
பேய்ப்பிள்ளை யானாலும் தாய் தள்ளி விடுவாளா?
பேய் போய்ப் புளிய மரத்தில் ஏறியது போல!
பேராசை கொண்டு பெருக்கத் தவிக்கிறது.
பேராசைக் காரனைப் பெரும் புளுகால் வெல்ல வேண்டும்.
பேராசை தரித்திரம் தீராத உபத்திரவம்.
பேராசை பெரு நஷ்டம்.
பேரிளமை கடந்த பின்; பிள்ளையைப் பெற்றெடுத்தாற் போல,
பேரின்பம் வேண்டின் சிற்றின்பம் வேண்டும்.
பேர் இல்லாச் சன்னிதி பாழ்; பிள்ளையில்லாச் செல்வம் பாழ்.
பேர் கங்காபவானி, குடிக்கத்தான் தண்ணீர் இல்லை.
பேர் சந்திரவதனன்; முகத்திற்றான் அழகு கிடையாது.
பேர் செல்லப்பிள்ளை நாமமற்றுப் போச்சு.
பேர் பெரியபேர், குடிக்கப்போனால் நீர் கிடையாது
பேர் பொன்னுத்தாள்; கட்டக் கரியமணிக்கு வழியில்லை.
பேன் பார்த்தாலும் பார்க்கும் குரங்கு; காதைப் பிய்த்தாலும் பிய்க்கும் — குரங்கு.

# பொ

பொக்கை வாயாலே போச்சுதாம் பொரிமா!

பொங்கலும் போச்சு, போகியும் போச்சு, பெண்ணை அறுப் படா பேயாண்டி.

பொங்கியும் பால் புறம்போகவில்லை.

பொங்கு சனிபோய் மங்கு சனி வந்தது ; மங்கு சனி போய் சிரங்கு சனி வந்தது.

பொங்கின பால் பொய்ப் பால்.

பொங்குங் காலம் புளி ; மங்குங் காலம் மாங்காய்.

பொடி மீனெல்லாம் பெரு மீனுக்கு இறை.

பொட்டி முறித்த பயலுக்கு சட்டையையும் தலைப்பாகை யையும் பார்.

பொத்தைச் சுரக்காயைப் போல.

பொந்தியோடே கைலாயஞ் சேர்வாய்.

பொய் இருந்து புலம்பும், மெய்கிடந்து தவிக்கும்.

பொய் சொல்லி வாழ்ந்தவனுமில்லை; மெய் சொல்லி கெட்ட வனுமில்லை.

பொய் சொன்ன வாய்க்குப் பொரியும் கிடைக்காது.

பொய் மெய்யை வெல்லுமா?

பொய்யான பொருளாசை மெய்யான அருள் ஆசையை விலக்குகிறது.

பொய்யுடை ஒருவன் சொல் வன்மையினால் மெய்போலும்மே மெய்போலும்மே.

பொய்யும் ஒரு பக்கம்; பொறுமையும் ஒரு பக்கம்.

பொய்யும் மெய்யும் நீளத்தகும்.

பொய்யைச் சொன்னாலும் பொருந்தச் சொல்ல வேண்டும்.

பொருளாசையும் மன சாட்சியும் பொருந்துமா?

பொருளிலார்க்கு அருளுமில்லை.

பொருளும் கொடுத்து பழியும் தேடுவதா?

பொருளும் போகமும் கூட வராது.

பொருள் உள்ளார்க்குப் பூலோகம்; அருள் உள்ளார்க்கு அந்த உலகம்.

பொருள்தனைப் போற்றி வாழ்.

பொருள் போன வழியே துக்கமும் போகும்.

பொல்லாங்கு என்பவை எல்லாம் தவிர்.

பொல்லாத காலத்துக்குப் புடைவையும் பாம்பாகும்.

பொல்லாத காலம் சொல்லாமல் வரும்.

பொல்லாத குணத்துக்கு மருந்துண்டா?

பொல்லாத மனம் புத்தி கேளாது

பொல்லாதவர்கள் சங்காத்தம் உப்பு மண்ணில் விழுந்த நீர் போல.

பொல்லாதவர்கள் சினப்பட்டால் கல்லின் பிளவுபோல ராசியாகார்.

பொழுது விடிந்தது; பாவம் தொலைந்தது.

பொறுத்தல் கரப்பாக இருந்தாலும் பொறுக்கப் பொறுக்கத் தித்திப்பு.

பொறுத்தார் பூமியாள்வார்; பொங்கினார் காடாள்வார்.

பொறுமை புண்ணியத்துக்கு வேர், பொருளாசை பாவத்துக்கு வேர்.

பொற்கலம் ஒலிக்காது, வெங்கலம் ஒலிக்கும்.

பொற் காப்புக்கு ஆசைப்பட்டுப் புலியின் கையில் அகப்பட்டது போல.

பொற் குடத்திற்குப் பொட்டிட்டுப் பார்க்க வேண்டுமா?

பொற் பூ மணக்குமா?

பொன் அகப்பட்டால்; பொன் முடியத் துணி அகப்படாதா?

பொன் இரவல் உண்டு; பூவை இரவல் உண்டா?

பொன் ஒன்று; பணிகள் பல.

பொன்கத்தி என்று கழுத்தை அறுத்துக் கொள்ளலாமா?

பொன்காத்த பூதம் போல.

பொன் காய்த்த மரம் போலிருக்கிறான்.

பொன் செருப்பானாலும் காலுக்குத்தானே போட வேண்டும்.

பொன்மணி அற்றவரோ அம்மணி என்பானேன்?

பொன்முடி அல்லது சடைமுடி வேண்டும்.
பொன்னம்பலம் உண்டானால் என்ன அம்பலம் கிடையாது.
பொன்னாங் கண்ணிக்குப் புளியிட்டு ஆக்கினால் உன்னாக் கெல்லாம் தித்திக்கும்
பொன்னாங்கண்ணிக்குப் புளியிட்டு ஆக்கினால் உன்னாப் பெண்ணும் உழக்கு உண்பாள்
பொன்னாலே கலம் உண்டானால் மண்ணாலே சுவர் ஏன் வேண்டும்.
பொன்னான மனதைப் புண்ணாக்காதே!
பொன்னின் கலப்பை வரகுக்கு உழப போனதாம், வரகுச் செருக்கு வரகுப்பட்டதாம்.
பொன்னின் குடம் உடைந்தால் பொன்னாகும், மண்ணின் குடம் உடைந்தால்...?
பொன் விளக்கானாலும் தூண்டுகோல் ஒன்று வேண்டும்
பொன்னும் தெரியாது, பொன் முடிந்த துணியும் தெரியாது.
பொன்னை எரித்தாலும் பொடிக் கீரையை எறியலாமா?
பொன்னையும் புடைவையும் நீக்கிடில் பெண் மலக் கூடு.
பொன்னை வைக்கிற கோயிலிலே பூவையாவது வைக்க வேண்டும்.

# போ

போகப் போகத் தெரியும் பொய்யும் மெய்யும்.
போகமும் உடனுண்டு பொன்னையும் கைக்கொள்ளும் மாதர்.
போகமும் புவனமும் பொருந்துமிட மெல்லாம் தேகம் கரணம் திரியுமே
போகா ஊருக்கு வழி ஏன்?
போக்கிடங் கெட்டவன்; ராஜாவிலும் பெரியவன்.
போக்கற்ற நாய்க்குப் போனதெல்லாம் வழி.
போக்கற்ற மத்தளம் கொட்டியதும் பூண்டித் தெய்வம் வந்தாடியதும்.

போக்கற்றால் புலி ஆள்மேலே பாயும்.
போக்கிடம் கெட்ட முயல் பொந்திலே நுழைந்தாற்போல
போக்கிடம் கெட்ட மூளிக்கு மூக்கின் மேல் கோபம்.
போக்கிடம் கெட்டவன் ஊருக்குப் பெரியவன்.
போக்கிரித் தனத்துக்கு முதல் தாம்பூலம் கொடுக்க வேண்டும்.
போக்கு நீக்கில்லாமல் புத்திக்குச் சரிப்பட்டபடி பேசுகிறது.
போசனம் சிறுத்தாலும் ஆசனம் பெருக்க வேண்டும்.
போதகருக்கே சோதனை மிஞ்சும்.
போதனை பெரிதோ சாதனை பெரிதோ.
போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து.
போய் வந்தும் பொன்னம்பலம், திரும்ப வந்தும் திருவம்பலம்.
போரோடு தின்கிற மாட்டுக்கு பிடுங்கிப் போட்டால் போதுமா?
போர்த்தொழில் புரியேல்.
போர் மிதிக்கிற மாடு வைக்கோலைத் தின்னாதா?
போன சனியனைத் தாம்பூலம் வைத்து அழைத்தது போல.
போன சுரத்தை புளியிட்டு அழைத்தேன்.
போன மச்சான் திரும்பி வந்தான்—பூமணத்தோடே.
போனது போல வந்தாலும் புது மாப்பிள்ளை.
போனதை நினைப்பவன் புத்தி கெட்டவன்.
போன மாட்டைத் தேடுவாருமில்லை; மேய்த்த கூலி கொடுப்பாருமில்லை.

# பௌ

பௌவத்து எழில் கொள்.
பௌலப் பெருமை தெய்வச் செயலே.
பௌவம் உற்றது ஆக்கை; செவ்வை யற்றது வாழ்க்கை.

# ம

மனப்பால் குடிக்காதே.
மகமேருவைச் சேர்ந்த காகமும் பொன்னிறமாம்.
மகனுக்குக் குடல் பாக்கியம் தவிர, மற்றெல்லா பாக்கியமும் இருக்கிறது.
மகளுக்குப் புத்தி சொல்லித் தாய் அதர்மவழி நடந்தாளாம்.
மகளே! உன் சமர்த்து.
மகன் செத்தாலும் சாகட்டும், மருமகள் கொட்டம் அடங்கினாற் போதும்.
மகா பெரியவர் மன்னையிலே பழுத்தவர்
மகாமகம் பன்னிரண்டு வருஷத்திற்கு ஒரு முறை வரும்.
மகாராஜன் கல்யாணத்திலே, நீராகாரம் நெய் பட்டபாடு
மகாராஜன் பெண்ஜாதி மர்மக்காரி ; யாருடன் சென்றாலும் திறமைக்காரி
மகாராஜன் மண்ணைத் தின்றால் மருந்து என்பார்கள்; பிச்சைக்காரன் மண்ணைத் தின்றால் வயிற்றுக்கில்லாமல் தின்கிறான் என்பார்கள்.
மகாலட்சுமி பரதேசம் போனாற் போல.
மகிமையிலே ஒரு பெண் நுவளையிலே சாகிறாள் அதிலும் ஒரு பெண் அறுத்துவிட்டு அழுகிறாள்.
மக்கள் சோறு தின்றால் மகிமை குறையும்
மக்காவுக்குப் போய் கொக்குப் பிடித்தது போல
மக்கி மண்ணா யிருக்கிறான்
மங்குலைக்கண்ட மயிலைப் போல ஆடுகிறான்.
மங்கை திட்டானால் கங்கையிலே முழுகுவாள் ; கங்கை திட்டானால் எங்கே முழுகுவாள் ?
மச்சானைப் பார்க்க உறவுமில்லை; மயிரைப் பார்க்கக் கறுப்புமில்லை.
மச்சில் ஏற்றி ஏணியை வாங்கி விட்டான்.

மச்சினன் உண்டானால் மலை பேறிப் பிழைக்கலாம்.

மந்திரமும் மலரும் கொண்டு துதிக்காவிட்டாலும் நெஞ்சில் நினைப்பதே போதும்.

மஞ்சள் குளித்து மனைமேல் இருக்கும்போது மாட்டேன் என்றீரே, பிள்ளையைப் பெற்று நொந்திருக்கச்சே நோண்ட வந்தீரோ?

மடக்கிழவனிலும் புத்தியுள்ள வாலிபன் சிறந்தவன்

மடக் கேள்விக்கு மாறுத் தரம் இல்லை.

மடக்கொடி இல்லாத மனை பாழ்.

மடிப்பிச்சை மங்கிலியப் பிச்சை.

மடியிலே மாங்காய் போட்டுத் தலையை வெட்டலாமா?

மடியிலே கனம் இருந்தால்தானே வழியிலே பயம்.

மடியிலே பூனைக் குட்டியைக் கட்டிக்கொண்டு சகுனம் பார்க்கிறது.

மடியிலிருந்த பணம் போய், வழியிலிருந்த சண்டையை வலுவில் இழுத்ததாம்.

மடியைப் பிடித்துக் கள்ளை வார்த்து மயிரைப் பிடித்துக் காசை வாங்குகிறதா?

மடைவாய்க் கொக்கு போல.

மட்டாயிருந்தது மதனி குடி வாழ்க்கை.

மட்டான போசனம் மனதிற்கு மகிழ்ச்சி.

மட்டி எருக்கிலை மடல் மடலாய்ப் பூத்தாலும், மருக் கொழுந்து வாசம் வருமா?

மட்டியிலும் மட்டி மகாமட்டி.

மட்டைக் கரியையும் மடைப் பள்ளியையும் நம்பலாகாது.

மணலைக் கயிறாய்த் திரிக்கிறான்; வானத்தை வில்லாக வளைக்கிறான்.

மணி என்ன அறுந்து விழுந்தாய் இரண்டு.

மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கலாமா?

மண்டைக்கு ஏற்ற கொண்டை.

மண்டையில் எழுதி மயிரால் மறைத்தது போல.

மண்ணாங்கட்டி மாப்பிள்ளைக்கு எரு முட்டை பணியாரம்.

மண்ணாயினும் மனையாயினும் காப்பாற்றினவர்க்கு உண்டு.

மண்ணிலிருந்து வழக்கோரஞ் சொல்லாதே.

மண்ணின் மேலிருந்து பெண்ணைப் பழிக்காதே.
மண்ணைத் தின்றாலும் மறைவில் தின்னு.
மண்தனை யாண்ட மன்னர்கள் எத்தனையோ?
மண் பூனை எலி பிடிக்குமா? மதிகெட்ட ராசாவே.
மண்வெட்டி கூதல் அறியுமா?
மதயானை ஏறியும் திட்டி வாசலில் நுழைந்தது போல
மதயானை போன்றது மார்க்கம்.
மதனும் ரதியும் போல வாழ்ந்திருக்க வேண்டும்.
மதாபிமானம் சுஜாதிமானம் தேசாபிமானம்.
மதியாதார் தலைவாசல் மிதியாதே!
மதியாதான் வாசலிலே வல்லிருளே யானாலும் மிதியாம லிருப்பதே கோடி பெறும்
மதியில்லாத விண்ணானேன் மருந்தில்லாத புண்ணானேன்;
மதியும் உமது; விதியும் உமது
மதில் மேல் ஏறிய பூனை
மதுரையில் பூசணிக்காய் மாட்டு விலை.
மத்திட்ட தயிர்போல ; புத்தி குழம்புகிறது
மந்திரகிரியால் குழம்பும் கடல் வானோர்க்கு அமுதம் ஈந்ததைப போல.
மந்திரத்தால் மாங்காய் விழுமா?
மந்திரம் கால்; மதி முக்கால்
மந்திரி இல்லாத யோசனையும் ஆயுதம் இல்லாத சேனையும் கெடும்
மந்திரிக்கும் உண்டு மதி கேடு
மந்திரி வீட்டிலே முந்திரிப்பூ பூத்தது; வாய்க் கெட்டியது கைக்கு எட்டவில்லை
மப்புக்காரன் தப்புத் தட்டுவானா?
மயிர் உள்ள சீமாட்டி எப்படி முடிந்தால் என்ன?
மயிர் ஊடாடா நட்பும் பொருள் ஊடாடக் கெடும்.
மயிர் சிக்கினால் உயிரை விடுமாம் கவுரிமான்.
மயிலே மயிலே இறகு கொடு என்றால் கொடுக்குமா?
மயிற் கண்ணிக்கு மசக்கை, மாப்பிள்ளைக்கு அவஸ்தை.
மரத்தின் பழம் மரத்தண்டை விழும்.

மரத்தை இலை காக்கும், மானத்தைப் பணம் காக்கும்.

மரம் ஏறிக் கைவிட்டவனும் கடன் வாங்கிக் கடன் கொடுத்தவனும் கெட்டுப் போவான்.

மரம் வெட்டுகிறவர்க்கு நிழலையும், மண்தோண்டுகிறவனுக்கு இடமும் கொடுக்கும்.

மரம் வைத்தவனுக்கு தண்ணீர் ஊற்றத் தெரியாதா?

மரியாதை தப்பினால் மாலவாடு.

மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்.

மருந்தேயாயினும் விருந்தோடு உண்.

மருவில் உண்ட சாப்பாட்டை லங்கணத்தில் நினைத்துக் கொண்டது போல.

மரைக்காயருக்கும் உண்டு மாட்டுப்புத்தி.

மலடியைப் பிள்ளை பெறச் சொன்னால் பெறுவாளா?

மலரில் மணமும் எள்ளில் எண்ணெயும் உடலில் உயிரும் கலந்தது போல.

மலரைக் கசக்கி மணம் முகரலாமா?

மலர்த்தேனை வண்டன்றி மண்டூகம் குடிக்குமோ?

மலிந்த சரக்கு சந்தைக்கு வரும்!

மலையத்தனை சாமிக்கு தினையத்தனை புஷ்பம் சாத்தினாலும் போதும்.

மலையுச்சியில் கல்லேற்றம் அரிது.

மலைக்கும் மடுவுக்கும் போல.

மலைத்தேன் முடவனுக்குக் கிட்டுமா?

மலை நெல்லிக் காய்க்கும் கடல் உப்புக்கும் உறவு செய்தது யார்?

மலைபோல வந்து பனி போல நீங்கிற்று.

மலை இலக்கானால் குருடனும் அடிபெய்வான்.

மலையில் விளைந்த மூலிகையானாலும் உரலில்தான் மசிய வேண்டும்.

மலையின் உயரம் மலைக்குத் தெரியுமா?

மலையே விழுந்தால் மண்ணாங் கட்டியா தாங்கப் போகிறது?

மலையைத் துளைக்கச் சிற்றுளி போதாதா?

மலையை என் தலைமேல் தூக்கி வைத்தால்; நான் எடுத்துக் கொண்டு போகிறேன்.

மலையைக் கெல்லி எலியைப் பிடிக்கிறதா?

மலையைப் பார்த்து நாய் குலைத்தால், மலைக்குக் கேடா நாய்க்குக் கேடா?

மல்லாக்காகப் படுத்துக் கொண்டு, மாரில் உமிழ்ந்து கொண்டது போல.

மல்லாந்த தோஷம்; வயிற்றிலடைத்தது.

மல்லாந்து படுத்துக் கொண்டா அல்லாவைத் தொழுவது?

மழுங்குணி மாங்கொட்டை.

மழைக்கால் இருட்டானாலும் மந்திக் கொம்பு இழந்து பாயுமா?

மழைக்குத் தண்ணீர் மொண்டு வார்ப்பவர் யார்?

மழை பெய்வதும் பிள்ளை பெறுவதும் எப்போ என்று மகாதேவருக்குத் தெரியாது.

மழை முகங்காணாத பயிரும், தாய்முகங் காணாத சேயும்.

மழை விட்டும் துவானம் விடவில்லை.

மழை விழுந்தால் தாங்கலாம்; மானம் விழுந்தால் தாங்கலாமா?

மறந்த உடைமை மக்களுக்கு ஆகாது.

மறுசாதம் போட்டுக் கொள்ளாதவன்; மாட்டுப் பிறப்பு.

மறு மங்கையருக்கும் மறுமன்னர்க்கும் மார்பும் முதுகும் கொடாமலிரு.

மறைத்துக் கட்ட மாற்றுப் புடவையில்லை.

மனக்கவலை பலக் குறைவு.

மனச்சாட்சியைவிட மறு சாட்சியே வேண்டாம்.

மனதிலே ஒன்றும் வாக்கிலே ஒன்றும்.

மனதிலே பகையும் உதட்டிலே உறவுமா?

மனதில் இருக்கும் இரகசியம் மதிகேடனுக்கு வாயிலே.

மனதிற்கு மனதே சாட்சி; மற்றதற்குத் தெய்வமே சாட்சி.

மனது அறியாத பொய் உண்டா?

மனதே மனதுக்கு பந்து; மனதே மனதுக்குச் சத்துரு.

மனதைப்போலிருக்கும் மாங்கலியம்.

மனத்துயர் அற்றோன் தினச் செபம் உற்றோன்.

மனப்பால் குடித்து மாண்டவர் அனந்தம்.

மனப்பேயே ஒழிய மற்றவை பேயல்ல.

மனப்பொருத்தம் இருந்தால், மற்ற பொருத்தம் பார்க்க வேணுமா?

மாரி மரண்டிக்கு மருந்துண்டா?

மனமிருந்தால் மலையும் சாயும்.

மனம் இருந்தும்; சற்று வகையற்றுப் போவான்.

மனம் கொண்டது மாளிகை (கொள்கை)

மனம் உண்டானால் இடம் உண்டு.

மனம் கருமாறினால் மாற்றானுக்கு வலிமை.

மனம்போல வாழ்வு.

மனம்போன போக்குக்கு வழியில்லை.

மனிதர் காணும்போது மௌனம், மனிதர்காணாதபோது உருத்திராட்சப் பூனை.

மனிதன் கையிலே மனிதன் அகப்பட்டால் குரங்கு.

மனிதன் மறப்பான், குறைபடுவான். மாறுவான், போவான்.

மனிதன் தலையை மான் தலையாக்குகிறான், மான் தலையை மனிதன் தலையாக்குகிறான்.

மனிதன், ஆரம்பமாவது பெண்ணாலே, அடங்கி ஒடுங்குவதும் பெண்ணாலே.

மனைக்கொடியில்லா மனைபாழ்.

மனையாளுக்கு உற்றது ஒன்றும் சொல்லவேண்டாம்; மற்றவனை ஒருநாளும் நம்ப வேண்டாம்.

மனைவியில்லாத புருஷன் அரை மனிதன்.

மனைவி இறந்தால் மணம்; மகன் இறந்தால் பிணம்.

மனோ வியாதிக்கு மருந்துண்டா?

மன்மதக் கரட்டோணன்.

மன்மதன் அவனைப் பம்பரம்போல் ஆட்டுகிறான்.

மன்னர்க்கழகு செங்கோல் முறைமை.

மன்னவர்கள் ஆண்டதெல்லாம் மந்திரிகள் ஆண்மை.

மன்னவர்கள் செத்தார்கள், மந்திரிகள் செத்தார்கள் முன் இருந்தோரெல்லாம் முடிந்தார்கள்.

மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி.

மன்னுயிரையும் தன்னுயிர்போல் எண்ணவேண்டும்.

# மா

மா இருக்கிற மணத்தைப்போல் அல்லவோ கூழின் மணம் இருக்கும்.

மாவுண்டானால் பணியாரம் சுடலாம்.

மா, கனப்பட்டதெல்லாம் ஒரு திரணம், மாட்டுக்காரப் பையனுக்குச் சரணம்.

மாடம் இடிந்தால் கூடம்.

மாடு கிழமானாலும் பாலின் சுவை போகுமா?

மாடு கெட்டால் தேடலாம், மனிதர் கெட்டால் தேடலாமா?

மாடு திருப்பினவன் அர்ச்சுனன்.

மாடு தின்கிற மாலவாடு ஆடு தின்கிறது அரிதா?

மாடு தின்னிக்கு வாக்குச் சுத்தம் உண்டா?

மாடுபிடிச் சண்டைக்கு வலிய வராதே.

மாடு மறுத்தாலும் கறக்கும்; வாலிலே கயிற்றைக் கட்டினால்!

மாடு முக்கிவர; வீடு நக்கி வரும்.

மாடு மேய்க்கிற தம்பிக்கு மண்டலமிட்ட பெண்சாதி!

மாட்டின் வாழ்க்கை மூட்டையிலே.

மாட்டுக்குப் பெயர் பெரிய கடா.

மாட்டைப் புல் தலத்திலும் மனுஷனை சோறு உள்ள தலத்திலும் இருக்க ஒட்டாது.

மாட்டை மேய்த்தானும் கோலைப் போட்டானும்.

மாணிக்கம் காலுக்கு மாற்றுக்கால் இருக்கிறதா!

மாணிக்கம் விற்ற ஊரில் மண்கூடை சுமக்கலாகாது.

மாதம் காதவழி மானைப் பறப்பான்.

மாதா ஊட்டாத அன்னம் மாங்காய் ஊட்டும்.

மாதா செய்தது மக்களுக்கு.

மாதா மனம் எரிய; வாழாய் ஒருநாளும்.

மாதாவுக்குச் சுகமிருந்தால் கர்ப்பத்துக்கும் சுகம் உண்டு.

மாத்திரை தப்பி மிதித்தால் கோத்திரம் கூறப்படும்.

மாந்தர் குடி வாழ்க்கை மண்ணின் கலம்போல.

மாபழுத்தால் கிளிக்காகும்; வேம்பு பழுத்தால் காக்கைக்காகும்,

மாப்பிருக்கிற மட்டும் மடியில் வைத்தேன். தோப்பான பிறகு மடியில் வைக்கலாமா?

மாப்பிள்ளை சொந்தம் துப்பட்டி இரவல்.

மாப்பிள்ளை தோப்பிள்ளை மாங்காய்ச்சோற்றுக்குக் கதி கெட்ட பிள்ளை.

மாப்பிள்ளைத் தோழனுக்குப் பெண்டுறுதி.

மாவு புளிக்கிறதெல்லாம் பணியாரத்துக்கு நலம்.

மாட்பொன் இருக்க மக்களைப் பட்டினி போடுவானேன்?

மா, மறந்த கூழுக்கு உப்பு ஒரு கேடா?

மாமி ஒட்டிறாலும் பானை ஒட்டாது.

மாமி மெச்சிய மருமகளில்லை.

மாமியாருக்குக் கண்ணும் மண்டையும் பிதுங்கிப் போகிறது.

மாமியாருக்குச் சுவாமியார் இவள்.

மாமியாரும் சாகாளோ என் மனக் கவலையும் தீராதோ?

மாமியாரைக் கண்டு மருமகன் (மருமகள்) நாணுகிறது போல.

மாமியாரோடு போகாத மாபாதகன்!

மாமியார் உடை குலைந்தால் (துணி அவிழ்ந்தால்) வாயாலும் சொல்லக்கூடாது, கையாலும் காட்டக்கூடாது.

மாமியார் உடைத்தால் மண் கலம்? (மண்பானை) மருமகள் உடைத்தால் பொன் கலம் (பொன்பானை)

மாமியார் கை வெல்லத்தைப் பார்க்கிலும் மருமகள் கைத் தவிடு தேவலே.

மாமியார் செத்த ஆறும் மாதம், மருமகள் கண்ணில் தண்ணீர் வந்ததாம்.

மாமியார் செத்து, மருமகள் அழுகிறது போல.

மாமியார் தலையிலே கையும், வேலிப்புறத்திலே கண்ணும்,

மாமியார் தலையில் கையும் மாப்பிள்ளைமேல் சிந்தையும்.

மாமியார் மெச்சிய மருமகளில்லை, மருமகள் மெச்சிய மாமியார் இல்லை.

மாமியார் வீடு மகா சௌக்கியம்.

மாம்பழத்திலிருக்கும் வண்டே, மாமியாருக்கும் மருமகளுக்கும் சண்டை.

மாவாய்த் தின்றால் பணியாரம் இல்லை.

மாயக்காரன் பேயிற் கடையே

மாயத்திலே மாரீசனைப் போல.

மாயப்பெண்ணே சுந்தரி: மாவைப் போட்டுக் கிண்டடி.

மாரடித்த கூலி மடிமேலே.

மாரிக்காலத்தில் பதின்கல மோரும், கோடைக்காலத்திலே ஒரு படி நீரும் சரி.

மாரியல்லது காரியம் இல்லை.

மாரியாத்தாளை பெண்டு பிடிக்கிறவனுக்குப் பூசாரிப்பெண்டு எம்மாத்திரம்?

மாரைத் தட்டி மனதிலே வை.

மார்க்கண்டனைப்போல் தீர்க்காயுசாக இரு,

மானம் அழிந்த பின் மரியாதை என்ன?

மானம் அழிநதாலும் மதி கெட்டுப் போகுமா?

மானம் அழிந்து வாழ்வதினும் மரணம் அடைவது உத்தமம்.

மானம் பெரிதோ உயிர் பெரிதோ?

மானூர் கலவியில் மயங்கி யிருந்தாலும், தானே தருவேன்-சிவனவன் தன்பதம்.

மானுக்கு, ஒரு புள்ளி ஏறி என்ன? குறைந்து என்ன ?

மானுஷ்யம் இல்லாதவன் மனுஷப் பதர்.

மான் கூட்டத்தில் புலி புகுந்தது போல.

மாவுக்கும் ஆசை, கூழுக்கும் ஆசை.

மாவு மறந்த கூழுக்கு உப்பு ஒரு கேடா?

மாவேகம் மனோவேகமாகப் பேசுகிறான், ஒடுகிறான்.

மாவைத் தின்றால் அப்பம் இல்லை.

மாற்றானுக்கு இடங்கொடேல்.

மாற்றானை நம்பினாலும் மாதரை நம்ப வொண்ணாது.

மாற்றுக் குறைத்தான் தட்டான்; மாய்மாலம் கண்டான் செட்டி.

மானத்தின் மேலே கண்ணும், மாப்பிள்ளை மேலே சிந்தையும்.

மானத்தை வில்லாய் வளைப்பான்; மணலைக் கயிறாய்த் திரிப்பான்.

மார்பு சரிந்தால், வயிறு தாங்க வேண்டும்.

மார்பு மட்டும் சிநேகமானாலும் மடியிலே கை போடாதே.

மார்மேலும் தோள்மேலும் வளர்த்தான் அருமையாய்.

மாலைக் குளித்து மனையில் புகும், தன் மனையில் யாரையும் சேர்க்காது.

மாலைப் சுற்றிப் பிறந்த பிள்ளை மாமனுக்கு ஆகாது.

மாலையிட்ட பெண்சாதி காலனைப் போல் வந்தாள்.

மாவிலும் ஒட்டலாம், மாங்காயிலும் ஒட்டலாம்.

மாவு இடித்தால் மண்டிக் கொள்ளுகிறது; கூழ் கொதித்தால் கூடிக் கொள்கிறது.

# மி

மிகுதி ஆசை அதிக நஷ்டம்.

மிகுதி உள்ளவனுக்கும், வஞ்சனைக்காரனுக்கும் பகை; வேதக்காரனுக்கும் உலகத்திற்கும் பகை.

மிகைப்பச் சொல்லேல்.

மிஞ்சிய கருமம் அஞ்சச் செய்யும்.

மிஞ்சினது கண்டு மேற்கே போகல் ஆகாது.

மித இதயம் கொள், மீளாக் கதித் தொடர்.

மிடிமையிலும் படிமை நன்று.

மிடுக்கிலா சரக்கு; இருக்க விலைப்படும்;

மிதித்தாரைக் கடியாத பாம்பு உண்டா?

மிரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்.

மிருகங்களில் யானை பெரிது, அதனிலும் சிங்கம் வலிது.

மிருகம் முறை பார்க்குதா—வேசி முறை பார்க்க!

மிகைத்துளைப் பிள்ளையாருக்கு கடுகளவு நைவேத்தியம்.

முடியும் வகை யோசியாமல் முயற்சிக் கொள்ளாதே.

முடி வைத்த தலைக்குக் குழிச் சுற்றம் பார்க்கிறதா?

முட்ட நனைந்தவனுக்கு ஈருமில்லை, பேனுமில்லை (முக்காடு என்ன?).

முட்ட நனைந்தவனுக்கு ஈரமில்லை ; முழுதும் கெட்டவனுக்கு துக்கமில்லை.

முட்டரோடாடிய நட்பு கருங்காலிக்கட்டை ஊடாடியக்கால்.

முட்டற்ற நாரிக்கு இரட்டைப் பரியமா?

முட்டாளுக்கு இரண்டு ஆள்.

முட்டாளுக்கு என்ன சொன்னாலும்; கட்டோடே கேளான்.

முட்டாளுக்குக் கோபம் மூக்கின் மேலே.

முட்டி ஊட்டின கன்று முதற் கன்று.

முட்டிக்காற் கழுதை பட்டவர்த்தனப் பிரியமா?

முட்டுக்கு முட்டல்ல மூடக் கதவுமல்ல, சன்னிதி வாசலுக்குச் சாத்தக் கதவுமல்ல.

முட்டுப்பட்டு ஜெயம் வருமானால், குட்டுப்பட்டாற் குறை வென்ன?

முட்டுமுன் குனிய வேண்டும்.

முட்டைக் குஞ்சைப் பிட்டு வளர்த்தது.

முட்டையிடுகிற கோழிக்குக் எரிச்சலும் உண்டு.

முட்டையிலே கூவி முளையிலே கருகிறது.

முண்டைக்கண்ணிப்பிள்ளை. இரண்டு கண்ணும் நொள்ளை.

முண்டச்சி பெற்றது மூன்றும் அப்படியே.

முண்டையைப் பிடித்த கண்ட மாலை, முருங்கையையும் பிடித்தது.

முதலியார் டம்பம் (ஜம்பம்) விளக்கெண்ணெய்க்குக்கேடு.

முதலிலே கெட்டிக்காரன், முடிவிலே சோம்பேறி.

முதலுக்கு மோசமாக இருக்கும்போது, லாபத்துக்குச் சண்டை போடுவதா ?

முதலைக்கு இல்லை நீச்சும் நிலையும்.

முதலை தன் இடத்து மலையொத்த யானையையும் இழுத்துச் செல்லும்.

முதலை நரியின் காலைவிட்டுப் புங்கமரத்தின் வேரைப்பிடித்தது போல்.

முதலையும் மூர்க்கனும் கொண்டது விடா.

முதலை வைத்துப் பெருக்காத வணிகரைப்போல.

முதல் இல்லார்க்கு ஊதியம் இல்லை.

முதல் எடுக்கும்போதே தப்பட்டைக்காரன் செத்தான்,

முதற் கோணல் முற்றும் கோணல்.

முதற்பிள்ளை மூத்திரத்துக்கு அழும்போது, இரண்டாவது பிள்ளை பாலுக்கு அழுகிறதாம்.

முதுகிலே புண் இருந்தால் குனியப் பயம்.

முதுகில் அடித்தால் ஆறும். வயிற்றில் அடித்தால் ஆறுமா?

முதுகைச் சொரியச் சொன்னால் சிற்றிடையைச் சொறிவதேனோ?

முத்தளந்த கையால் முழுப்பயறு அளக்கக் காலம் வந்தது.

முத்தால் நத்தை பெருமைப்படும், மூடர் எத்தாலும் பெருமைப்படார்.

முத்திலும் சொத்தை உண்டு, பவழத்திலும் பழுது உண்டு.

முத்து அளக்கிறவளும் பெண்பிள்ளைதான், முளைப்பயிறு அளக்கிறவளும் பெண்பிள்ளைதான்.

முத்து முத்தாய் இருக்கிறது.

மூத்தைத் தெளித்தாலும் கலியாணந்தான்; மோரைத் தெளித்தாலும் கலியாணந்தான்.

முந்தானை இருக்கிறது: நாலுவீடு இருக்கிறது,

முந்திவந்த செவியை பிந்திவந்த கொம்பு மறைத்ததாம்.

முந்நாழி கறக்கிற பசுவானாலும் முன் இறப்பைப் பிடுங்குகிற பசு ஆகாது.

முப்பணிபிட்ட பெண்ணுக்குக் கொப்பு ஒன்றுதான் குறை.

முப்பதிலே மூர்க்கம் நாற்பதிலே நாகரிகம்.

முப்பதிலே வாழ்ந்தவன் மூடன், முன்னும் பின்னும் தெரியாதவன் குருடன்.

முப்பதுநாளே போ, பூவராகனே வா.

முப்பது பணம் கொடுத்தாலும் மூளிப்பட்டம் போகாது.

முப்பது வருஷம் வாழ்ந்தவனும் இல்லை, முப்பது வருஷம் கெட்டவனும் இல்லை.

முப்பேன் பிடிப்பது மூதேவி வாசத்துக்கு அடையாளம்.

முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார்.

முரடனுக்கு மூங்கிற்றடி.

முரட்டுப் பெண்ணும் சுருட்டுப்பாயும்.

முருங்கைக்காய் என்றதும் முறிந்ததாம் தாம்பத்தியம்.

முலைகொடுத்து (ஊட்டி) வளர்த்தவள் மூதேவி, முன்றானை போட்டவள் சீதேவி.

முலைக்குத்து சவலைப் பிள்ளைக்குத் தெரியுமா ?

முழிக்கிறதைப்பார் கிழக்குரங்கைப் போல.

முழுகி முப்பது நாளாச்சு, இறங்கி உப்பு அள்ளக்கூட இல்லை என்கிறாள்.

முழுக்கட்டி பெயர்க்கின்ற பன்றிக்குக் கொழுக்கட்டி விட்டது போல.

முழுச்சோம்பேறி முள்ளுள்ள வேலி.

முழுப் பங்குக்கரனுக்கு முந்திரிப் பங்குக்காரன் முண்டன்.

முழுப் பூசணிக்காயை சோற்றோடு மறைப்பதைப்போல.

முளைத்த மயிர் மூன்று, அதிலும் இரண்டு புழுவெட்டு.

முளையில் கிள்ளாததை முற்றினால் கோடாலி கொண்டு வெட்ட வேண்டும்.

முள்ளுக்குக் கூர்மையும், துளசிக்கு வாசனையையும் இயற்கை.

முள்ளுமேல் சீலையைப்போட்டால் மெள்ள மெள்ள வாங்க வேண்டும்.

முறத்தடிபட்டாலும் முகத்தடி படலாகாது.

முறையோ என்கிறவன் கழுத்தில் விங்கம் கட்டினால் மறை விலே போய் அறுத்துத்தான் போடுவான்.

முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.

முற்றின மரத்திலேதான் வயிரம் (வைரம்) இருக்கும்.

முன் அளந்த நாழி பின் அளக்கும்.

முன்கை நீண்டால் முழங்கை நீளும்.

முன்கோபம் பின் இரக்கம்.

முன்நாள் செய்த தவத்தாலே மூன்று மயிர் தந்தோம்; இந்நாள் செய்த தவத்தாலே இருந்த மயிர் இழந்தாயே.

முன்னேரம் கப்பற்காரன் பின்நேரம் பிச்சைக்காரன்.

முன்வைத்த காலை பின் வைக்கமாட்டேன்.

முன்னாலே போனால் கடிக்கிறது, பின்னாலே வந்தால் உதைக்கிறது.

முன்றாலே பார்த்தால் சேவகன் குதிரை, பின்றாலே பார்த்தால் செட்டியார் குதிரை.

முன்னே ஆட்டைப்பிடி, பின்னே மாட்டைப் பிடி.

முன்னே ஒரு குறுணி, பின்னே ஒரு முக்குறுணி.

முன்னே பிறந்த காதைப் பார்க்கிலும்; பின்னே பிறந்த கொம்பு பலம்.

முன்னே போனால் சிசுஹத்தி, பின்னே போனால் பிரமஹத்தி.

முன்னைக்குப்போர் முகட்டைக் குழப்பு.

# மூ

மூக்கரையானுக்கு வாழ்க்கைப்பட்டால் முன்னும் போகவிடான்; பின்னும் போகவிடான்.

மூக்கறையன் கண்ணாடியைப் பகைத்ததுபோல.

மூக்கு அறுந்த மூளி காது அறுந்த மூளியைப் பார்த்தானாம்,

மூக்கிருக்கிற மட்டும் சளி உண்டு.

மூக்குத் தூள் போடாத முண்டத்துக்கு, மூப்பது பணத்தில் வெள்ளி டப்பி.

மூக்குப் புண் ஆறியல்லோ தாசரி ஆகவேண்டும்.

மூக்குமயிரைப் பிடுங்கியதுபோன்ற வருத்தம் வரும்.

மூக்கைக் கிள்ளி முகரக் காட்டியதுபோல.

மூக்கைப் பிடித்தால் அண்ணாந்து பார்க்கத் தெரியாது.

மூக்கைப் பிடித்தால் ஜீவன் போகிறது.

மூக்கைப் பிடித்தால் வாயை ஆவென்னத் தெரியாது.

மூங்கில் இலைமேலே தூங்கும் பனி நீரே.

மூங்கிற் பாயும் முறட்டுப் பெண்டாட்டியும்.

மூஞ்சையப்பன் முகத்தைப் பார்.

மூடரோடு ஆடிய நட்பு, காட்டு வழியில் கட்டை ஊடாடிய கால்,

மூடர் கூட்டுறவு முழுவதும் அபாயம்.
மூடர் முன்பு மூர்க்கம் பேசாதே.
மூடனுடைய பங்கு தரித்திரமும் இகழ்ச்சியும்.
மூடன் சண்டை மூட்டுப் பிரிக்கும்? மோர்க்கடன் வீட்டைத் தேடும்.
மூடி வைத்த புண் ஆருது
மூடின உடமை மூன்று லோகம் பெறும்; மூடாத உடைமை முக்காற் காசு பெருது.
மூடி முக்காட்டுக்குள்ளே போகிறவள்தான் ஓடி ஓடி மாப்பிள்ளை கொள்வாள்.
மூதேவி, மூதேவி, முகங்கழுவா மூதேவி.
மூத்தது மோழை; இளையது காளை.
மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்.
மூப்பிலும் தர்மம் செய்ய முயற்சி செய்.
மூப்புக்குச் சோறும் முறத்துக்குச் சாணியும்.
மூப்பு ஏன் பிடிப்பது, மூதேவி வாசத்துக்கு அடையாளம்.
மூர்க்கமுள்ள ராஜாவும் மூட மந்திரியும் அழிவார்கள்.
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்.
மூலிகை அறுத்ததால், மூன்றுலகு ஆளலாம்'
மூலை வீட்டிலே முட்டை இடுகிருன்.
மூளிச் சட்டியானாலும் கொழுக்கட்டை வேகவேண்டும்.
மூன்று பேர் வழிக்குத் துணை; இரண்டு பேர் பிணையல் மாடு; ஒருவன் போனால் பரதேசி.
மூன்று பொருளையும் தேடு; முதலில் வயதில் ஊன்றுகோல் ஆகும்.
மூன்று பல்லும் போனவருக்கு முறுக்குக் கடையில் என்ன வேலை ?
மூன்று முடிச்சு கழுத்தில் விழட்டும்; முப்பது இலைகள் குப்பையில் விழட்டும்.
மூன்று முழமும் ஒரு சுற்று; முப்பது முழமும் ஒரு சுற்று.
மூன்றே முக்கால் நாழிகை முத்து மழை பெய்தது; வாளி எடுக்குமுன்னே மண்மாரியாய் போயிற்று.

# மெ

மெச்சிக் கொள்வதற்கு எச்சிலை எடுப்பது.

மெத்தப் படித்தவருக்குச் சோறு வெல்லம்.

மெத்தப் படித்தவன் பைத்தியக்காரன்.

மெத்தப் பரிவாம் உள்ளே எரிவாம்.

மெத்தையில் படுத்தல் நித்திரைக் கழகு.

மெத்தை நேர்த்தி; தலையணை பீற்றல்.

மெய்யென்றிருந்தேன்; விழித்தேன் கனவாக்க.

மெய் தவிக்கும்; பொய் புலம்பும்.

மெய்க்கும் பொய்க்கும் விரற்கடை தூரம்.

மெய் சொல்லிக் கெட்டானுமில்லை; பொய் சொல்லி வாழ்ந்தவனும் இல்லை.

மெய் சொல்லி வாழாதான் பொய் சொல்லி வாழ்வானா?

மெய்ஞானம் உடையார்க்கு அஞ்ஞானமில்லை.

மெய்த் தொழில் என்றும் மேன்மை பயக்கும்.

மெய் மூன்றும் பிறை; பொய் பூரணச் சந்திரன்.

மெய்மை சாற்ற வையம் ஏற்றும்.

மெய்யது நன்றியிடும்.

மெய்யுடையொருவன் சொல்லமாட்டாமையால் பொய் போலும்மே.

மெலிந்தவனுக்கு மெத்த பலன்; மேனிமினிக்கிட்டவனுக்கு மெத்த கசம்.

மெல்லவும் மாட்டாமல் சொல்லவும் மாட்டாமல் விழிக்கிறான்.

மெல்லியாள் தோள் சேர்.

மெழுகினை வீட்டிலே நாய் புகுந்தது போல.

மென்னை இருந்துதான் தள்ளவேண்டும்.

# மே

மேடும் சரி, பள்ளமும் சரியா?

மேட்டில் ஏறினால் முத்தாய்ச்சி; பள்ளத்தில் இறங்கினால் அத்தாய்ச்சி?

மேட்டுக்காகப் பயமாய்; விதி வழியில் திகிலாம்.

மேய்கிற மாட்டுக்குக் கொம்பிலே புல்லைக் கட்டவேண்டுமா?

மேய்கிற கழுதையை கூவுகிற கழுதை கெடுத்ததாம்.

மேய்த்த காளைக்குப் பாலைப் பீய்ச்சிக் குடித்தது லாபம்.

மேய்த்தால் மதனியை மேய்ப்பேன்; இல்லாவிட்டால் பரதேசம் போவேன்.

மேருவை அடைந்த காகமும் அமிர்தம் உண்ணும்.

மேலைக்கு உழுவார் கூலிக்கு அழுவார்.

மேலைக்கு வாழ்க்கைப்படுகிறேன், கழுத்தே சும்மா இரு என்பது போல.

மேழிச் செல்வம் கோழைப் படாது.

மேனி எறும்பே, ஞானி நினைப்பு.

மேனியெல்லாம் சுட்டாலும் விபசாரம் செய்கிறவள் விடாள்.

மேன்மக்கள் சொற்கேள்.

# மை

மை கரையாமல் அழுபவள் சமர்த்து.

மைத்துனன் உண்டானால் மலை ஏறிப் பிழைக்கலாம்.

மைமை சுந்தரி கதவை ஒஞ்சரி,

மைகங்கி மைமங்கி பூ எங்கே வைத்தாய், வாடாது வதங்காது அடுப்பிலே வைத்தேன்.

மைவிழியார் மனை அகல்.

மைவிழியாள் தன்னை கைவிட்டொழுகு.

# மொ

மொட்டைத் தலைக்குச் சந்தனம் வந்தால்; உள்ள மயிரைக் கொண்டுதான் சிலுப்பவேண்டும்.

மொட்டைச் சாத்தனுக்குத் தகுந்த மூக்கறையன்.

மொட்டைத் தலைக்கு ஒரு பொட்டுக் கூடை; மோழைத் தலைக்கு ஒரு தாற்றுக்கூடை.

மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போட்டது போல.

மொட்டைத் தலையன் போருக்கு அஞ்சான்.

மொட்டைத் தலையன் முழுமோசக்காரன்.

மொட்டைத் தலையில் பட்டாளங்கட்டி ஆளவந்தானோ?

மொட்டைத் தலையில் பேய் வருமா?

மொட்டைத் தலையில் பேன் சேருமா?

மொண்டு ஆளுகிற வீட்டுக்குக் கொண்டு ஆண்டா நிறையும்?

மொந்தைச் சோற்றுக்கு மேளம் அடிக்கிறான்.

மொந்தைத் தண்ணீரில் வீடு வெந்துபோனால் மிடாத் தண்ணீருக்கு எப்படி?

மொழி தப்பியவன் வழிதப்பியவன்.

மொழிவழி அறமொழி.

மொழிவது மறுக்கின்; அழிவது தருமம்.

# மோ

மோகம் முப்பது நாள்; ஆசை அறுபது நாள்.

மோஹனக் கல்லானாலும் பசு ஏறினால் உடையாதா ?

மோஹத்துக்கு அவன் பார்த்து இட்டதே பிக்ஷை.

மோச நாசம் கம்பளி வேஷம்.

மோசம் பாய் போட்டுத் தூங்குகிறது.

மோந்தாற்போல முகத்தைக் கடிக்கிறது.

மோருக்குப் போகிறவளுக்கு முட்டி பிறகாலேயோ ?

மோருக்குப் போய் மொந்தையை ஒளிப்பானேன் ?

மோரைத் தெளித்தாலும் கலியாணந்தான், மூத்திரத்தைத் தெளித்தாலும் கலியாணந்தான்.

மோரோ என்பவன் கழுத்திலே லிங்கம் கட்டியது.

மோர் சுடுகிறது என்று ஊதிக் குடிப்பதுபோல.

மோனம் என்பது ஞான வரம்பு.

# மௌ

மௌனம் மலையைச் சாதிக்கும்.

மௌனம் கலகன் ஆஸ்தி.

மௌனி குடியைக் கெடுப்பாள்.

# ய

யதாஸ்தானம் பிரதிஷ்டாபயாமி.
யதா தேவதா சுதா தாஸ்ய.
யதா ராஜா ததா ப்ரஜா.
யதார்த்தவாதி வெகு ஜன விரோதி.

# யா

யானை கட்டக் கயிறு தானே எடுத்துக் கொடுக்கும்.
யானை கறுத்தால் ஆயிரம் பொன்பெறும்; பூனை கறுத்தால்...?
யானைக்கு ஆறு அடி.
யானை தன் தலைமேலே தானே மண்ணை அள்ளிப் போட்டுக் கொள்வதுபோல.
யானை தின்ற விளாங்கனி போல.
யானை தொட்டாலும் மரணம் வரும்.
யானை மிதிக்கப் பிழைப்பார்களா ?
யானை முன்னே முயல் முக்கியதுபோல.
யானைமேல் போகிறவனைச் சுண்ணாம்பு கேட்பதுபோல.
யானையை ஆயிரம் பொன்னுக்கு வாங்கி ; இரும்பு அங்குசத்துக்கு ஏமாந்து நிற்பானேன் ?
யானை வந்தால் ஏறுவேன்; சப்பாணி கண்டால் நகருவேன்.
யானை வாய்க் கரும்புபோல.
யானைவாய்க் கரும்பும், பாம்பின் வாய்த் தேரையும், யமன் கைக்கொண்ட உயிரும் திரும்ப வராது.
யானை விற்றால் யானை லாபம் ; பானை விற்றால் பானை லாபம்.

# யு

யுக முடிய மழை பெய்தாலும் கிளிஞ்சல் ஓடு கரையுமா ?
யுகத்திற்கு யுகம் வித்தியாசம் உண்டு.

# யோ

யோகக்காரன் பல்லக்கு ஏறுவான்.

# ர

ரண்டாட்டில் ஊட்டிய குட்டியாய்த் தீர்ந்தது.
ரட்சையுள்ள இடத்தில் சிட்சையிருக்கும்.

# ரா

ராகு திசையில் வாழ்ந்தவனுமில்லை; ராஜா திசையில் கெட்டவனுமில்லை.
ராங்கி மிஞ்சி ரூம் தேடுது; ஆக்கிப்போட ஆள் தேடுது.
ராஜன் ஆனாலும் தன் தாய்க்கு மகனே.
ராஜன் எவ்வழி; அவ்வழி குடிகள்.

ராஜன் பெரிதோ; போக்கிரி பெரிதோ?
ராஜன் மகளானாலும்; கொண்டவனுக்கு பெண்சாதி.
ராஜாவும் பெண்ணும் கொடியும் கிட்ட இருக்கிறதைத் தழுவிக் கொள்ளும்.
ராட்சதனுக்கு ஒரு பிரோட்சகனும் உண்டு.
ராப்பிறந்த பிள்ளையும் ஆகாது; பகல் பிறந்த பிள்ளையும் ஆகாது
ராமனைப்போல ராஜனிருந்தால் அனுமானைப்போலச் சேவகன் இருப்பான்.

# ரி

ரிஷிப்பிண்டம் ராத்தாங்காது.

# ரு

ருசி கண்ட பூனை உறியைத் தாவும்.
ருத்திராக்ஷப் பூனை உபதேசம் பண்ணியதுபோல.
ரூபாய் என்றால் வயிறு நிறையுமா?
ரூபாய் அணுவில் இருக்கிறது உலகம்.

# ல

லங்கணம் பரம ஔஷதம்.
லங்கினி இலங்கைக்குக் காவல்.

# லோ

லோபிக்கு இரட்டைச் செலவு.

# வ

வகை மடிப்பிலே மாட்டிக் கொண்டது.

வக்கணைக்காரன் புளுகு வாசற்படி மட்டும்.

வாக்குசாக்காய் மாட்டிக் கொள்கிறது.

வங்கம் இருக்கால் மகாராஜனுகலாம்.

வங்கம் குத்தத் தங்கம் தேயுமா?

வங்கம் நின்றால் தங்கம்; வங்கம் கெட்டால் பங்கம்.

வங்கரை கொங்கரையாய் மாட்டிக் கொள்கிறது.

வங்கிஷம் வார்த்தைக்கு அஞ்சும்; புழுக்கை உணவுக்கு அஞ்சும்.

வங்கை வைத்தால் தன் குடிக்கு அனர்த்தம்.

வசனம் பண்ண உபாயம் காரணம்.

வச்சிரம் அளந்த கையால் வைக்கோல் துரும்பு எடுக்கலாயிற்று

வஞ்சகருக்கு என்ன நேசங்காட்டினாலும் நெஞ்சில் நேசங் கொள்ளார்.

வஞ்சகருக்குப் பால் ஊட்டினால் நஞ்சாய் விடும்.

வஞ்சனை நெஞ்சடைக்க.

வஞ்சித்து நெடுங்காலம் வாழ்வதைவிட மரணமடைவதே நலம்.

வடகாற்று அடிக்க; வந்தது மழை.

வடகோடு உயர்ந்தென்ன, தென்கோடு தாழ்ந்தென்ன வளர் பிறைக்கு?

வடக்கத்தியானையும் வயிற்று வலியையும் நம்பலாகாது.

வடக்கத்தியானை அடித்தால் தெற்கத்தியானுக்குப் புத்தி வரும்.

வடக்குப் பார்த்த மச்சுவீட்டைக் காட்டிலும் தெற்கு பார்த்த குச்சு வீடு நல்லது.

வடக்கே கறுத்தால் மழை பெய்யும்.

வடக்கே போன வாலியைக் காணோம்.

வடலையை வெட்டி ஆள்; எருமையைக் கட்டி ஆள்.

வடவாக்கினியைக்கூடக் கடைவாயில் அடைக்கிற பிள்ளைக்கு வாழைப்பழம் தின்கிறது வருத்தமா?

வடித்த கஞ்சியை வார்க்காத சிற்றப்பன், வழித்துக் கொண்டாலும் பணமிட.

வடித்தால் காணுமா பொங்கினால் காணுமா?

வடிவிலே மன்மதன்போல.

வடிவில் எமன்; மதகாட்டு ஒணான்.

வடுகச்சியம்மா வால் அம்மா, வாலைப் பிடித்துக் கொண்டு தொங்கம்மா.

வடுகத்துரட்டு மகாவில்லங்கம்.

வடுகனும் தமிழனும் கூட்டுப் பயிரிட்ட கதை வடுகன் தமிழறியான், வைக்கோலை 'கசு' என்பான்.

வடையைத் தின்னச் சொன்னார்களா? துளையை எண்ணச் சொன்னார்களா?

வட்டம் சுற்றியும் வழிக்கு வரவேண்டும்.

வட்டி ஆசை முதலுக்கே கேடு.

வட்டிக்கு வட்டி எதிர் வட்டியா?

வட்டியும் முதலும் கண்டால் செட்டியார் சிரிப்பார்.

வட்டுவத்திலே சொட்டு விழுந்தால் பாக்குவெட்டிக்கு வேறே கரண்டகத்துக்கு வேறேயோ?

வணங்கிய புல் பிழைக்கும்.

வணங்கின முள் தைக்கும்.

வணிகர்க்கழகு வாணிபம் செய்தல்.

வண்டப் பயலுக்கேற்ற சண்டப் பெண்சாதி

வண்டியில் ஓடம் ஏறும்; ஓடமும் வண்டியில் ஏறும்.

வண்டியின் பாரம் பூமியிலே.

வண்டு ஏறாத மரமில்லை.

வண்டு தூரத்திலேயே வாசனை அறியும்.

வண்டோடு கொண்ட வஸ்துவுக்கு மலையவ்வளவு சுத்தி.

வண்ணக் குதிரை மண்ணைத் தின்கையில் தட்டுவாணிக் குதிரை கொள்ளுக்கு அழுகிறதாம்.

வண்ணத்துக்குக் கிண்ணம் போடுகிறான்.

வண்ணானிடத்தில் துணியைப் போட்டு கொக்கின் பின்னால் அலைவது போல.

வண்ணானுக்கு உழைத்த கழுதையும் வாணியனுக்குழைத்த காளையும் சரி.

வண்ணானுக்கு நோய் வந்தால் கல்லோடே,

வண்ணானுக்கும் நிர்வாணிக்கும் உறவென்ன?

வண்ணானுக்கு வண்ணாத்திமேல் ஆசை; வண்ணாத்திக்குக் கழுதைமேல் ஆசை.

வண்ணான் துறைக்கல்லிலே வந்தபேரெல்லாம் தோய்க்கலாம்.

வதுவை செய்து வாழ்.

வந்த அளவிலே சிறுக்கி பந்தடித்தாள்; வரவர சிறுக்கி சோர்ந்துபோனாள்.

வந்த காசுக்கு வட்டமில்லை.

வந்த சண்டையை விடுவதும் இல்லை; வலுச் சண்டைக்குப் போவதுமில்லை.

வந்தது கப்பல்; மலர்ந்தது தொப்பை.

வந்தது சண்டை; இறக்கடி கூடையை.

வந்ததெல்லாம் கொள்ளும் மகராஜன் கப்பல்.

வந்ததை வரப்படுத்தடா வலக்காட்டு ராமா.

வந்தவர் எல்லாம் சந்தையில் குடியா?

வந்தவினை போகாது; வராத வினை தீராது.

வந்தவெள்ளம் இருந்த வெள்ளத்தைக் கொண்டுபோனது போல.

வந்தாலுஞ்சரி; போனாலுஞ் சரி.

வம்பான வார்த்தை மனதுக்கு அருவெறுப்பு.

வம்பு துரைத்தனத்தாரைக் கும்பிடத் தகுமோ?

வம்பும் தும்பும் வந்து விளைகிறது.
வயதுக்குத் தக்க புத்தி; வல்லமைக்குத் தகுந்த சலுகை.
வயதுக்கோ நரைத்தது; மயிருக்கோ நரைத்தது.
வைத்தியன் கையைப் பார்த்து, வாக்கிட்டதுபோல.
வைத்தியன் தலைமாட்டில் இருந்து அழுதது போல.
வைராக்கியத்துக்கு அம்பட்டன் கத்தியை விழுங்குகிறதா?
வயிறாரப் போஜனமும் அரையாறப் புடவையும் வேண்டும்
வயிறு நிரம்பினால் பானை மூடான்.
வயிற்றிலே பல்லுடையார் வஞ்சகர்கள்.
வயிற்றிலே பாலை வார்த்தாற்போல.
வயிற்றில் அடித்தால் எல்லாம் போகும்;
வயிற்றுக் குடலைக் காட்டினாலும் வாழை நார் என்கிறான்.
வயிற்றுப் பிள்ளையை நம்பி கைப்பிள்ளையை கைவிடுவாளா?
வயிற்றெறிச்சற் பெண்சாதிக்கு மாலைக்கண் அகமுடையான்.
வயிற்றைக் கட்டியவளுக்கு அகமுடையான்; வாயைக் கட்டினவளுக்குப் பிள்ளை.
வயிற்றைக் கீறிக் காண்பித்தாலும் அதையும் கண்கட்டி வித்தை என்பார்கள்.
வரச்சே தூண்டிற் கயிற்றின் வழியாக வந்தது; போகச்சே இரும்புச் சங்கிலியை அறுத்துக் கொண்டு போயிற்று.
வரப்பு உயர நீர் உயரும்; நீர் உயர நெல் உயரும்; நெல் உயரக் குடி உயரும்; குடி உயரக் கோன் உயரும்.
வரப்போ தலையணை; வாய்க்காலோ பஞ்சு மெத்தை;
வரவரத் தெரியும் மெய்யும் பொய்யும்.
வரவர மாமியார் கழுதைபோலானாள்
வரவுக்குத் தகுந்த செலவு; மாப்பிள்ளைக்குத் தகுந்த மஞ்சம்
வரவுக்குத் தக்கபடி செலவை வரையறு.
வரிசையும் இல்லை அரிசியும் இல்லை.
வரிவிழுந்த புலியைப் பார்த்து நரியும் கொள்ளிக் கட்டையை எடுத்துச் சுட்டுக் கொண்டதாம்.
வருகிறபோது எல்லாம் வரும்; வந்தபின் போகிறபோது எல்லாம் போகும்,
வருங்காலம் சொல்லும் கௌளி, வலியக் கழுநீர்ப் பானையில் விழுவது போல,

வருமுன் காப்பவன் சொன்னபுத்தியை வந்தபின் காப்போன் தள்ளியதுபோல.
வரும் விதி வந்தாள், படும் விதி படவேண்டும்.
வரும் வினை வழியில் நில்லாது.
வருவது சொன்னேன் படுவது படு.
வருவான் குருடன்; விழுவான் கிணற்றிலே.
வலிமைக்கு வழக்கு இல்லை.
வலிய உறவாடி வாசலிலே வந்தாலும் பொய் உறவாடி போய் வா என்று சொல்லுகிறான்.
வலியப் பெண் கொடுக்கிறோம் என்றால் குலம் என்ன, கோத்திரம் க்ஷேத்திரம் என்ன என்று கேட்பார்கள்.
வலிய வந்த சீதேவியைக் காலால் உதைக்கலாமா?
வலியவந்தால் கிரந்திக்காரி.
வலியவனுக்கு இடங்கொடுத்தாலும் வயிற்றுவலிக்கு இடங் கொடேல்.
வலியவன் எடுத்தது வழி.
வலையிற் சிக்கிய மான்போல.
வல்லடி வழக்கைச் சொல்லடி மாமி.
வல்லமை பேசேல்.
வல்லவனுக்கு புல்லும் ஆயுதம்.
வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு.
வல்லவன் ஆட்டிய பம்பரம் மணலிலும் ஆடும்.
வல்லார் இளைத்தால் வந்து இளைப்பாறும் என்று சொல்லா தவர்களா சுத்தவீரர்கள்?
வல்லார் கொள்ளை வாழைப்பழம் ஆகும்
வல்லவன் வகுத்ததே வாய்க்கால்.
வல்லிலைக் கூறையும் மெல்லிலைக் காளையும் ஆகாது.
வவ்விடக் கல்லாச்சு.
வவ்வுதல் செவ்வியைக் கெடுக்கும்.
வழக்கு தீர்ப்பதில் மரியாதை ராமன்தான்.
வழுவழுத்த உறவைக் காட்டிலும் வைரம் பாய்ந்த பகை நன்று.
வழிகட்டிப் பறிக்கிறவன் திருடன்; வரதன் ஏறுவது கருடன்.
வழி நடை வார்த்தை வாகனம்போல,

வழியிலே கண்ட குதிரைக்கு வைக்கோற்பிரி கடிவாளம்,
வழியுமில்லை; வாய்க்காலுமில்லை.
வழியே ஏறுக; வழியே மீளுக.
வழியே போகிற சனியனை விலைக்கு வாங்கியதுபோல.
வழியே போய் வழியே வந்தால் அதிகாரி செங்கோல் என்ன செய்யும்!
வழிவழியாய்ப் போகும்போது விதி என்ன செய்யும்?
வளரும் காய் பிஞ்சிலே தெரியும்.
வளர்த்த கடா மார்பிலே பாய்வதுபோல.
வளர்த்த நாய் முகத்தைப் பார்ப்பதுபோல.
வளர்த்த பிள்ளை சோறு போடாவிட்டாலும் வைத்த பிள்ளை சோறு போடும்,
வளர்ந்த உயரத்தை வாசற்படியில் காட்டுகிறதா?
வளவன் ஆயினும் அளவறிந்து உண்.
வளைந்த மூங்கில் அரசன் முடிமேல்; வளையாத மூங்கில் கழைக் கூத்தன் காலின் கீழ்!
வறட்டுத் தவளையைப் போல் 'வாள்வாள்' என்கிறது.
வறட்டு மாடானாலும் ஒரு சேர் பால் கொடுக்காதா?
வறியார்க்கழகு வறுமையிற் செம்மை.
வறுத்த பயிறு முளைக்குமா?
வறுமையுள்ளவர்க்குப் பொறுமையுண்டு.
வறுமை கண்டவர் வையத்தில் அநேகர்.
வறுமைக்கு மூதேவியும் செல்வத்துக்குச் சீதேவியும்!
வறையோட்டை நக்கினால் வாயெல்லாம் கரி.
வற்றலாய்க் காய்ந்த வடாம் போல.
வற்றிய ஓலை கலகலக்கும்.
வனவேடர் மான் கும்பைக் கலைப்பதுபோல.
வனாந்தரத்து நுழை நரிகள் இடையர்களின் தீர்க்க விரோதிகள்!
வன்சொல் வணக்கத்திலும் இன்சொல் வணங்காமை நலம்.
வஸ்திராபரணம் விசேஷமோ, அன்னம் விசேஷமோ?

# வா

வாகனம் உள்ளவன் நடைக்கு அஞ்சான்; பால் உள்ளவன் பந்திக்கு அஞ்சான்.

வாகை இளம்பிஞ்சு கண்டவர்கள் இல்லை; வாகான தென்னம் பிள்ளை கண்டவர்கள் இல்லை.

வாக்கினால் கெட்ட கழுதையைப் போக்கிலே விட்டுப்பிடி.

வாக்குக்கு எட்டியது மனதுக்கு எட்டவில்லை.

வாக்கும் மனதும் ஒத்து வார்த்தை சொல்லவேண்டும்.

வாக்கு வயணம் தெரியாமல் பேசுகிறான்.

வாங்கின கடனைக் கொடுத்தறியான், கொடுத்தக்கடனைக் கேட்டறியான்.

வாங்கின கடன் கொடாத வல்லாள கண்டன்.

வாங்குவதைப்போலக் கொடுக்கவேண்டும்; கொடுத்ததைப் போலக் கொடுக்கவேண்டும்.

வாசற்படி இட்டு விடுகிறதோ, மகாதேவர் இட்டு விடிகிறதோ!

வாசற்படி தலையிற் பட்ட பிறகா குனிவது?

வாசனையற்ற புஷ்பம் வனத்திலிருந்து பலன் என்ன?

வாழ்நாளுக்கு ஏற்ற வயிற்றெரிச்சல்.

வாணிகஞ் செய்யிற் காணியுங் குறி.

வாணியக்கட்டை வயிரக் கட்டை, தேயத் தேயத் துடைப்பக் கட்டை.

வாணியர் ஆடும் செக்கை வளையவரும் எருதுகளைப்போல.

வாணியன் ஆசை கோணியும் கொள்ளாது.

வாதத்து இயல்பு இடேல்.

வாதம் ஊதியறி; வேதம் ஓதியறி.

வாதம் கொடுத்தது பாதி, வண்ணான் கொடுத்தது மீதி.

வாதம் கெட்டால் வைத்தியம்.

வாதம் முற்றி வைத்தியனானாற் போல.

வாதுக்கு ஆடின தேவடியாள் வயது சென்றால் கழுதை மேய்ப்பாள்.

வாது முற்கூறேல்.

வாது வண்ணம் பாடு.

வாத்தியாரே பிள்ளைக்கென்ன வரும், மாதம் எனக்கு ரெண்டு பணம் வரும்.

வாத்தியாரைக் குறைக்கேழ்வரகையும் விதைக்கச் சொன்னது போல.

வாத்தியார் மெச்சின பிள்ளையுமில்லை; மாமியார் மெச்சிய மருமகளுமில்லை.

வாத்தியார் பெண்சாதி மூத்தவள் பத்தினி.

வாப்பா வாப்பா தொப்பியைப் பிடி, கிணற்றில் விழ.

வாப்பாவும் மரமும் ஓடையும் வந்தால் மாலுமி சாஸ்திரம் சொல்லுகிறேன்.

வாயாடிதான் வல்லவன்.

வாயாடி வார்த்தை மட்டில்லாதவை,

வாயாலே ஊதி வண்டாய் பறக்கிறான்.

வாயாலே கேட்டால் வாழைப் பிஞ்சும் கொடான். தண்டித்துக் கேட்டால் தாறோடு கொடுப்பான்.

வாயாலே தின்று வாயாலே கக்கும் வௌவாலைப் போல.

வாய்ப்பந்தல் போடுகிறான்.

வாயிருந்தால் மகளே வாழ்ந்து வருவாய்.

வாயிலிருக்கிறது வார்த்தை கையேன் ஆடுகிறாய்?

வாயிலே உறவு மனதிலே பகை

வாயிலே போகிறதை சுக்கிக் கொடுக்கிறது.

வாயிலே வந்ததை வறுத்துக் கொறிக்கிறது.

வாயில்லாதவன் கழுவிலே இருப்பான்.

வாயுவும் புள்ளும்போல அலைகிறான்.

வாயுள்ள பிள்ளை பிழைக்கும்.

வாயுள்ளவர் பேசவும் வலதுள்ளார் கொழிக்கவும் ஆச்சுது.

வாயைத் திறந்தால் நாடெங்கும் அசையும்.

வாயைப் பார்த்து ஆளை ஏய்த்தேன்.

வாயை மூடித் தலையை வெட்டுகிறது.

வாயிருந்தால் வங்காளம் போகலாம்,

வாயில்லாவிட்டால் நாய்கூடச் சண்டை செய்யாது.
வாய் உண்டானால் பிள்ளை பிழைக்கும்.
வாய் உபசாரத்திலே வழிவிடுகிறது.
வாய் உள்ள பெட்டிக்கு தூர் இல்லை
வாய் உள்ளவனுக்குக் கலிகாலம்
வாய் கரும்பு; கை இரும்பு.
வாய் காய்ந்த புலி ஆள்மேலே விழுந்ததுபோல.
வாய் கைக்கு உபசார வார்த்தை சொன்னேன்.
வாய்க்கு அடங்காத பிடி பிடிக்காதே.
வாய்க்கு உண்டா வாதம்?
வாய்க்குக் கை உபசாரமா ?
வாய்க்கொழுப்பு சீலையில் வடிகிறது
வாய் சர்க்கரை; கை கருணைக் கிழங்கு
வாய்தான் இருக்கிறது; வாய்க்கரிசிக்கு வழியில்லை.
வாய் திறக்கப் பொய் திறக்கும்.
வாய்த் தவிடும் அடுப்பு நெருப்பும் போனதுபோல.
வாய்த்தால் கிழவியும் பாடுவாள்.
வாய் நல்லதானால் ஊர் நல்லது.
வாய்பார்த்தவள் வாழ்வு இழந்தாள்; அம்பலம் பார்த்தவன் பெண்டு இழந்தான்.
வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ!
வாய்ப்பந்தல் போட யாரால் முடியாது?
வாய்ப்பேச்சு பேசுபவன் வலமிழந்து போவான்.
வாய்ப் பேச்சைக் கொட்டி வயிற்றெரிச்சலை கொட்டிக் கொள்கிறது.
வாய் மதத்தால் வாழ்க்கை இழந்தாள்.
வாய் வாழைப்பழம் கை கருணைக் கிழங்கு.
வாரியர் கொண்டைக்குப் பட்டுக்குஞ்சம் கட்டியது போல.
வார்த்தை இருந்துபோம், வழி தூர்ந்துபோம்.
வார்த்தை காற்று.
வார்த்தைக்கு தரித்திரம் இல்லை.
வால ஜோசியனும் விருத்த வைத்தியனும் நன்று.

வாலிபத்திலே முதிர்ந்த புத்தி குறுகின வயதுக்கு அடையாளம்.

வாலிபத்தில் கிடைக்காத மங்கையை வயது சென்ற பின் என்ன செய்வது?

வாலிபத்தில் தேடாத தேவடியாள், வயது சென்றபின் தேடப் போகிருளா?

வாலிலே கலத்தைக் கட்டிஞல் மாடு வேளைக்குக் குறுணி கறக்கும்.

வாலில்லாத குரங்கைப் போன்றவன்.

வால் நீண்ட கரிக்குருவி வலமிருந்து இடம் போஞல் கால் நடையாய்ப் போனவர்கள் கனக தண்டிகை ஏறுவார்கள்.

வால் பிராணன் தலைக்கு வந்தது.

வால் போஞலும் போகிறது எனக்குத் தோல் வேண்டும்.

வாழாத பெண்ணுக்கு மை ஏண்டீ, பொட்டு ஏண்டீ, மஞ்சள் குளிப்பு ஏண்டீ.

வாழாத பெண்ணைத் தாழ்வாக உரைக்காதே.

வாழாப்பெண் தாயோடே.

வாழ்கிற பெண்ணைத் தாயார் கெடுத்ததுபோல

வாழ்கிற வீட்டில் மரநாய் கட்டியது போல.

வாழும் பிள்ளை விளையாட்டிலே தெரியும்.

வாழையடி வாழை; வாழைக்கு ஒரு குலை.

வாழைக்குத் தான் ஈன்ற காய் கூற்றம்.

வாழைப் பழத்தில் ஊசி ஏற்றிஞற்போல.

வாழைப்பழம் கொண்டு போனவள் வாசலில் இருந்தாள், வாயைக் கொண்டு போனவள் நடுவீட்டில் இருந்தாள்.

வாழைப்பழம் தின்பது வருத்தமாயிருக்குமா?

வாழை வடக்கிலும் வான் கழுகு மேற்கிலும்

வாழ்வதும் கெடுவதும் வாயாலே தான்.

வாழ்கிறவனை வாழ்த்த வேண்டாம், தாழ்ந்தவனை திட்ட வேண்டாம்.

வாழ்கிற வீட்டில் வனக்குரங்கு வந்ததுபோல்

வாழ்கிற வீட்டுக்கு ஒரு பெண்ணும், வைக்கோற் போருக்கு ஒரு கன்றும்.

வாழ்கிற வீட்டுக்கு வாழையை வைத்துப்பார்.

வாழ்கிறான் வாழ்கிறான் என்று மதுரையெல்லாம் பெயராம், ஆற்றிலே இறங்கினால் ஐம்பெத்தெட்டுத் தொல்லையாம்.

வாழக் கை கொடுத்தவன் கையில் வாழ்நாள் அடைக்கலம்.

வாழ்க்கைப்படுகிறதை நம்பி அவசாரி ஆகிறதும் கெட்டது.

வாழ்க்கைப்படுகிற பெண்ணுக்குச் சீப்பை ஒளித்து வைத்தால் நிற்குமா?

வாழ்ந்த மகள் வந்தால் வர்ணத் தடுக்கு இடு, கெட்ட மகள் வந்தால் கிழிந்த தடுக்கு இடு.

வாழ்ந்தவனை வாழ்த்த வேண்டாம்; தாழ்ந்தவனை திட்ட வேண்டாம்.

வாழ்ந்தவன் கெட்டால் வறையோட்டுக்கு ஆகான்.

வாழ்ந்தவன் வறியவன் ஆனால் தாழ்ந்தவனும் ஏசுவான்.

வாழ்வாருக்கு சீதேவி வாயிலே.

வாழ்வு சில காலம்; தாழ்வு சில காலம்

வாழ்வு வரும்போது மதி ஓடிவரும்.

வாழ்வைத் தள்ளினாலும் சாவைத் தள்ளக் கூடாது.

வாளுக்கு ஆயிரம்; தோளுக்கு ஆயிரம்.

வானத்தில் உள்ள அம்புலியை வா என்றால் வருமா?

வானத்தின் கீழ் இருந்து மழைக்கு அஞ்சினால் தீருமா?

வானத்தை வில்லாய் வளைப்பான்; மணலைக் கயிறாகத் திரிப்பான்,

வானமும் பூமியும் கொள்ளாதான் மரத்திலும் கல்லிலும் இருப்பானா?

வானமே ஈன்றது; பூமியே தாங்கியது

வானஞ் சுரக்கத் தானஞ் சிறக்கும்.

வானஞ் சுருக்கிற் குணம் சுருக்கும்.

வானம் பார்க்கப் போயும் இடமிடைஞ்சலா?

வானம் பொத்தலேயென்று சிற்றெறும்புத் தோலால் அடைத்தான்.

வானம் வழங்கத் தானம் வழங்கும்.

வான்குருவிக் கூடும் வன்கறையான் புற்றும் தேன்சிலந்தி இருட்டும் செய்யத் தெரிவதரிது.

வான் செய்த உதவிக்கு வையகம் என்ன செய்யும்?

# வி

விசும்பிற் றுளி வீழினில்லால் பசும்புற்றலை காண்பதரிது.

விசுவாசக்காரனுக்கு வெண்ணீரும் பருக்கையும் தாட்டோட்டக்காரனுக்குத் தயிரும் சோறும்.

விசுவாசக் கொக்கே; நடமாடிச் செத்தாயே!

விசுவாசப் பூனை கருவாட்டைத் தூக்கிக்கொண்டு போகிறதாம்.

விசுவாசம் இருந்தால் வேசியும் பிழைப்பாள். நிஜம் இருந்தால் நீசனும் தழைப்பான்.

விச்சுளி வலமானால் நிச்சயம் வாழ்வுண்டாம்.

விஷத்தைக் குடித்தவன்; மிளகு நீர் குடிக்க வேண்டும்.

விடாச் சுரத்துக்கு விஷ்ணு கரந்தை.

விடாத மழை பெய்தாலும் படாத பாடுபடவேண்டும்.

விடிந்தால் தெரியும் மாப்பிள்ளை குருடும் பெண் குருடும்.

விடிந்தால் தெரியும் வெளிச்சம்.

விடிந்தும் பெண்ணுக்கு முக்காடு ஏன்?

விடிய விடியக் கதை கேட்டு, இராமனுக்கு சீதை சித்தப்பா என்பது போல

விடியற்காலம் கலியாணம்; பிடி வெற்றிலை பாக்கு!

விடியா மூஞ்சிக்கு வேலை அகப்பட்டாலும் கூலி அகப்படாது.

விடியு மட்டும் இறைத்தவனும், விடிந்த பின்பு சாலை உடைத்தவனும் சரி.

விடியும் மட்டும் மழை பெய்தால், ஓட்டாங் கிளிஞ்சல் கரையுமா?

விடுவிடு சங்கிலி, வேப்பஞ் சங்கிலி; விட்டால் குடி கெட்டுப் போம்.

விட்ட குறை தொட்ட குறை விடுமா?

விட்டதடா ஆசை விளாம்பழத்து ஓட்டோடே.

விட்டதடீ உன் ஆசை விளாம்பழத்து ஓட்டோடே.

விட்டிற் பூச்சியைப்போல பறந்து திரிகிருன்.

விட்டு அலேவதிலும் தொட்டு அலே.

விட்டுச் சொன்ஞல் கட்டுக் குலேயும், விரித்து உடுத்திஞல் அழுக்குப் படியும்.

விட்டு விட்டாலும் ஒட்டிக்கொண்டு வருகிருன்.

விட்டு விட்டுப் பெய்யும் மழையைவிட, விடாமற் பெய்யும் துவானம் நல்லது.

விண் காட்டப் போனவன் கண்காட்ட வந்தாஞம்.

விண்ணுமாலேக்கு கல்யாணம் விழுந்து கொட்டடா சாம்பவா!

விண்ணேறு தப்பிஞலும் கண்ணேறு தப்பாது.

விண் தொடு கொடுமுடி மேருவும், வீறளி தென்திசைக் கிரியும்.

விண் பொய்த்தால் மண் பொய்க்கும்.

விண் விடும் குடிக்கு விண் விடும்; என் பாவி குடிக்கு விண் விடுமா?

விதி எப்படியோ மதி அப்படி.

விதி போகிற வழியே மதி போகும்.

விதி முடிந்தவனே விரியன் கடிக்கும்.

விதியின் பயனே பயன்.

விதியை மதியால் தடுக்கலாமா?

விதியை வெல்வாருண்டோ?

வித்தாரக்காரன் செத்தால் பிழையான்.

வித்திருக்கும் மாடத்தில் வேர் இருக்கவேண்டும்.

வித்துக்கு விட்ட சுரக்காய் போல.

வித்துவானுக்கு ஏது பரதேசம்.

வித்துவானே அடித்தவனுமில்லே; பெற்ற தாயுடன் போன வனும் இல்லே.

வித்துவான் அருமையை வித்துவான் அறியவேண்டுமே யல்லாமல் விறகு விற்பவஞே அறியப் போகிருன்?

வித்தை அழிக்கிற கோழிக்கு விலாவிலிருக்கிறதாம் பித்து.

வித்தையற்றவன் அழகு, வாசனேயற்ற முருக்கம்பூ.

வித்தைக் கள்ளி மாமியார் விறகு வெட்டப் போஞளாம், கற்ருழை முள்ளு கொத்தோடே வந்து தைத்துக் கொண்டதாம்.

வித்தைக் கள்ளி விளையாட்டுக் கள்ளி; பாகற்காய் விற்ற பழங் கள்ளி.

வித்தைக்காரப் பெண்பிள்ளை செத்த பாம்பை ஆட்டுகிறாள்.

வித்தையில் எளிது சூனியம், பன்னத்திலே எளிது நீற்றுப் பெட்டி.

வித்தை விரும்பு.

விநாச காலே விபரீத புத்தி.

விந்து விட்டாயோ, நொந்து கெட்டாயோ?

வியாஜ்ஜியம் சேற்றில் இட்ட கம்பம்.

வியாதிக்கு மருந்துண்டு, விதிக்கு மருந்துண்டா?

வியாதியினும் மருந்து கொடிது.

விரகன் கோசம் கட்டை தட்டிப்போம்.

விரதம் கெட்டாலும் சுகம் தக்க வேண்டும்.

விரலுக்குத் தக்க வீக்கம்தான் வீங்கலாம்.

விரல் உதவி விருந்தினர் உதவார்.

விரல் உரல் ஆனால், உரல் என்ன ஆகும்?

விரல் கண்ணிலே குத்தியதென்று வெட்டிப் போடுவார்களா?

விரல் நக்கி மோர் குடிப்பது போல.

விரல் நுழைய இடம் கொடுத்தால், உலக்கையையே நுழைகிறான்.

விரல் கற்றில் அம்மி விழுந்தது போல.

விருது கூறி வந்து செடியிலே நுழைவது போல.

விருதுக்காகவா வேட்டையாடுவது.

விருத்தாசலம் போனால் திரட்பாவம் போகும்.

விருந்து இட்டால் பகைமை விளைகிறது.

விருந்துக்காகவா வேட்டையாடுவது?

விருந்தில்லாச் சோறு மருந்தோடொக்கும்.

விருந்து இல்லோர்க்கில்லை பொருந்திய ஒழுக்கம்.

விருந்தும் மருந்தும் மூன்று பொழுது.

விருப்பத்தினால் ஆகாதது வீம்பினால் ஆகுமா?

விரை ஒன்று போடச் சுரை ஒன்று முளைக்குமா?

விரைக்கு விட்ட காயைப்போல.

விரைக் கோட்டையிலே பெருச்சாளி புகுந்தாற்போல

விரை முந்தியோ, மரம் முந்தியோ.
விலக்கக்கூடாத துன்பத்துக்கு விசனப்படாதே.
விலங்கும் பறவையும் விதித்த கோடு தவறுது.
விலங்கு வேண்டாம், தொழுவில் இருக்கிறேன்.
விலைமகட்கு அழகு தன்மேனி மினுக்குதல்.
விலை மோரிலே வெண்ணெய் எடுப்பதா?
விலைமோரிலே வெண்ணெய் எடுத்துத் தலைமகளுக்குக் கல்யாணம் பண்ணுவாள்.
வில் அடியால் சாகாதது கல்லடியால் சாகுமா?
வில்லம்போ சொல்லம்போ?
வில்லுக்கு விஜயன் பரிக்கு நகுலன்.
வில்லுக் குனியாது எய்தால், விலகாது எதிர்த்த பகை.
வில்வப்பழம் தின்பார் பித்தம்போக, பனம்பழம் தின்பார் பசிபோக.
விவேகத்தின் மேன்மை, அவிவேகத்தை ஒழித்தல்.
விழிக்குவிழி பாய்ச்சுகிறது.
விழித்தவன் கன்று நாகுகன்று: தூங்கினவன் கன்று கிடாக் கன்று.
விழுங்கின ரகசியம் வயிற்றில் இராது.
விழுகிற சுவற்றிலே கை வைத்தாற்போல.
விழுகிற பிள்ளைக்கு அரிவாள்மனையை அண்டக் கொடுத்தாற் போல
விழுந்த இடம் பொழுது; விட்ட இடம் விடுதி.
விழுந்த பிள்ளையை எடுக்க நேரமில்லை.
விழுந்தவன் எழுந்தால் வெட்கத்திற்கு அஞ்சிச் சிரிப்பான்.
விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை என்கிறான்.
விளக்கிருக்கத் தீயைத் தேடுவாரோ?
விளக்கிலே கொளுத்திய பந்தம்போல.
விளக்கிலே மொய்த்த விட்டிற் பூச்சியைப்போல்.
விளக்கில்லாத வீட்டிலே பேய் குடிபுகும்.
விளக்கு மாற்றால் அடித்து, குதிரை மீதேற்றி தீவட்டி கொடுத்தது போல
விளக்குமாற்றுக் கட்டைக்கு பட்டுக் குஞ்சம் கட்டியதுபோல

விளக்கெண்ணெய் தலைக்கெண்ணெய்.
விளக்கெண்ணெயிற் போட்ட கழற்சிக்காய் போல.
விளக்கெண்ணெயைத் தடவிக் கொண்டு ஆத்து மணலில் புரண்டாலும் ஒட்டுவதுதான் ஒட்டும்.
விளக்கெண்ணெய்க்குக் கேடேயொழிய பிள்ளை பிழைக்கவில்லை.
விளக்கைப் பிடித்துக் கொண்டு கிணற்றில் விழுவதா?
விளக்கை வெளியிலே வைத்தாற்போல.
விளக்கை வைத்துக்கொண்டு நெருப்புக்கு அலைவானேன்?
விளாங்காய்க்குத் திரட்சியை யுண்டுபண்ணுவதா?
விளையச்சே சோறாய் விளைந்தால், விறகு விராட்டி எதற்கு?
விளையாட்டாய் இருந்து வினையாய் முடிந்தது.
விளையாட்டுச் சண்டை வினைச் சண்டையாம்.
விளையாட்டுப் பண்டம் வீடுவந்து சேராது.
விளையாட்டுப் பிள்ளைக்கு மண்மேல் ஆசை; விளையாட்டுப் பிள்ளைக்கு விதரணை தெரியுமா?
விளையும் பயிர் முளையிலே தெரியும்.
விளைவதானாலும் அளவறிந்து அழி.
விளைவது அரிசியானால் உமிபோனால் விளையாது.
விறகுக் கட்டைக்காரனுக்கு நாரை வலமானால் ஒரு பணம் விற்கிறது ஒன்றேகால் பணம் விற்கும்.
விறகு கோணலாக இருந்தால் நெருப்புப் பற்றாதா?
விறகு தலையனுக்கு நோய் வந்தால் விறகுக் கட்டோடுபோய் விடும்.
விற்ற குட்டைக்கு புல் போடவேண்டுமா?
வினைக்காலம் வருங்காலம் மனைவழியும் தெரியாது.
வினை விதைத்தவன் வினை அறுப்பான்: தினை விதைத்தவன் தினை அறுப்பான்!
விஷத்தின்மேல் விஷம், விஷம் போக்கும்.
விஷத்தைக் குடிக்கப் பாலாகுமா?
விஷம் குடித்தவன் மிளகு நீர் குடிக்கவேண்டும்.
விஷம் தீர வைத்தியன் வேண்டும், பாபந்தீரத் தெய்வம் வேண்டும்.
விஷ்ணுவைப் பெரிது என்பார் ஸ்ரீரங்கத்தில்; சிவனைப் பெரிது என்பார் அருணாசலத்தில்.

# வெ

வெகு ஜன வாக்கியம் கர்த்தரபயம்.
வெங்கண்ணை வாங்கு, உன் கண்ணைக் கொடுத்து.
வெங்காயத்துக்கு எத்தனை வாசனை கூட்டினாலும் துர்க்கந்தத்தையே வீசும்.
வெங்காயம் இட்ட கறிக்குச் சந்தேகமில்லை.
வெங்காயம் உரிக்க உரிக்கத் தோலாக இருப்பதுபோல!
வெச்ச அனலுக்கு அன்றி வெண்ணெய் உருகுமா?
வெடவெடவென்று தண்ணீரில் குளிக்காதவளா உடன்கட்டை ஏறப்போகிறாள்?
வெட்கத்துக்கு அஞ்சுபவன் கடனுக்கு அஞ்சுவான்.
வெட்கத்துக்கு அஞ்சினவன் சச்சரவு செய்வானா?
வெட்கத்தை விற்று அக்குளிலே அடக்கிக் கொண்டான்.
வெட்கத்தை வெளியில் சொல்லலாமா?
வெட்கப்படுகிற வேசியும் வெட்கங்கெட்ட சமுசாரியும் உதவுவார்கள்.
வெட்கம் கெட்டு வெளிப்பட்ட முண்டைக்கு முக்காடு எதுக்கு?
வெட்கமற்ற பெண்பிள்ளை வீண்.
வெட்கங்கெட்டவனுக்கு மேனி எல்லாம் அழுக்குத்தான்.
வெட்கங்கெட்டவன் ஊருக்குப் பெரியவன்!
வெட்கங்கெட்டாலும் கெடட்டும் தொப்பையில் இட்டால் போதும்.
வெட்டப் பலமில்லை; விட்டுப்போக மனமில்லை.
வெட்ட வருகிற மாட்டுக்கு வேதம் ஓதினால் போதுமா?
வெட்டவெளிச்சம் பட்டப்பகலாய்ப் போச்சுது.
வெட்டி எல்லாம் தண்ணீர்; மண்கட்டி எல்லாம் புல் நாற்று.
வெட்டிக்கு இறைத்து விழலுக்கு தண்ணீர் கட்டியதுபோல
வெட்டிக்குப் பிறந்த பிள்ளை வேலியிலே.
வெட்டிக்கொண்டு வரச்சொன்னால் கட்டிக்கொண்டுவருவான்.
வெட்டிக்கொண்டு வாவென்றால் குத்திக்கொண்டு வருகிறான்,

வெட்டிப்போட்டுக் கட்டிக்கொண்டு அழுகிறது.
வெட்டியானும் பிணமும் கட்டிக்கொண்டழட்டும்.
வெட்டிவேரில் விசிறியும், விலாமிச்ச வேரிலே தட்டியும் பண்ணு.
வெட்டிய இடத்தில் ஜலம் ஊறும்; வீடு கட்டின இடத்தில் நடை ஏறும்.
வெட்டின குளத்தில் தண்ணீர் குடியாது; கட்டிய வேலியையும் தாண்டமாட்டாது.
வெட்டினவனுக்கு ஒரு கேணி; வீணுதி வீணனுக்குப் பலகேணி
வெட்டு ஒன்று; துண்டு இரண்டு.
வெட்டெனப் பேசேல்.
வெண்கலக் குகையில் வைத்து வியாழம் முப்பதும் ஊதினால் மற்றநாள் வெள்ளியாமே.
வெண்கலம் நடமாடக் குசவன் குடிபோகிறான்.
வெண்டலைக் கருடன் வந்திடுமானால் எவர் கைப்பொருளும் தன் பொருளாகும்.
வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அலைவானேன்?
வெண்ணெய் உருகும் முன்னே, பெண்ணை பெருகும்.
வெண்ணெய்க் கட்டியும் முப்பாலும் போடுவார் தூக்கிக் கொண்டதற்கு என்னதான் செய்வார்?
வெண்ணெய் திரண்டு வரும்போது, தாழி உடைந்ததுபோல.
வெந்த சோற்றை தின்று; வாய்க்கு வந்ததெல்லாம் பிதற்றுகிறான்.
வெந்தது போதும் முந்தானையில் கொட்டு.
வெந்த புண் வினை செய்யாது.
வெந்தயம் போடாத கறியும் கறியுமல்ல; சந்தடி இல்லாத ஊரும் ஊரல்ல.
வெந்தால் தெரியும் வெங்காய மணம்!
வெந்நீரில் விழுந்த கோழி தானே எழுந்து போகுமா?
வெந்நீரிலே வீடு வேகுமா?
வெய்யலில் அகப்பட்ட புழுவைப் போல.
வெயிலில் போட்டாலும் உலரமாட்டான்; தண்ணீரில் நனைத்தாலும் நனைய மாட்டான்.
வெய்யலின் முன்னே மின் மினி பிரகாசிக்குமா?

வெய்யோன் வெயில் முன் எரிதிபம்போல.

வெல்லப் படையில்லை; தின்னப் படையுண்டு.

வெல்லப் பிள்ளையாரைக் கிள்ளி; அதற்கே நைவேத்தியம் செய்வதுபோல.

வெல்லம் தின்பவன் ஒருவன், விரலைச் சூப்புகிறவன் வேறொருவன்.

வெல்லாது உங்கள் படை, செல்லாது பாண்டியன் முன்.

வெளிச்சம் இருளானால் இருள் என்னவாகும்?

வெளிச்சீர் உள்சீரைக் காட்டும் கண்ணாடி.

வெளி மழை பட்டாலும் கொடி மழை விடாது.

வெளுத்ததெல்லாம் பால்; கறுத்ததெல்லாம் தண்ணீர்.

வெளுத்துவிட்டாலுஞ்சரி, சும்மா விட்டாலும் சரி.

வெளுப்பானுக்கு வெளுப்பான் ஜாதி வண்ணான்.

வெள்ளமேயானாலும் பள்ளமே பயிரிடவேண்டும்.

வெள்ளம் பள்ளத்தை நாடும்; விதி புத்தியை நாடும்.

வெள்ளம் வருவதற்கு முன் அணை போடவேண்டும்.

வெளியே பார்த்தால் டம்பம், உள்ளே பார்த்தால் ஒக்காளம்.

வெள்ளாடு நனைகிறதென்று வேங்கைப்புலி விழுந்து விழுந்து அழுததாம்.

வெள்ளாட்டி பெற்ற பிள்ளை விடியற்காலம் செத்துப் போயிற்று.

வெள்ளாட்டியும் பெண்டாட்டியும் சரியா?

வெள்ளாளர் குடிக்கு ஒரு கள்ளாளர்.

வெள்ளாளர் செய்யாத வேளாண்மை ஒரு வேளாண்மையல்ல!

வெள்ளாளன் கிரந்தமும் பார்ப்பான் தமிழும் வழவழா, கொழ கொழா.

வெள்ளாளன் கெடுக்காவிட்டாலும் வெள்ளோலை கெடுக்கும்.

வெள்ளாளன் மினுக்குப் பண்ணிக் கெட்டான்; வேசி தளுக்குப் பண்ணிக் கெட்டாள்.

வெள்ளிக் கிழமை கொள்ளிக்கு ஆகாது.

வெள்ளிக்கு எதிரே போனாலும் போகலாம், வேளாளனுக்கு எதிரே போகலாகாது.

வெள்ளி வட்டிலும் வேண்டும், விளிம்பிலே பொன்னும் வேண்டும்.

வெள்ளி போட்ட காலுக்கு வெறுங்கால் அடிமையா?

வெள்ளெருக்குக்கும் வெள்ளாட்டுப் பாலுக்கும் கள்ளக் கரு மேகம் காணுமற்போம்.

வெள்ளெலும்பை நாய் கடிப்பதுபோல.

வெள்ளை கொடுக்க வினை தீரும்.

வெள்ளைக்காரனுக்கு ஆட்டுத்தோல் இடம் கொடுத்தார்கள்: ஊர் முழுவதும் அடித்து 'இது எனது' என்றான்.

வெள்ளைக்கு இல்லை கள்ளச் சிந்தை.

வெள்ளைப்பாவாடை விரித்தாற்போல.

வெள்ளையாய்ச் சொல்லிவிட்டான்.

வெள்ளையுஞ் சொள்ளையுமாய் வந்தான்; வீட்டிலே சோறில்லை.

வெறிகாரன் குடியை விடான், வீண் புத்திக்காரன் பாவத் துக்கு அஞ்சான்.

வெறி கொண்ட யானை மதத்து திரிவதுபோல.

வெறிக்கிட்டு அழியேல்.

வெறுங்கஞ்சியைக் குடித்துவிட்டு மீசையிலே நெய்யைத் தடவிக் கொள்வதா?

வெறுங்காதுக்கு ஓலைக்காது மேல்.

வெறு...அம்மணம் போட்டுக்கொள்ளடி சம்மணம்.

வெறு......தட்டான் இரும்பூதிச் செத்தான்!

வெறுங்கை முழம் போடுமா?

வெறுஞ்சட்டி தாளிக்கிறாள்.

வெறுஞ் சிறுக்கி அகமுடையான்; வீம்புக்குத் தாண்டி விழுந்தானும்!

வெறும் பானையில் புகுந்த எலியைப் போல!

வெறும்புளி தின்றால் பற் கூசும்!

வெறும் வாயை மென்றவனுக்கு வெள்ளை அவல் கிடைத்தது போல!

வெற்றி பெற்றவன் சுத்தவீரன்.

வெற்றிலைக்குத் தண்ணீரும், வேசிக்கு மஞ்சளும் போல.

வெற்றிலை போலிருக்கும் மிகுந்த மரமாகிவிடும் புத்தியுள்ள பூமரத்துக்கு பூவிரண்டு வக்கணையாம்.

வெற்றிலைப் பொதிக்காரனும் அழுகிறான், உப்புப் பொதிக் காரனும் அழுகிறான்.

# வே

வேதத்தில் நாலுவிதமுண்டு.
வேக நேரமிருந்தாலும் சாகநேரமில்லை.
வேகப் பொறுத்தவனுக்கு ஆறப் பொறுக்கவில்லையா?
வேகாத வீட்டில் வேகும் கட்டை காமம்.
வேகிற வீட்டில் பிடுங்கியது ஆதாயம்.
வேகிற வீட்டுக்கு வெட்டுகிற கிணறு.
வேங்கைப் புலியை வெள்ளாடுகள் சூழ்ந்தாற் போல.
வேசி அவல் ருசியை அறியாள், வெள்ளாட்டி எள் ருசியை அறியாள்.
வேசி ஆடினால் காசு, வெள்ளாட்டி ஆடினால் சவுக்கு,
வேசி உறவு காசிலும் பணத்திலும்தான்.
வேசி உறவும் வெள்ளாட்டி அடிமையும் காசு பணத்தளவே காணலாம்.
வேசி காசு பறிப்பாள்.
வேசிக்கு ஆணையில்லை, வெள்ளாட்டிக்கு சந்தோஷமில்லை.
வேசிக்குக் காசுமேல் ஆசை; விளையாட்டுப் பிள்ளைக்கு மண் மேல் ஆசை.
வேசிமேலாசைப்படுவது வெள்ளெலும்பை நாய் கௌவி யதற்கு ஒப்பாகும்.
வேசியரும் நாயும் விதிநூல் வைத்தியரும் பாசம் அற்று நிற்பது காண்பார்.
வேசியைப் பெண்டாக வைத்துக்கொண்டால், விளக்குத்தான் பிடிக்கவேண்டும்.
வேடக்காரனுக்கும் ஆடல்காரனுக்கும் பகை: வேசிக்கும் தாசிக்கும் பகை.
வேடத்தில் நாலுவிதம் உண்டு.
வேடம் அழிந்துபோம்.
வேடம் கூடமும் கொள்ளாது.

வேடருக்கு அருமையான வேட்டை—முயல் வேட்டை.
வேடரில்லா ஊரில் யாவும் குடியிருக்கும்.
வேடர்களில் மலைவேடர் விசேஷம்.
வேடர் கையில் அகப்பட்ட தேன்கூடுபோல,
வேடனுக்குத் தேன் பஞ்சமா? மூடனுக்கு அடி பஞ்சமா?
வேடிக்கைக்கு விலை இல்லை; கதைக்குக் கால் இல்லை.
வேட்டையாடிச் சிங்கம் தின்னும்.
வேட்டை பெரிதென்று பேய் நாயைக் கட்டி இழுப்பதா?
வேண்ட வேண்டத் தாண்டவம் ஆடுகிறுன்.
வேண்டாத பேருக்கு ஈந்தென்ன? வேலையில் ஆற்றுத் தண்ணீர் விழுந்தென்ன;
வேண்டாப் பெண்டாட்டி கைபட்டால் குற்றம்; கால் பட்டால் குற்றம்.
வேண்டி வினை செய்யேல்.
வேண்டி வேண்டிக்கொடுத்தால் வேண்டாம் என்பதா?
வேண்டும் என்றால் வீடு; வேண்டாம் என்றால் காடு.
வேண்டும் என்றால் வெண்ணெயைப் போல நூற்கலாம்.
வேதத்திற்கு உலகம் பகை; உலகத்திற்கு ஞானம் பகை.
வேதத்திற்கும் விக்கிரஹ பக்திக்கும் பகை.
வேதமறியாக் கிழவன் வீண்.
வேதம் ஆய்ந்து ஓதல்; போதகர் முறைமை.
வேதம் ஏன், நியாயம் ஏன், விஸ்தாரக் கள்ளருக்கு.
வேதம் ஒத்த மித்திரன்.
வேதம் ஓதிய வேதியர்க்கு ஓர் மழை.
வேதம் பொய்த்தாலும் வியாழம் செய்யாது.
வேதாரண்யத்தில் பாம்பு கடிக்கிறதும் இல்லை; வேதாரண்யத்தில் பாம்பு குறைவதும் இல்லை.
வேதியர்க்கழகு வேதமும் ஒழுக்கமும்.
வேதியர்க்கழகு வேதம் ஓதுதல்.
வேந்தனும் பாம்பும் நெருப்பும் சரி
வேந்தன் சீறில் ஆருந்துணையில்லை.
வேப்பம் பழம் கனிந்தாலும் விரும்புமா கிளி.
வேப்பெண்ணெயும் ஆபத்துக்கு உதவும்.

வேப்பெண்ணெய் விருந்தெண்ணெயல்ல; மருந்தெண்ணெய்.
வேப்பெண்ணெய் விற்ற காசு கசக்குமா?
வேம்பில் தேனைவிட்டால் கசப்பு நீங்குமா?
வேம்புக்குப் பல் அழகுபெறும் ; வேலுக்குப் பல் இறுகும்.
வேம்பும் கரும்பாச்சே, வெற்றிலையும் விஷமாச்சே!
வேம்பும் சரி வேந்தனும் சரி.
வேம்பை விரும்ப விரும்பக் கரும்பாகும்.
வேரைக் கல்லி வெந்நீர் விடலாமா ?
வேரைக்களைந்த மரம் பிழைக்குமா ?
வேர் நின்றால் மரம் நிற்கும் ; வியாபாரம் நின்றால் செட்டி நிற்பான்.
வேர் மூலிகை ; மர மூலிகை ; காய் மூலிகை.
வேலமரத்திற்கு நிழல் இல்லை ; வெள்ளாளனுக்கு உறவு இல்லை.
வேலமரத்து முள்ளும் ஆலமரத்துக் கனியும் ஆனேன்.
வேலம்பட்டை மேகத்தைப் போக்கும்; ஆலம்பட்டை பித்தத்தை அடிக்கும்.
வேலி ஒன்றுக்கு ஈரணை மாடும் இரண்டு ஆளும் வேண்டும்.
வேலி ஒன்றுக்கு பன்னிரண்டு கலம் விதைப்பாடு.
வேலிக்கு ஓணான் சாக்ஷி.
வேலிக்கு ஓணான் சாக்ஷி; வெந்ததுக்கு சொக்கன் சாட்சி.
வேலிக்குப்போட்ட முள் ; காலுக்கு வினையாச்சு.
வேலியே பயிரை மேய்ந்தால் விளைவதுதான் எப்படி ?
வேலிப்புறத்திலே கண்ணும் மாமியார் தலையிலே கையும்.
வேலிலும் நாலுபலன் உண்டு.
வேலிவைத்துக் காப்பாற்றாத கன்றும், ஆலை வைத்து ஆட்டாத வாணியனும் வீண்.
வேலையதிகம் சம்பளம் கொஞ்சம்.
வேலையற்ற அம்பட்டன் மகளைப்பிடித்து சிரைத்தானும்.
வேலை இல்லாத ஊருக்கு ராஜா ஏன் ? பாம்பு இல்லா ஊருக்குக் கீரிப்பிள்ளை ஏன் ?
வேலை இல்லாதவனுக்கு சாப்பாடு எதற்கு? எச்சில் சோற்றுக் காரனுக்கு டம்பம் எதற்கு ?
வேலைக்கள்ளிக்கு பிள்ளைமேல் சாக்கு.

வேலைக்கள்ளிக்கு பிள்ளைமேல் சாக்கு; வெட்கங்கெட்ட நாரிக்கு அகமுடையான்மேல் சாக்கு.

வேலைக்கள்ளிக்கு வேளைக்குக் காற்படி; வீண் கட்டைக்கு வேளைக்கு அரைப்படி.

வேலைக்காரி என்று வேண்டிய பேர் கேட்டார்கள், குடித்தனக் காரி என்று கொடுக்கமாட்டேன் என்றார்கள்.

வேலைக்காரியானவள் வீட்டுக்காரியானால் — அது அவள் அதிர்ஷ்டம்.

வேலைக்குத் தக்க கூலி; வேசிக்கு வேண்டியது காசு.

வேலை செய்தால் கூலி; வேஷம் போட்டால் காசு.

வேலைசெய்யாத பிள்ளையைக் கையிலே வை; வேலை செய்கிற பிள்ளையைக் காலிலே வை.

வேலையைப் பார்த்துப் பெண்ணைக் கொள்.

வேலை முத்தோ, பிள்ளை முத்தோ.

வேலையில் நல்ல அடி அடிக்கிறான்.

வேலையைப் பார்த்துக் கூலி கொடு.

வேலையைப் பார்த்துப் பெண்ணை எடு; சாலையைப் பார்த்து ஊருக்கு நட.

வேழத்திற்குச் சிறியதும் பெரியதுமாய்த் தோன்றும்.

வேழத்தை ஒத்த வினைவந்தால் தீர்வது எப்போ?

வேழம் முழங்கினாற்போல.

வேளை அறிந்து பேசு, நாளையறிந்து பிரயாணம் செய்.

வேளைக்கு அரைக்காசு ஆயிரம் பொன்னாகும்.

வேளைக்கு உதவாத பிள்ளை, தாழங்காய்க்கு சரி.

வேளைக்குத் தகுந்த வேஷம்.

வேளையும் நாழிகையும் வந்தால் வேண்டாம் என்றாலும் நிற்காது.

வேளையோ, அவலவேளை, வீட்டிலோ அன்னம் இல்லை.

வேறு வினை தேவையேயில்லை: வினை தீர்த்த கோயிலுக்குப் போக வேண்டியதில்லை.

வேனலுக்கு கனமழைவரும், வேந்தனுக்குக் கனசனம் சேரும்.

வேனற்காலத்திற்கு விசிறி, ஆனை காலத்திற்கு ஆச்சரவும் தேக்கும்.

# வை

'வை' என்ற எழுத்தே சொல்லும் செயலும் ஆகும்.

வைகறைத் துயில் எழு.

வைகுண்டத்திற்குப் போகிறவனுக்கு வழி காட்டிக்கொடுக்க வேண்டுமா ?

வைகுண்டமென்பது ஸ்ரீரங்கம்.

வைகை ஆற்றுத் தண்ணீரில் பாலம் நிலைப்பதில்லை.

வைகைக் கரைக்கு வார்த்தையும், கங்கைக் கரைக்கு கீர்த்தியும்.

வைக்கத் தெரியாமல் வைக்கோற் போரில் வைத்தானாம்.

வைக்கத் தெரியாமல் வைத்துவிட்டு; வந்தவரையெல்லாம் கேட்கலாமா ?

வைக்கவும் தெரியாது ; வைத்துப் படைக்கவும் தெரியாது.

வைக்கோல் தின்கிற குதிரைக்கு வேகம் அதிகமா ?

வைக்கோல் தின்கிற மாட்டுக்குப் பால் கொஞ்சம் இனிக்கும்.

வைக்கோற் கட்டுக்காரனை ஒப்புக்கு கட்டி அழுதாற்போல

வைக்கோற் கூளமும் வேளைக்கு உதவும்.

வைக்கோற் படப்புப்போல் மெலிந்து போனாயே!

வைக்கோற் பட்டையில் கட்டியநாய்.

வைசியரும் சூத்திரரும் இருந்தாலல்லவோ பிராமண க்ஷத்திரியர் வருவார்கள்.

வைசியரில் பூவைசியர் சிறந்தவர்.

வைசூரி வந்தவர்கள் அம்மாவென்று கூப்பிட வேண்டும்.

வைதாரை வாழவைக்கும் வாழ்ந்தாரை தாழவைக்கும்.

வைதாரையும் வாழ்கவென வாழ்த்து

வைதீகம் ஆய்ந்து அறி.

வைதீகம் என்றால் தெய்வ சமயம்,

வைதீகம் லௌகிகம் இரண்டும் வேண்டும்.

வைத்ததற்கு மேல் வழியில்லை ; பிச்சைக்கு போக சுரைக் குடுவை இல்லை.

வைத்தது உண்டானால், கெட்டதும் உண்டாகும்.

வைத்தது கண்டது சொல்லாதே.
வைத்தவன் எடுக்க வேண்டும், வழியறியாதவன் போக வேண்டும்.
வைத்தால் குடுமி, சிரைத்தால் மொட்டை.
வைத்தால் பிள்ளையார், வழித் தெறிந்தால் சாணி.
வைத்தியத்தில் இரண வைத்தியமும், வயதில் இளமையும் நன்மை தரும்.
வைத்தியமோ பைத்தியமோ ?
வைத்தியம் கொஞ்சமாவது தெரியாத பேர்கள் இல்லை.
வைத்தியனுக்கு ஊரார் யாவரும் சிநேகம்.
வைத்தியனுக்கு தன் மருந்து பலிக்காது.
வைத்தியனுக்கும் அஞ்ச வேண்டும், வம்பனுக்கும் அஞ்ச வேண்டும்.
வைத்தியனுக்கு வந்தது அவன் தலையோடே.
வைத்தியனும் கைவிட்டால் ஆண்டவனே கதி!
வைத்தியன் சொன்னதெல்லாம் மருந்து.
வைத்தியன் தகப்பன் போன்றவன்.
வைத்தியன் தலைமாட்டில் இருந்து அழுததுபோல.
வைத்தியன் பாராத நோய் தீருமா ?
வைத்தியன் பிள்ளை நோயினுல் அல்ல, மருந்தினுல் சாகும்.
வைத்தியன் பிள்ளை நோயாளி, வாத்தியார் பிள்ளை கோமாளி!
வைத்தியன் பெரிதோ, மருந்து பெரிதோ.
வைத்தீஸ்வரன் கோவிலுக்குப் போயும் வயிற்றுவலி தீரவில்லை.
வைப்பு வாக்கு பார்த்துப் பேசவேண்டும்.
வையகத்தில் எல்லோரும் ஒரு போக்கல்ல.
வையகத்தில் பொய்சொல்லாதவன் இல்லை.
வையகம் ஒழியும், வான் ஒழியும், வல்லவர் வசனம் ஒழியாது.
வையகத்தில் உடம்பு இல்லாதவருக்கு உப்பு வேண்டாம்.
வையகத்தில் உடம்பு இல்லாவிட்டாலும் உடை வேண்டும். பணம் இல்லாவிட்டாலும் கனம் வேண்டும்
வையத்தில் உப்புக்கு ஏமாந்தவர், உடலுக்கும் ஏமாறுவர்.
வையத்தில் உயர்ந்தோர்க்கு இரை தாழ்ந்தோர்.

வையத்தில் உயர்ந்தோர் சிலர், தாழ்ந்தோர் பலர்.
வையகத்தில் சைவனுக்குச் சைவனே மேல்.
வையத்தில் தந்தையைவிட தாய் சிறந்தவள்.
வையத்தில் தெவிட்டாத பொருள் அன்னமும் தண்ணீரும் தான்.
வைராக்கிய சதகம் சதகங்களில் விசேஷம்.
வைராக்கியம், பகை; துர்க்குணங்களில் விசேஷம்.
வைவாருக்கு இன்பம் இல்லை, பொறுத்தவர்க்குத் துன்பம் இல்லை.

# வௌ

வௌவாலாகத் தொங்கினாலும் நடவாத காரியம் நடக்காது.
வௌவாலுக்கு இரவில் கண்கள் தெரியும்.
வௌவாலுக்கு ஒரு கனிக்கு நூறு கனி நஷ்டம்.
வௌவாலுக்கு நீளவும் தெரியும், குறுகவும் தெரியும்.
வௌவாலுக்கு மரமே கதி ; அதன் குஞ்சுவிற்கு அதுவே கதி.
வௌவாலுக்கு யார் தாம்பூலம் வைத்தார்கள்.
வௌவாலைக் கொன்றாலும் பிடியைவிடாது.
வௌவாலைத் தின்றாலும் அணிலைத் தின்னலாகாது.
வௌவாலோ சிறியது ; அதன் அடியோ வலிது
வௌவால் அடித்துத் தின்னும் ; அணில் கடித்துத் தின்னும்.
வௌவால் அடித்த பழமும் அணில் கடித்த பழமும் தள்ளுபடி ஆகுமா ?
வௌவால் கூட்டங்கூட்டமாக இருக்கும்.
வௌவால் அடைகிற வீட்டில் குடியிருப்பது எப்படி ?
வௌவாலைப் போலத் தொங்குகிறான்.
வௌவால் வீட்டுக்கு வௌவால் வந்தால் நீயும் தொங்கு, நானும் தொங்கு.
வௌவி அணில் தொத்துகிறது போல.
வௌவிய கருமம் எண்ணித்துணி.

முற்றும்